உ
கணபதி துணை.

இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான்
சர்க்கரைப் புலவர்
குமாரர்
சாந்துப்புலவரியற்றிய
குன்றக்குடியென வழங்கும்

# மயூரகிரிக்கோவை

இஃது
பல கனவான்களுடைய விருப்பத்தின்படி
இந்நூலாசிரியர் மரபிலுதித்தவராகிய
கோடகுடிச் சேதுப்புலவர் குமாரரும்,

ஆலங்காடு
ஸ்ரீமத். ராம. சிதம்பர செட்டியாரவர்கள்
மாணாக்கருளொருவரும்

மன்னார்குடிப் பின்ட்லே காலேஜ்
தலைமைத் தமிழ்ப் பண்டிதருமாகிய
சர்க்கரை இராமசாமிப் புலவரால்
அரும்பதவுரை யியற்றித்

திருவாவடுதுறை யாதீன வித்துவானும்
மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் சைவநூற்
பரிசோதகருமாகிய
ஸ்ரீமத். சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்களாற்
பார்வையிடப்பெற்றுத்

தஞ்சாவூர்
கல்யாணசுந்தர முத்திராசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.



இதன் விலை ரூ. 1




1908.
(Copy Right.)

# PREFACE.



Few of the educated classes are unaware that a valuable mine of Tamil literature lies buried in manuscripts which by their age are fast approaching dissolution. The value of printing and publishing such manuscripts cannot be overestimated. As a pioneer in this direction followed only by straggling instances here and there comes Mahamahopadyaya V. Saminatha Aiyar Avergal the talented Tamil Scholar of the day. One should admit that it is high time that more people should follow his noble example if any lasting good is to be done to the Tamil country. It is gratifying to note that Mr. Sarkarai Ramasawmy Pulavar, the senior Tamil Pandit of the Findlay College, Mannargudi, Tanjore District, has come forward to publish the present work with an invaluable annotation. No one can deny that the Pulavar's work in this respect is worthy of emulation by others.

2. The author of this work—Mayuragiri Kovai is Santhu Pulavar, a well known Poetical genius, who lived in the latter part of the 18th century. He was the illustrious son of Sarkarai Pulavar, the famous court Poet of the Raja of Ramnad and appears to have enjoyed rare privileges under the renowned Ruler, Marutha Pandyan, at Sivaganga of the Madura District, at whose request this beautiful poem was composed in honor of Sree Subramaniaswami at Mayuragiri, otherwise known as Kundrakudi. The work is a good specimen of the poet's versatile genius and is next to none of its kind in diction and style except to Tirukkovaiar of Manickavasagar.

It consists of 535 stanzas replete with figurative language and the readers will be struck with admiration at the masterly way in which the author has conformed the work to the niceties of the Rules of Agapporul Ilakkanam. To those who have a turn to the study of Tamil literature the work will afford ample food for thought.

3. The right to publish this interesting work with useful annotation has been and is rightly reserved to this gifted young Pandit who is a lineal descendant of the author. The Pandit has combined in his poetical talent, musical taste, polished manners, sweet temper and true piety, and does credit to the family of poets to which he belongs. The publication of the work is a momentous task for which the Pandit deserves much praise. The readers will doubtless be able to realize the amount of thought and enthusiastic labour which the Pandit has bestowed upon the work. The annotations have been approved and appreciated by eminent Scholars of the Tamil Sangam.

E. SINGARAVELU MUDALIAR,
Stationary Sub-Magistrate,
*Mannargudi.*

உ

கணபதி துணை.

# முகவுரை



## குருவணக்கம்.



வெண்பா.

ஐங்கரனை யாறுதலை யானவனை யாறிரண்டு
செங்கரனை யன்பிற் றியானித்தா—றுங்கருணை
காட்டியெமை யாளாலங் காட்டுச் சிதம்பரமால்
தாட்டுணையைச் சென்னிமுடித் தாம்.

கோவையென்பது தமிழ்ப்பாஷைக்குரிய தொண்ணூற்றாறு வகைப்பிரபந்தங்களுள் ஒன்று. காட்சி முதலிய துறைகளை நிரல்படக்கோக்கப் பெற்றதென்பதிம் மொழியின் பொருள். இது ஐந்து இலக்கணங்களுள் பொருட் பகுதியாகிய அகப்பொருளிலக்கணத்திற் கிலக்கியமாக வமைந்துள்ளது. குறிஞ்சி முதலிய வைந்திணைக்குமுரியவாகப் பண்டைப்பெரியோர்கள் விதித்தமுதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள், முகமாகத் தலைவன் றலைவிகளுடைய வொழுக்கங்களை யுலகவழக்குஞ் செய்யுள் வழக்கமென்னுமிரண்டிக்குமியைய நன்றாகத் தெரிவிப்பது. இதிலுள்ள வகப்பொருளமைதிகள் தொல்காப்பியம், இறையனாரகப்பொருள், இலக்கணவிளக்க முதலிய நூல்களிற் பரக்கக் காணலாகும்.

மயூரகிரிக்கோவை யென்பது மயூரகிரியிற் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஆறுமுகக் கடவுள் மீது எனது முன்னோர்களுள் ஒருவரும், இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான் சர்க்கரைப் புலவர் குமாரருமாகிய சிறுகம்பையூர்ச் சாந்துப்புலவரியற்றியது.

மயூரகிரி யென்பது பாண்டிவள நாட்டிலே தேவாரம் பெற்ற தலங்களுள் திருப்புத்தூருக்குச் சமீபத்திலேயுள்ள ஸ்ரீ சுப்பிர

மணியக்கடவுளுக்குரிய வொரு முக்கிய தலமாகும். இது குன்றக்குடியென்றும் வழங்கும். அரசவனம், மயூரபுரம், கண்ணபுரம் என்னும் பெயர்களுமிதற்குண்டு. இதற்கு வடமொழி தென் மொழியிரண்டிலும் புராணங்களிருக்கின்றன.

தீர்த்தம்—சரவணப்பொய்கை. இதன் வடகீழ்த்திசையில் மயிலாலும், குமாரக் கடவுளாலும் பூசிக்கப்பெற்ற சிவாலய மொன்றுண்டு.

தடாகம்—மருதாபுரி, வையாபுரி முதலியனவாம்.

நதி—தேனாறு. இது அகத்தியமுனிவர் அபிடேகஞ்செய்த பெருக்கோடியதாலிப்பெயர் பெற்றதெனப் புராணங் கூறும்.

வழிபாடுசெய்து பேறுபெற்றவர்கள்—மயில், கிருஷ்ணன், அகத்தியர், விஸ்வாமித்திரர், வசிட்டர், பிரமதேவன், கருடன், இந்திரன், சூரியன், மன்மதன், பாண்டவர், நாரதர், முதலியோர்.

இந்நூலில் ருஙஅ செய்யுட்களுள்ளன. மற்றைக்கோவைகளில் ஏகதேசத்திற் காணப்பெறும் சொன்னயம், பொருணயம், ஓசையினிமை, சிலேடை, உள்ளுறையுவமை, முரண், யமகம், திரிபு, மடக்குமுதலியனவும், தொனியும், பலவகையான சித்திர கவிகளும், அரிய பெரிய பழைய விலக்கிய விலக்கண நூற்பிரயோகங்களும், அரியதுறைகளும் நிரம்பக்காணலாகும்.

அன்றியும் பாட்டுடைத் தலைவராகிய குமாரக்கடவுள் தம்மைப் பூசித்த அகத்தியராதிய மெய்த்தவர்கட்கருளிய பெருங்கருணைத் திறங்களையும், புராணேதிகாசங்களிலுள்ள வினிய சரிதங்களையும், உண்மை நாயன்மார் வரலாறுகளையும், வேதாந்த சித்தாந்த சாத்திரக்கருத்துக்களையும், பல நீதிகளையும், அக்காலத்துச் சிவகங்கையில் அரசராக விருந்த மருது பாண்டியன் முதலிய மெய்யன்பர்களுடைய திருத்தொண்டினருமை பெருமைகளையும் அங்கங்கேயெடுத்துக்கூறுந்தகைமை மிகவும் பாராட்டற்குரியதேயாம்.

இந்நூல் எங்களுக்குப் புராதனமான சிறுகம்பையூர் ஓரியூர் முதலானவூர்களுக்குச் சில வருடங்களுக்கு முன்யான் ஏடுதேடிப்போயிருந்தபோது ஓரியூரிலிப்போது இருக்கும் மகா-௱-௱-ஸ்ரீ சர்க்கரை முத்தையாப் புலவரவர்கள் வீட்டிலிருந்து ஏட்டுப்பிரதியொன்று கிடைத்தது. அதை வைத்துப் படித்து வருங்காலத்தில் ஒவ்வொரு செய்யுளும் நிரம்பக்கடினமாய், ஆழ்ந்தபொருளும், அரிய கற்பனையும், பிற்பகுதியிற் சில செய்யுள்களுக்குமாத்திரம் அரும்பதக் குறிப்பும் அமையப்பெற்றிருந்தது. வேறுபிரதிகள் கிடைத்தாற் பரிசோதித்து அச்சிடுவதற்கு அநுகூலமாயிருக்குமென்று பலவிடங்களிலும் தேடியும் வேறு பிரதியொன்றேனும் கிடைக்கவில்லை.

அப்பால் இம்மட்டிற் கிடைத்ததும் சண்முகக் கடவுள் திருவருட் செயலேயென்று தேறி இந்நூலினருமையையும் எனதறிவின் சிறுமையையுங் கருதி, யுள்ளதைக்கொண்டே நீடித்த அநுபவமும் நிறைந்த கல்வியுமுடையவர்களால் அரும்பதவுரையெழுதுவித்து அச்சிடவேண்டிப் பண்டைத்தமிழ்ப்புலவர்கள் வீட்டுமச்சுவாய்க்கிடந்த சங்கத் தமிழ் நூல்களையெல்லாம் அச்சுவாய்ப்புகுத்தவந்தவதரித்த மஹானுபாவரும், பழயதமிழ்நூலாராய்ச்சியில்லாத நாளுண்டேலதைத்தாம் பிறவாத நாளாகக் கருதுஞ்சற்குணக்குன்றும், சென்னைப் பிரஸிடென்ஸிக் காலேஜ் தமிழாசிரியருமாகிய பிர்ம்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர் உ. வே. சாமிநாதையரவர்கள் சமூகத்திற் சேர்ப்பித்தேன். அவர்கள் பிரதி செய்து நூல்முற்றிலும்படித்துப்பார்த்து இதைப்போற்றமிழில் ஒரு கோவையில்லையென்றும், நிரம்ப வருமையாயிருக்கிறதென்றும், அச்சிடவேண்டுவது அவசியமென்றும், ஆனாற்றமக்கு அவகாசமின்மையாற் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தலைமை தமிழ்ப்பண்டிதராகிய பின்னத்தூர் ஸ்ரீமத் அ. நாராயணசாமிஐயரவர்களுடனிருந்து அரும்பதவுரை யெழுதி அச்சிற் பதிப்பித்து விடுகவென்றுங் கட்டளையிட்டார்கள். நாங்களிருவருமொருங்கிருந்து அரும்பதவுரை யெழுதக்கூடாமையால் நாராயணசாமி ஐயரவர்கள் தாமே யங்ஙனஞ்செய்வதாயேட்டுப் பிரதி முதலியவைகளையெடுத்துக்கொண்டுபோய் மூலபாடத்தை மாத்திரம் அச்சிற்

பதிப்பித்து விட்டுச் சாவகாசமின்மையால் அரும்பதவுரை யெழுதக்கூடவில்லை யென்று மீட்டும் பிரதிகளை யென்னிடத்தே தந்துவிட்டார்கள்.

பின்பு இந்நூலை அரும்பதவுரையின்றி அச்சிடுவது பெரிதும் பயன்படாதென்று பல நண்பர்கள் சொன்னமையானும் தவமும், பொறையும், தயையும், வாய்மையும், சிவபெருமானிரு திருவடித் தொண்டும், கல்வியும், செல்வமும், கவின்குடிப்பிறப்பும், பல்விதமான நல்லறச்செயல்களும், கொடையு நடையு நற்குணங்களும் பிறவும் உடைய சிவபூஜாதுரந்தரரும், தமக்கென வாழாப்பிறர்க்குரியாளரும், இன்னாவென்றெனை யறியாதிருந்து யினியவைகூறியிருக்கவீடும், அன்றுதி பலபொருளுமருந் தமிழ் விற்பனமுமளித்த வள்ளலுமாகிய, ஆலங்காடி ஸ்ரீமத். ராம. சிதம்பரசெட்டியாரவர்கள் இன்னுங்காலந்தாமதஞ்செய்யாது நீயே அரும்பதவுரையெழுதி அச்சிடுவாயாகவென்று பணித்தமையானும், "வேண்டுவார் வேண்டுவதேயீவான் கண்டாய்" என்னும் அருமைத்திருவாக்கின்படி மெய்யன்பர்களாகிய செட்டியாரவர்கள் விரும்பியாங்குச் சண்முகக்கடவுள் திருவருள் புரிவாரெனத் துணிந்து இடையிடையே நேர்ந்த ஐயங்களை எனக்குக்கிடைத்த விடுமுறை நாட்களில் மனமொத்த நண்பர்களாகிய வித்துவான்கள் பாற்சென்று தெளிந்து ஒவ்வொரு செய்யுளினுடைய நுட்பங்களையும், பிறவிசேடங்களையும் எழுதப்புகின் மிகவும் விரியுமென்றஞ்சிப் பெரும்பாலும் அரும்பதவுரையும், சில கடினமான பாடல்களுக்குக் கருத்துரையும், இன்றியமையாத விடங்களில் மாத்திரம் விசேடவுரையுமாக எழுதலாயினேன். அங்ஙனமெழுதும்போது இந்நூலின் பிற்பகுதியிற்கண்ட பழைய குறிப்புரைகள் பேருதவியாயிருந்தன.

அப்பாற் பின்னுஞ் சில பாடல்கள் தீராத சந்தேகமாகவே யிருந்தமையால் அச்சந்தேகங்களைத் தவிர்ப்பதுடன் எழுதிய அரும்பதவுரை முற்றிலும் சங்கத்துச்சான்றோர்களைப் பார்வையிடச்செய்த பின்னர் அச்சிற் பதிப்பிப்பதே நலமெனக் கருதிக் கடந்த டிசம்பர் மாதத்து விடுமுறைநாளில் மதுரைமாநகரை

யுடைந்து, அங்கு நம் செந்தமிழுலகம் செய்தவ வடிவமாய வந்தவதரித்த வள்ளலென்றுலகம் சந்ததமுங் கூறாநின்றதகுதருவனையு மாட்சிமை தங்கிய தருமப்பிரபுவும், பாலவனத்தம் ஜமீந்தாரும் தமிழ்ச்சங்கத்து அக்கிராசனாதிபதியுமாகிய ஸ்ரீமாந். பொ. பாண்டித்துரைத்தேவரவர்கள் சமுகஞ் சார்ந்து அவர்களுடைய வித்துவ சபையிற் சில பாடல்களுக்கு யானெழுதிய வுரையைப் படித்துக்காட்டினேன். கேட்ட பிரபு அவர்கள் பேரன்புடன் அங்கீகாரஞ் செய்து யான் சந்தேகமுற்ற பாடல்களிற் சில பாடல்களுக்குப் பொருத்தமாகப் பொருளுரைத்ததன்றித் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து வித்துவானும் மதுரைத்தமிழ்ச்சங்கத்துச் சைவநூற் பரிசோதகரும், எனது அருமைத்தமிழாசிரியருமாகிய சேற்றூர் ஸ்ரீமத். ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்களை யரும்பதவுரை முற்றிலும் பார்வையிட்டுக் கொடுக்கும்படி செய்து இந்தக்கோவையின் சொற்சுவை பொருட்சுவைகளைப் பாராட்டிச் செய்யுள் மாத்திரம் முன்னுதாகப்பதிப்பிக்கப்பட்டு விட்டமையால் ஒவ்வொரு செய்யுளுக்குங் கீழ்வுரையைப் பதிப்பிக்கக் கூடாமைக்கிரங்கி யிக்கோவையின் இரண்டாவது பதிப்பைத் தமிழ்ச்சங்கத்து முத்திராசாலையிலே பதிப்பித்துத் தருவாமென்னும் அமுதவாக்குமளித்தார்கள். கவிராயரவர்களும் பேரன்போடு செய்யுளுடனே அரும்பதவுரை முற்றிலும் பார்வையிட்டுப் பதிப்பிக்கும்படி எனக்கு அனுமதியளித்தபின் பதிப்பிக்கலாயிற்று. இப்பெருந்தகையாளர்கள், 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமுமாற்றலரிது.'

இவ்வரிய நூற்பதிப்பை, முற்கூறிய ஆலங்காடு ஸ்ரீமாந். ராம. சிதம்பரசெட்டியாரவர்கள் எனக்குச் செய்யாமற் செய்ததும், காலத்தினாற் செய்ததுமாகிய பெரிய நன்றி யெழுமையு மறக்கற்பாலதன்றுதலாலந் நன்றி யறிவிற் கறிகுறியாக்கவவர்கட்குரியதாக்குகின்றேன்.

இந்நூற்பதிப்பின் பொருட்டுப் பொருட்கொடையினாலும் மனம்வாக்குக்காயங்களினாலு முதவிபுரிந்துவந்த செந்தமிழ் அபிமானிகளாகிய பலகனவான்களும் பெருவாழ்வடையும்பொருட்

டுத்திருவருள் சுரக்கும்படி மயூரகிரியிற் கோயில்கொண்டெழுந் தருளியிருக்கும் குமாரக்கடவுளுடைய திருவடிகளைச்சிந்திப்பதுடன் அவர்கள்பால் மிகவும் நன்றியறிவுள்ளவனாகவிருக்கிறேன்.

இந்நூற்பதிப்பில் ஆங்காங்குக் காணப்படும் பிழைகளையும், அவற்றின் திருத்தங்களையும் தயைபுரிந்து கற்றுணர்ந்த விவேகிகள் அறிவிப்பார்களாயின் அவைகளை இரண்டாவது பதிப்பில் அவர்கள் பெயருடன் பிரசுரஞ்செய்வதுடன் அவ்வுதவியை ஒருபோதுமறவேன்.

இந்நூல் அரும்பதவுரை யெழுதுங் காலத்தும் பதிப்பிக்குங் காலத்தும் என் கூடவேயிருந்து உதவிசெய்துவந்த இளவலூர் பா. வேதநாயகம் பிள்ளையினுடைய நன்றி மிகவும் சிறந்தது.

இந்நூலை யிதுகாறும் பாதுகாத்துவைத்திருந்து தந்த சர்க்கரை முத்தையாப்புலவரவர்களிடத்தும், எனது முன்னோராலியற்றப்பெற்ற இந்நூலைப் பதிப்பிக்கும்படி செய்த நல்வினையின்பாலு மிகுந்த நன்றியறிவுடையேன்.

*வானவர்க ளுதநம வானவ வுயர்ந்திடு மயூரகிரி வாழ் [ருளுந்
ஞானநிறை வேதமமெய் ஞ்ஞானபலன் மெய்யடியர் நண்ணவ
தேனிமிர்க டம்பநம தேனிமிரும் வாயநம சீர்பெ றுசரக்
கானபவ னேநமகு காநம மலர்ந்துதிகழ் கண்ண நமவே.

கீலக வருடம் ஆனிமீ கருவை மன்னார்குடி. } இங்ஙனம், கோட்டகுடி .சே. சர்க்கரை இராமசாமிப்புலவன்.



* இது மயூரகிரி புராணத்துள்ளது.

உ

கணபதிதுணை.

# சாற்றுக்கவிகள்.

## பழய சிறப்புப்பாயிரம்.

செந்திரு மார்பன் மருதூர ராதிபன் செப்புகென்ன
மைந்தர்செல் வத்தொடு மாஞானம் வேண்டி மயூரகிரிப்
பைந்தமிழ்க் கோவையைப் பாடினன் சர்க்கரை பாலனெங்க
ளிந்திரன் சாந்து மகிபாலன் வாலக வீச்சுரனே.

சென்னை பிரஸிடென்ஸிக் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
மஹாமஹோபாத்தியாயர்

**ப்ரும்மஸ்ரீ உ. வெ. சாமிநாதையரவர்கள்**

இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தூமேவு சுருக்கனைப் பேர்க் கவியளித்த சாந்துகவி சொற்ற தூய
தேமேவு நீரமைம மயூரகிரிக் கோவைதனைத் நேர யாரும் [விர்
ஏமேவு குறிப்புரையோ டினிதச்சிற் பதிப்பித்தா னிலங்கு கேள்
பூமேவு நயசுகுண விராமசா மிப்பெயர்கொள் புலவன் றானே.

---

பாலவனத்தம் ஜமீந்தாரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து
அக்கிராசனாதிபதியுமாகிய இராமநாதபுரம் மாகாணமைதங்கிய

**ஸ்ரீமாந். பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள்**

இயற்றியது.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வரிக்கோவை வடமூலையார் மயல்கொண்மரு
தேந்திரனுண் மகிழப் பாவா
னரிக்கோவை யகத்தமிழ்தா மெனச்சாந்துப்
புலவன்முன நவின்மயூர
கிரிக்கோவை யரியபதப் பொருடுலக்கி
யச்சினுறக் கெழுமு வித்தான்
கரிக்கோவை யருணமன்னர் குடிராம
சாமியெனுங் கவிவல் லானே.

இராமநாதபுரம் சேதுசமஸ்தான வித்துவான்

## ப்ரும்மஸ்ரீ ரா. இராகவையங்காரவர்களியற்றிய

### நேரிசையாசிரியப்பா.

திருவு மறிவும் பெருகப் படைத்துப்
புகழு மறனுந் திகழ வளர்த்த
வொடியாக் கொற்றத்து முடியார் வேந்தரு
ளமிழ்தினும் வீறு தமிழுடை யாரென
வான்றோய் நல்லிசைச் சான்றோர் பராஅய
பழுதில் கொள்கை வழுதிய ரவைக்கண்
வடுவறு புலமைக் கடுவனி லெயின
னாதி யாகிய கோதில் பெரிய
ரன்பிற் புகன்ற வின்பப் பரிபாட்
டொன்றுகடை யிட்ட துன்று முப்பஃது
தன்பே ரணியா முன்பே யணிந்து
நிலன்வழுத் துற்ற புலனழுக் கற்ற
தோலா வாய்மை மேலாங் கீரன்
றேவரும் பருக மேவர யாத்த
வாற்றுப் படைப்பாட் டாற்றப் புனைந்துந்
தீந்தமிழ்த் தொடைய லேந்தும் வேட்கை
தீரா வுள்ளமொடு பேரா நின்று
காடுறை வாழ்க்கை வேடுவ னாகிச்
செய்யா கூறாப் பொய்யா மொழிவரு
வகுந்து நடந்து புகுந்தெதிர் பெய்து
மட்டி றன்பெயர் முட்டை யென்று
கோழியொடு பார்ப்பை வாழிய பாடலே
னென்றவன் வாய்மை யொன்றிய வாயா
னகப்பொருட் பகுதியின் மிகப்பொருள் பயக்கும்
பொன்போலு மென்னும் பொன்போ லொள்ளிய
வின்றமிழ்ப் பனுவ லொன்றுகொண் டுவந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பின்
வெயினுழக மறியாக் குயின்மிகு பூம்பொழின்
மயின்மலை யமர்ந்த வயில்வேன் முருகற்

## சாற்றுக்கவிகள்.

அகத்திணை யன்பி னகத்திணைத் துறைபெரு
முற்றப் பிறக்கிய குற்றமில் கலித்துறை
ஐந்நூ றடுத்த வைந்துறை முப்பஃ
தின்புறு பாட்டு நன்பொருட் கோவை
காந்தளிற் கடப்பந் தேந்தார்ப் பிணையலிற்
பொலிவுறச் சாத்தி மலிபுகழ் சூடினன்
றென்புலம் புரிந்த மன்பெருந் தவத்தாற்
செந்தமிழ் வாணருக் கைந்தரு வாகித்
திசெலாங் கமழுஞ் சேதுநா டாண்ட
பண்டைக் காவலர் தண்டமிழ்ப் பேரவைப்
பாற்கட லனைய நாற்கடற் சருக்கரைப்
புலவர் மரபி னிலைவுறு கல்விச்
சீனையொடு மனனுந் நிறைஇய வியல்பிற்
புவிவரு சாந்துக் கவிஞர்கோ மகனே
யாங்கவ னியற்றிய பாங்குறு கோவையை
மற்றவன் கவித்திறந் தெற்றெனத் தெரிய
நெறிப்பட வினியதோர் குறிப்புரை யோடு
மாண்வரு யாவருங் காண்வர முன்னி
யெழுதா வெழுத்தின் வழுவாது வைத்தன
னத்தகு சருக்கரை மெத்திய தொல்குடி
விளங்க வெய்திய களங்கமில் குரிசி
லுயர்குடிக் கொத்த மயர்வறு கல்வியு
மதியு மொழுக்கமு நிதியென வுடையோன்
செருக்கரைக் கணமுஞ் சேராச்
சருக்கரை யிராம சாமிநா வலனே.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் சேதுபதி செந்தமிழ்க் கலாசாலைத்
தலைமைத் தமிழாசிரியர்

**பிரம்மஸ்ரீ திரு. நாராயணையங்காரவர்களியற்றியது.**

நேரிசை வெண்பா.

மயூரகிரிக் கோவை வழுத்தபவச் சிட்டான்
மயூரகிரிக் கோவை வழுத்தப்—பயோதம்
புரை ராம சாமிகவி போற்கலைதேர் சொற்சர்க்
கரைராம சாமி கவி.

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் சேதுபதி செந்தமிழ்க் கலாசாலைத்
தமிழாசிரியர்

## பிர்ம்மஸ்ரீ சுந்தரே[redacted]ரையரவர்கள் இயற்றியது.

கட்டளைக் கலித்துறை.

பாவைத் தெளிசர்க் கரைநல்கு சாந்துவிற் பன்னன்சொன்ன
மாவைத் தொளிர்தண் மலர்த்தடஞ் சூழு மயூரகிரிக்
கோவைத் தமிழையா ராய்ந்தச் சிபற்றிக் கொடுத்தனன்செந்
நாவைப் பெறுசர்க் கரைராம சாமி நயகுணனே

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ் பத்திராசிரியர்

## பிர்ம்மஸ்ரீ மு. இராகவையங்காரவர்களியற்றியது.

கட்டளைக் கலித்துறை.

படிக்கோரு நூலிது வேயெனச் சாந்து பகர்ந்தகுன்றக்
குடிக்கோவை யின்பொரு ளாய்ந்தச் சியற்றிக் கொடுத்தனனால்
மடிக்கோதி லான்சர்க் கரைகுல தீபன் மகேசனிணை
யடிக்கோ கனகம் பணிராம சாமி யருங்கவியே.

---

சேற்றூர்ச்சமஸ்தான வித்துவானும், மதுரைத் தமிழ்ச்சங்கம்
நூற்பரிசோதகருமாகிய

## மகா-ள-ள-ஸ்ரீ மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள் இயற்றியது.

நன்பரையா முமைபங்கன் றனையகன்று
நாவலூர் நம்பிக் காக
முன்பரையா மப்பொழுதிற் பரவையின்பாற்
சென்றுசந்து மொழிந்த மூர்த்தி
யென்பரையா னனத்தொடதோ முகத்தினிலு
முற்றவிழி யினில்வந் தென்று
மென்பரையாண் டருளுமெந்தை மயூரகிரிக்
கோவையா ராய்ச்சி செய்து.
எழுதுவோ ரானோர்ந்த வழுக்களையெல் லாங்களைந்தச்
சியற்றி யீந்தான்
முழுதுமுணர் நூலாசிரியன் வழித்தோன் றலாய்
மூன்று நூலும்

பழுதுறுமை யந்திரிபோ டறியாமை யறக்கற்றுப்
பரமன் பாதந்
தொழுதுபயன் பெற்றசருக்கராம சாமிகவிச்
சுருணை மாலே.

சேற்றூர்ச்சமஸ்தான வித்துவானும் மதுரைத்தமிழ்ச்சங்கத்துப்
புலவரும் விவேகபானுப் பத்திராசிரியருமாகிய

**மகா-௱-௱-ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்கள்**

இயற்றியது.

**கட்டளைக் கலித்துறை.**

மன்னுமயூர கிரிக்கோவை நூண்பொருண் மாட்சிமைதேர்ந்
துன்னும் புலவ ருவப்புற வச்சிட் டுதவினனே
மின்னுஞ்சொல் சொல்லெனக் கேட்டார்ப் பிணிக்கு மினியகவி
பன்னுஞ் சருக்கரை மால்ராம சாமிநற் பாவலனே.

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தலைமைத் தமிழாசிரியர்

**பிரம்மஸ்ரீ கா. கோபாலாசாரியாரவர்களியற்றியது.**

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தேமணக்கு மயூரகிரிக் கோவையெனுந் திகழ்பனுவலைச்
செவ்வே யோளிற்
பாமணக்குந் தமிழினணிந் தனன்சாந்துப் புலவனதன்
பண்பை யாய்ந்து
நாமணக்குங் கலைஞர்நயந் தின்புறவே விளக்கியச்சி
னாலகி னனம்
பூமணக்கும் புகழ்கொள்சருக் கரைராம சாமியெனும்
புலமை யோனே.

சிங்கவனம் வித்துவானும், திருவாரூர் போர்டு ஹைஸ்கூல்
உபாத்தியாயருமாகிய

**பிரம்மஸ்ரீ சுந்தரேச பாரதியாரவர்கள். இயற்றியது.**

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

மருக்கமையில் வனதுகம ழுயர்கடுக்கை யுடன்குழைந்த
மணமொன் றில்லா

பெருக்கமா யுடனணியு மெம்பிரான் கங்கைகுலத்
தெரிவேல்வே ளாண்மை
யருக்கனையன் சேதுபதி சமத்தானப் புலவன்பல்
கலையு மாய்ந்த
சருக்கரையென் றமிழ்ப்புலவன் புரிந்ததவப் பயனினைவ
தாரஞ் செய்தோன். (க)

ஆன்றசாந் துப்புலவன் மயிற்கிரிவாழ் முருகவேட்
கன்பு கூரத்
தோன்றுதுறை யகப்பொருளுக் கிலக்கியமாய்ப் புனைந்தணி
துகடீர் கோவை [ந்த
சான்றவன்றோர் நலமோங்க வவர்வழியி னுதயஞ்செ
யிராம சாமி
வான்றகுறிப் புரையுடனச் சிடுவித்தா னிவன்பெருமை
யியம்ப லாமோ. (உ)

---

கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

## பிரம்மஸ்ரீ பின்னத்தூர்

## அ. நாராயணசாமி ஐயரவர்கள் இயற்றியது.

கட்டளைக் கலித்துறை.

மாவைப் பிளந்தவை வேலுடை யான்றன் மயூரகிரிக்
கோவைப் பனுவலச் சிட்டளித் தான்குறிப் போடதுசொல்
காவைப் பொருகின்ற சாந்து கவிசன் மரபிற்கலைப்
பாவைக்கு நாத்தந்த மால்ராம சாமிப் பருணிதனே.

---

காரைக்குடி மகா-ா-ா-ஸ்ரீ

## ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்கள்

இயற்றியது.

மாமேவு மணிமார்பன் மலர்மேவு மயன்முதற்சீ
வரைவாழ் விப்பான்
பூமேவு மலைகளெலாம் புகழ்மேவு மயின்மலைவாழ்
புனித னெங்கோன்

ஓமேவு பொருளிதென வுமைமேவு மொருபாகற்
குபதேசித்தோன்
தேமேவு கடப்பந்தார்த் திரண்மேவு புயாசலவேள்
செம்பொற் றாளில்
கவிநயமுஞ் சொன்னயமுங் கருதுபல பொருணயமுங்
காசிலாத
கவிநயமு முத்திகளுங் காட்டுமத முவமணி
களுமேற் கொண்முற்
கவிநயமுங் கோத்தலினக் காரணத்தாங் கோவையெனக்
கலைமுற் றோர்ந்த
கவிநயஞ்சால் கமகர்முதற் கவிஞரெலாங் கொண்டாடு
கனமுற் றிருக்க.

வேறு.

புணையெலா நிறைந்து திகழ்மயூ ரகிரிக் கோவையென்
றொருமணி மாலை,
மணமுறப் புனைந்தான் பெரிது மதுரம வயக்குநற்
புலவர்கோன் மைந்தன்
அணிபுகழ்ச் சாந்துப் புலவனீண் டதனை யருப்பற
வுரைவிரித் தளித்தான்
தணிவிலம் மருமான் சருக்கரை ராம சாமியாம்
புலவர்கே சரியே.



உ

சிவமயம்.

கணபதிதுணை.

# * நூலாசிரியர் வரலாறு.

---

செந்திரு மார்பன் மருதுந ராதிபன் செப்புகென்ன
மைந்தர்செல் வத்தொடு மாஞானம் வேண்டி மயூரகிரிப்
பைந்தமிழ்க் கோவையைப் பாடினன் சர்க்கரைப் பாலனெங்க
ளிந்திரன் சாந்து மகிபால வாலக வீச்சுரனே.

என்னுஞ்நூலின் பழைய சிறப்புப்பாயிரச்செய்யுளால் மருதுபாண்டியன் வேண்டுகோளின்படி சர்க்கரைப்புலவர் குமாரர் சாந்துப்புலவரென்னுங் குழந்தைக் கவிராசரிந் நூலியற்றியதாகத் தெரிகிறது.

இவர், பாண்டிவளநாட்டில் தேவாரம் பெற்ற தலங்களுள் திருப்புனவாயிலுக்கு மேற்கில் மூன்று கடிகை தூரத்திலுள்ள சிறுகம்பையூரிலிருந்த வேளாளகுலதிலகரும், இராமநாதபுரஞ் சமஸ்தான வித்துவசிகாமணியாய் விளங்கியவருமாகிய சர்க்கரைப்புலவருடைய குமாரராவார். இவர் தம்பிமார் சீனிச்சர்க்கரைப்புலவர், சீனிப்புலவர், முத்துமுருகப்புலவர் முதலானவர் என்ப.

இவர் பிறந்த வருடம் இன்னதென்று தெரியவில்லை. ஆனாலும், இந்தக்கோவையினேட்டுப் பிரதியினீற்றில்[கி. பி. 1778=] காலயுக்தி௵ தை௴ ௨௭௳ சுக்கிரவாரநாளில் மயூரகிரிக்கோவை பாடி யரங்கேற்றிய

* இது 1908௵ மேமீ 25௳ மதுரைத்தமிழ்ச் சங்கத்து ஏழாம் வருஷோற்சவத்திற் கூடிய வித்துவசபையில் ஸ்ரீமாந். பொ. பாண்டித்துரைத்தேவரவர்கள் விருப்பத்தின்படி இக்கோவைச் செய்யுள் சிலவற்றுடன் படிக்கப்பட்டது. அப்போது அச்சங்கத்தினங்கத்தவரிலொருவராகிய சோழவந்தான் மஹாவித்வான் ஸ்ரீமத். அ. சண்முகம்பிள்ளையவர்கள் கூறிய வெண்பா.

கந்தனென்றா லென்னெஞ்சக் கல்லுருகு மின்னேன்வாழ்
சந்த மயூரகிரி தானென்றான்—முந்தின்பக்
கோவை யுளம்பிணிக்குங் கூறவற்றோ வம்மலையின்
கோவை யுளங் கொள்ளிற் குணம்.

றென்றெழுதியிருப்பதால், இற்றைக்கு ககO வருடங்கட்குமுன் இந்நூ லியற்றியதாக விளங்குகிறது.

இவர் சிறுபிராயமுதல் தமது பிதாவினிடத்தில் இலக்கண் விலக் கியங்களை ஐயந்திரிபறக்கற்றுவருங் காலத்தில், கி. பி 1780ஷ முதல் 1801ஷ வரையில் சிவகங்கையை ஆண்டுவந்த பெருங்கொடையாளரும், இம்மைப்பயன் கருதாது மறுமைப்பயனேயே கருதியவள்ளலும், தம்மை யொழியத்தமவெனச்சார்ந்தவைகளையெல்லாம் அக்காலத்துத்தமிழகத்தி லுள்ள புலவர் பலர்க்குமுதவி யன்னோரை யொருங்குகூட்டி யன்னோரு டன் போதுபோக்குதலேயே பெரும்பயனாகக்கொண்ட அருங்கலைவிநோ தரும், அநேக தேவாலய பிரமாலய அன்னசத்திரங்கட்குப் பல்கிராமங் களை முற்றூட்டாகவளித்த தர்மப்பிரபுவும், ஐதராலியின் உதவியைக் கொண்டு நவாப்பின் படைகளை முறியடித்து வெற்றிமாலைகொண்ட ரண சூரருமாகிய மருதுபாண்டியரென்பவர் சேதுமார்க்கத்திலுள்ள கலிய நகரியில் அன்னசத்திரங் கட்டுவித்ததற்கு வந்திருந்ததைக்கேள்வியுற்ற சர்க் கரைப்புலவர், அந்த மருது பூபதியைப்பார்த்து வரவிரும்பி அட்டநாக பந்தமென்னுஞ் சித்திரகவி யொன்றெழுதிவைத்துவிட்டுத் தாம்சிவபூசை செய்யச் செல்வாராயினர். அச்சமயத்தில் ஆண்டிளிளையராயினும் அறி வின் முதியவராகிய சர்க்கரைப்புலவர் தமது தகப்பனார் எழுதிவைத்திருந்த அட்டநாகபந்தத்தைப் பார்த்துத் தாமும் அதனுள் அட்டநாகங்களைச் சிறியவடிவாய் வரைந்து ஒரு செய்யுளையுமெழுதி முன்னிருந்த இடத் தில் வைத்துப் போய்விட்டனர்.

பூசைமுடித்துப் போஜனஞ்செய்துவந்த புலவர் தமது பரிசனங்களு டன் சிவிகையூர்ந்து கலியநகரிக்குச்செல்லக் கவிராசர் வரவு கேட்ட புவிராசராகிய மருதுபூபதி அகங்களிகூர எதிர்சென்றழைத்துபசரிக்கப் புலவர் தன் ஞாபகத்திலிருந்த அட்டநாகபந்தச் செய்யுளைச் சொல்லிப் பொருள்கூறிப் பின் அக்கவிவரைந்த ஏட்டை அரசரிடங் கொடுக்க, ஏற்ற அரசர் படித்துப்பார்த்துப் பெருமகிழ்வுற்றுக் "கவிராசரே தாங் கள் எழுதிய அட்டநாகங்களுங்குட்டிபோட்டனவோ என்னை?" யென வினவியு தத்தாலறிந்த புலவர் குழந்தையைக்கேட்கவேண்டுமென்று மறுமொழி கூறக்கேட்ட அரசர், "அக்குழந்தை எங்குளது? யாருடையது?" என வினவியறிந்து அக்குழந்தையைப்பார்க்கவேண்டுமென்று உடனேகொண் டுவரும்படி சிவிகையைச் சிறுகம்பையூருக்கு அனுப்பிவிட்டனர். இராச திருஷ்டியாகுமேயென்று பயந்த புலவர் தாம் ஊருக்குப்போய்க் குழந் தையை யனுப்புவதாய்ப் பன்முறைகூறியும் பார்க்கவேண்டுமென்னும் அவாமேலிடலாற் புலவர் சொல்லை மறுத்துவிட்டனர் பாண்டியன்.

பின்னுஞ் சிறிது போதுக்குள் ஐந்து கடிகை தூரத்திலுள்ள சிறு கம்பையூரிலிருந்த குழந்தை பல்லக்கில் வந்து சேர்ந்தது. வரவறிந்த பூபதி குழந்தையைத் தழுவி, "இச்சிற்றுட்டி நாகம்மைமேற் பாட்டெழுதினவர் யாவர்?" என்றுகேட்க, "எழுதினவன் யானே" யென்று துடுக்காய்ச்சொல்லவே, பாண்டியன் அடங்காப் பெருமகிழ்வுற்று "முன்னே முளைத்த காதிலும்பின்னே முளைத்தகொம்பு வலியுடைத்து" என்னும் பழமொழிக்கிலக்காவாரிவரே யென்றுளமகிழ்வுற்றுக் "கவிராசரே, இன்று முதற்குழந்தை என்னருகில் இருக்கவேண்டு"மென்றுசொல்லிவிட்டனர். புலவர்சிறிது வருந்திச் சிறிது தேறி "அரசே குழந்தை இலக்கிய இலக்கணங்கள் படித்துவருகின்றமையால் ஒருவாறு முற்றியபின் நானே கொண்டுவந்து சமுகவித்வானாக விருக்கச்செய்து வருகின்றேன்" என வேண்டினர். "குழந்தை இப்பொழுதே பெரும் புலவர் தான். இன்னும் புலவராக்க விரும்பினால் தாங்களும் கூட வந்திருக்கலாகும்; அன்றேல், என்னருகிலுள்ள வித்துவான்களைக் கொண்டு படிப்பித்தலுமாகும்". என்று சொல்லிய பின்னரு மறுக்கற்கஞ்சிய புலவர் விசுவாமித்திர முனிவர் கையில் ஸ்ரீராமபிரானைப்பிடித்துக்கொடுத்த தசரதனைப்போற் கலக்கமுற்றுத் தம்மூர் போய்ச்சேர்ந்தனர். அப்போது சாந்துப்புலவருக்கு வயது பதினாறு.

அன்று முதற் சாந்துப் புலவரை யாவரும் அண்ணனைக் குழந்தையென்றழைப்பாராயினர். குழந்தை மருதுபாண்டியனுடைய புகழென்னுந் தொட்டிலிலாடி. அவைது சங்கப் புலவர்களென்னுஞ் செவிலியானும் கல்வியமுதூட்டப் பெற்றுக்கவிச் சிரோரத்தினமென்று பெரும்புலவர்களெல்லாங் கொண்டாடும்படி. பல சித்திரங்களுமமைய சிலேஷகவியாவதிலும். பிரசங்கஞ்செய்வதிலும், நாவன்மையுடையவராய் நடுநாயகமாய்ச் சிறந்து விளங்கியதன்றி. மருது பாண்டியனுக்குக் கண்ணுங் கவசமுமனையராய்ப் பிரதிநிதியாயுமிருந்து இராஜாங்க காரியங்களை நிருவகித்து வந்தனரென்றுங் கூறுப. இது சிறப்புப்பாயிரச் செய்யுளில். "எங்களிருந்திரன் சாந்துமகிபால வாலகவீச் சுரனே" என்பதனாலும் வலியுறுகின்றது.

இவரிங்ஙனமிருந்த காலத்திற் பல தமிழ்ப்புலவர்கள் மருதுபாண்டியன் அவையையலங்கரித்திருந்தனரென்பதும், அவர்களுள் இவர் கவிச்சிரோரத்தினமாய் விளங்கினரென்பதும், அப்புலவர் பலர்க்கும் பலகிராமங்களை முற்றூட்டாகவளித்து மருதுபூபதி பாதுகாத்து வந்தனரென்பதும். அக்காலத்துத் தம்பி பட்டியிலிருந்த வரும் பாலசரஸ்வதி எனப்பட்டப்பெயர்பெற்ற வருமாகிய முத்து வேலுக்கவிராசரியற்றிய கவிகளாலுமுணரலாகும்.

பின்வரும் கவிகளுள் முன்னையது அக்காலத்துச் சென்னபட்டணத்திருந்த அசாது நவாப்பினுடைய மந்திரியாகிய இராயசாமிபிள்ளைக்கு எழுதிய சீட்டுக்கவியும், பின்னையது முற்கவிக்கு நவாப்பிடஞ் சிவிகை முதலான விருதுகளுடன் பரிசு பெற்று மீண்டு ஊர்வந்தபின்பு நாலுவருடகாலந்தமது சபைக்குக்கவிராயர் வரவில்லை என்று சர்வமானியமாக அளித்திருந்த பூலாங்குண்டு என்னுங்கிராமத்தைத்தீர்வைக்கிராமமாக்கி விட்ட மருது பூபதியை மீட்டுங் கிராமமும் சிவிகை தாங்குபவர்கட்கு மானியமும் கொடுக்கவேண்டுமென்று பாடியதுமாகும். அவற்றுள்.

## சீட்டுக்கவி.

புனிதம்குருநாற்கவிவிலாசன்மெய்த்தவஞானபூரணன்மைவாதயப்
பொக்கிஷமதான * சங்கரலிங்க முனிவனிருபொற்பதந்தன்னை நித்தமும்
போற்றுசெய || முத்துவேலாயுதக்கவிராசபூபன்வரை விட்டசனது
பூமண்டலாதிபதியசாதுநபாபகம்பூரணமதாகமெச்சும்
புரவலகுபேரபாக்கியராமசாமிநற்புண்ணியனெதிர்ந்துகாண்க
புகழானநமதுசுபகரமெல்லாங்கேளுமற்புதமான தென்குழந்தா
புரியிலகுதுரைமுத்துவடுகநாதேந்த்ரன் மகிழ்புவனமுழுதும்புரக்கும்
பூபாலன்விசுவைவளர்மருதுபாண்டியராசசேர்சனுயர்சமுகமதனிற்
கனத்தைபெறுபஞ்சலக்ஷணவித்வஜனநலங்கமழும்வேதாந்தவாரி
கலைகண்டமுகில் ‡ சுப்ர மணியவிற்பனவச்சரனென்றுலகியலிலக்
கணவிலக்கியகற்பனைச்சொக்கநாதக்கவிச்சக்கரவர்த்தியென்றுங்
கருங்குளஞ் சங்கர நாராயணவதானி மருகன்சொக்கு பூபனென்றுங்
கல்விப்ரசங்கி சர்க்கரையுதவசந்துக்கவிச் சிரோரத்னமென்றும்
கலைமுற்றுவித்வசனர்துதிமுத் தமிழ்க்குமதிகாரியுபகாரிசகல
கலைநிபுணநாகலிங்கேந்த்ரனென்றும்மதுரகவியனந்தகவியென்றும்
கலைமதங்கொண்டிடுசவாதுக்கவிச்சரபகாம்பீர்ய துங்கனென்றும்

* இந்தச் சங்கரலிங்க முனிவரையே - இந்நூக் கோவையிலும், எ,சஎக-ம் பாடல்களிற் குறித்துரைக்கின்றனர்.

|| இந்த வேதாந்த சுப்பிரமணியபிள்ளையவர்களே மயூரகிரித்தலபுராணம் பாடியவர்கள்.

‡ இந்த முத்து வேலுக்கவிராயர் என்பவர் இற்றைக்கு 200 வருஷங்களுக்கு முன்னிருந்த சவ்வாதுப்புலவர் முதலியோரை யுமிப்பாட்டிற் குறித்திருப்பதால் தமது காலத்துக்கு முற்பட்டவர்களுட் சிலரையுங் கூறுவதாகத் தெரிகிறது.

மனமருசபைக்குண்மலையாமற்சபாசெனவழுத்தும்வெண்பாப்புலிக்கா
லுலனென்றுநீடுபேரன்னபுகாவிருமென்றும்வளரிலக்கணவிளக்க
மாசிலாமணியெனும்பண்டாரமென்றுநல்வாக்கியாவிடைநாதநா
வலமினென்றுதிலைநல்லூரிருடுசெவ்வூரில்வருகவிருவென்றுமீவாணி
மருவுகொன் றைக்குளந் தண்ணுவியாவென்றும்வளமிக்க கண்டுகொண்ட
மாணிக்கநாட்டினில்விளங்கியதமிழ்ச்சிகாமணியெனும்பெரியமுத்து
மாரியப்பக்கவிஞனென்றுநதிகுலசைவமணிதிருப்புத்தூர்வளர்
வாலசரஸ்வதியெனதுபாட்டனென்னுயர்முத்துமாரியப்பேந்திரகவிஞ
னெனவுமேபெயர்பெற்றுமுத்தமிழகத்தியற்கெண்மடங் கதிமாறே
ரிப்படிக்கவிவலவர்பதினையிரம்பேர்களிவர்கடனிலொருசிறியன்யா
னேதவிடம்விட்டுவெகுதூரதொலைதனில்வந்ததென்னினிவ்வுலகமதனில்
எமதுதுரைமேபராசராசர்கள்சிரோமணியெனத்துதித்தவர்கள் சமூகத்
திலகுபிரபந்தகவிவாலசரஸ்வதியுநாமெனவுநற் பெயர்செலுத்தி
யாவரும்புகழ்மேவசெயவிருதுபெற்றிடவும்பல்பாகவந்தேனலா
வில்லாமையால்வந்ததன்றுந்தமிழறிந்திபவலர்க்குதவுதாப
னென்னலாலுனைநாடிவந்தனன்கீர்த்திபூதலகர்த்தியருள்புரிகுவையே

## மருதுபாண்டியன் மீது பாடிய கவி.

குதலமதிலுயர்கின்றசிவகங்கையரசுநிலைகாட்டியகிரீடியான
ராஜேந்திராஜெயம்ஜெயம்விசயமேவுபகுமாராஜெயஞ்ஜெயங்கன் [மோ
குமருதுபாண்டியதுரையேஜெயஞ்ஜெயமெனதுநலமகிழ்ந்தினிதுகேண்
நாலுவருடஞ்சென்னபட்டணத்தசாதுநவாபுசாய்பவர்கள்சதிரில்*
நதிகுலாதிபன்ராமசாமிபூபதிதயவினாற்சிவிகைவெகுமதிகளும்
நலமுறப்பெற்றுமவிடத்துப்பிரபுகணேயநயமுற்றுமிவ்விடம்வர
நாடிமூட்டைக்காரர்சத்ரம்வந்தோமன்றிராத்திரிப்பெட்டியுடனே
நகைவகைவஸ்திரகளுள்ளதைப்பிராமணரிருவர்நலியாதுகைகொண்டுமப்
பாலவர்களும்போயினார்யான்விழித்ததைப்பார்த்தவுடன்மனதுகவலை
பாய்ந்தவர்களைத்தேடியுங்காண்கிலாமலிதுபகவசங்கற்பமென்று
பாதைகூடிப்புதுச்சேரிதனில்வந்துயான்பரிதபித்திடும்வேளையிற்
பசியுறுகுழந்தைகட்கனையெனவும்வாடியபயிர்க்குமழைமாரியெனவும்
பாவாணருக்குதவுகற்பகருபுதுவையம்பதியாதிபதிதன்செயம்
பதியமரசிம்மமகராஜசமூகஞ்சேதுபதிமற்றுமுள்ளவர்சாதம்
பரிவுற்றுமேவதிகவிருதுபெறுகங்கைகுலபாக்கியசிலாக்யதமிழ்விற்
பன்னன்முன்முளைவாரியன்னுவண்மேழிப்பதாகையன்பூமிபாலன்
வாலமதரூபசுபஞானந்தஞானசெயமாலென்னையுனதுசமூக
வாசற்பிரபந்தகவிவாலசரஸ்வதியென்றமாந்தரமேவாவழைத்து

மாதயவுசெய்ததாலவன்பிரீதியானுமொருமயிலிசைத்தானதுசொல்ல
மன்மிகமகிழ்ந்ததிகவெகுமதிகள்செய்திந்தவையுமதிலுமதுதுரைபேர்
வளரவேபுகழைமேன்மேலுமேதுதியுமெனவண்மைமொழிகூறவேயவ்
வரிசைபெற்றவனைமிகவாழ்த்தியேதில்லைநகர்வந்துபொன்னம்பலத்தில்
மருவுநடராசனைத்தெரிசனஞ்செய்துநல்வழிமார்க்கமெய்திவிரைவாய்
வளர்குன்றிசிரபுரத்தில்முத்துக்கிருஷ்ணமாலுருவிகொண்டுசிப்பாற்
கோலமிகுதென்றிருப்புத்தூரில்வந்துநங்குலதெய்வமாகியருளே
குடிகொண்ட காசிவயிரவமூர்த்தியிருபதங்கும்பிட்டிறைஞ்சியெனது
குருவானஞானசங்கரலிங்கமாமுனிக்குரிசிலைமனத்துள்வைத்துக்
கோதனகமலமலரும்வாவிதனிலேபசியகொட்டியுமலர்ந்ததெனயர்ன்
குணமுற்றதமிழ்வித்வசனருற்றவுயர்முக்யகொலுவினதுசமுகம்வந்து
குழவிதாய்முகநாடுமதுவெனக்கருணைபொழிகுளிர்முகமதனைநாடினேன்
குலவுசிவிகைக்கதிகவிருதுமும்பளமும்கொடுத்துமுன்னிலைமைபூலாங்
குண்டுவயலூருந்தந்துமென்றுமின்றுவளங்கொண்டெனைக்காத்தருள்வை
[யே.*

இத்தகைய மாட்சிமைபெற்றிருந்த மருதுதுரையருகில் இவர், மேற்கூறியவாறு அமரும் நாளிற் பூபதிக்கு இராஜபிளவை புறப்பட்டுப் பல மணி மந்திரமாதிய வைத்தியங்களாலநுகூலமாகாமல் மிகவும் வருந்துவாராயினர். அப்போது ஒரு முதியவர் பூபதியை நோக்கி, துரையே, கலியுகவரதராகிய சுப்பிரமணியக்கடவுளுடைய பக்தர்களால் விபூதி போடப் பெறின் அநுகூலமாமென்று, சொல்லக்கேட்ட பாண்டியன், அங்ஙனமாயின் அத்தகையார் யாவரென்று வினவ, நாட்டுக்கோட்டைச்செட்டிப் பிள்ளைகளுக்குக் குமாரக்கடவுள் பிரசன்னமுள்ள குலதெய்வமாகலால் அவர்களுள் எவரேனும் விபூதிபோடுவது நலமென் றுரைக்கவே, அத்தகைய செட்டியாரொருவரைக்கொண்டுவருகவென் றுத்தரவளித்தனர்.

உத்தரவுப்படி சென்ற ஏவலாளர் எருத்துமாட்டிலேற்றிய உப்பு வியாபாரியாய் எதிர்ப்பட்ட நாடன்செட்டியாரென்பவரை யழைத்து வந்து பாண்டியன் முன்புவிட, விடப்பட்ட செட்டியார் யாதாமோவென்று அச்சமுற்றயருங்குறிப்பறிந்த பாண்டியன் முகமன்கூறி, உமது குலதெய்வமாகிய சுப்பிரமணியக்கடவுளுக்குப் பிரார்த்தனை பண்ணி யாணிப்பிளவை

*இக்கவிகளை எனக்குதவியவர் சிவநேசச்செல்வர்களும் எனதன்பிற் கருங்கலமாகவுள்ளவர்களுமாகிய காரைக்குடி. ஸ்ரீமத். ராம. கு. ராம சொக்கலிங்கச் செட்டியாரவர்களிடத்திற் கல்விபயின் றவரும்இந்தமுத்து வேலுக்கவிராசர் பௌத்திரராகிய சொர்ணச்சாமிக் கவிராயர் குமாரரும் இப்போது தேவகோட்டையில் வசிப்பவருமாகியவேலுச்சாமிக்கவிராயர்.

யால் வருந்ாது பிழைக்கும வண்ணம் விபூதி யளிப்போகவென வேண் டச் செட்டியார் சிறிது மனந்தெளிந்து, இந்த மருதுபாண்டியனுக்கு அநுக்கிரகம்பண்ணி என்னை இவ்விடத்தினின்றும் விடுவிக்கவேண்டுஞ் சண்முகநாதாவெனச் சிந்தித்து விபூதி யுதவியபின்பு, பாண்டியன் அரு கிருந்தவரை நோக்கிச் செட்டியாருக்கு உண்டிமுதலியன வளித்து உப சரித்து வைத்திருங்களென்று கட்டளையிட்டவாறு உபசரிக்கப்பெற்றும் செட்டியார் அச்சமுடையராய்ச் சண்முகக் கடவுள்திருவடிகளைத்தியானி த்திருந்தனர்.

அப்பால் வெகு நாளாய் நித்திரையில்லாமல் வருந்திய பூபதி அன்றி ரவு துயிலும்போது பாலசந்நியாசி ஒருவர் மயிற்றோகையுடன் வந்து நிம்பிளவையைப் பிதுக்கி ஆணி யெடுத்து வாழையிலையில் வைத்து விட்டுப் பிளவைவாயில் விபூதியை வைத்ததாகக் கனவு கண்டு வெருண்டு எழுந்து பார்க்கும்போது அச்செயல் யாவும் நனவாகவே யிருக்கக்கண்டு மகிழ்ந்து வியந்து காடன்செட்டியாரைத் தமது அருகு வரவழைத்து "எனக்கு அப்பனே, அம்மையே, ஐயனும் நீயே" என்று புகழ்ந்து அன்று முதல் அண்ணன் என்று முறைபாராட்டிப் பேரன்புடன் தமதருகிற் சில நாளேனும் இருக்கும்படி வேண்டிக்கொண்டனர்.

அங்ஙனஞ் செட்டியாரிருக்கச் சில தினத்துள் தேகசௌக்கிய முற்ற பாண்டியன் செட்டியாரை நோக்கி, "அண்ணே நமது குலதெய்வ மாகிய குமாரக்கடவுள் இருக்குந் தலம்யாதென்று" வினவ, குன்றக்குடி என வழங்கும் மயூரகிரி யென்றறிந்த வேந்தர் செட்டியாருடன் தம்மைச் சார்ந்த பரிவாரங்கள் புடைசூழக் குன்றக்குடிக்குச் சென்று மலையடி வாரங்களில் அடர்ந்துள்ள காடுகளை வெட்டிச்சீர்செய்து மலைமேலேறிச் சண்முகக் கடவுளைத் தரிசனஞ் செய்து "இத்தகைய கருணாநிதியாகிய முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும் இத்தலம் இவ்வாறு பொலிவிழந் திருப்பதேன்?" எனப்பல சோதிடர்களை வரித்து வினவிச் சண்முகக்கட வுள் எழுந்தருளியிருக்கும் பீடத்தின் கீழிட்டிருக்கும் தகடு குப்புறக்கிடக் கிறதென்றறிந்து. பரிசோதனை செய்து, அங்ஙனந் தகடு கிடப்பக்கண் டெடுத்துச்செவ்வைசெய்து பிரதிட்டை பண்ணுவித்து மண்டபம், மதில், கோபுரமுதலான திருப்பணிகளும் பிறவும் புதுக்கிக் கும்பாபிடேகமுஞ் செய்வித்து, செம்பொன்மாரிமுதலிய கிராமங்களை அளித்தும் மருதா புரி என்னும் தடாகமுண்டாக்கியும், தென்னந்தோப்புக்கள் வைத்தும் வெள்ளிமயில் வாகனம், பொற்கவசம், திருத்தேர் முதலியன செய்வித் தும், தைப்பூசத் திருவிழாவாதிய சிறப்புக்களைப் பெருமைபெறச் செய் தும், சண்முகக்கடவுள் திருவடிக்கண் இடையறாத பேரன்புடன் அத்

தலத்தில் * அரண்மனையுங்கட்டுவித்து அங்கு அம்மருதுபூபதிகளின் வேண்டு கோளால் இக்கோவையைப்பாடினரென்ப.

இப்புலவர் மருதுபாண்டியன் சண்முகக்கடவுளுக்குச்செய்ததாகக் கூறிய திருப்பணி முதலான தருமங்களையும், புலவர் கட்குப் பெருங்கொடை வழங்கிய பெருமையையும், பலவண்ணமாகப் பாராட்டிக் கூறியிருக்கும் அருமை மிகவும் வியக்கற்பாலவாம். அவைகளைத் தனித்தனியே யெழுதப்புகின் விரியுமென்றஞ்சி எழுதிற்றிலேன். ஆனாலும், க. கஉ, சுக, அக, ககஅ, கரு௦. கருஅ, கசுசு. ககூஅ. உ௦௦, உஎங, ங௦ங, ச௦எ, ருஉச, ருருரு என்னும் இலக்கச் செய்யுள்களைப் படித்தால் நன்குணரலாகும்.

அன்றியும் அக்காலத்து மருதுபூபதியார் தருமகர்த்தாவாக்கப்பெற்றுத் திருவண்ணாமலை ஆதீனத்தைச் சார்ந்தவராயிருந்த சுக்கிலிங்கமுனிவருடைய ஈகை, அன்பு, முதலிய பெருமைகளை (எ; சஎக.)-ஆம் பாடல்களிலும் மருதுபூபதிக்குச் சகோதரபாத்தியமுள்ளவராகிய ‡ காடன்செட்டியாருடைய மண்டபப்படிச் சிறப்பை ச௦உ-ம் பாடலிலும் பாராட்டிக்கூறியிருக்கின்றனர். இவர் இக்கோவையில் ஏனைய நூல்களிற்காணப்பெறாத அரியதுறைகளையெல்லாம் அமைத்து. அதிவிசித்திரமான சொற்சுவை பொருட்சுவை நிரம்பிய யமகம். திரிபு. சிலேடை. அடிமடக்கு முதலிய கவிகளையும், கூட சதுக்கமுதலிய சித்திரகவிகளையும் அமைத்துப் பாடியிருப்பதுபோல் வேறெவரும் செய்திலரென்பது ஒருதலை.

இப்புலவருடைய பழய இலக்கிய விலக்கணமுதலான பலநூற் புலமையும், சொல்வன்மையும், கவித்திறனும், இந்நூலுள் எங்கேனுஞ் சில செய்யுட்களைப் படித்தறியும் விவேகிகளுக்கு நன்கு புலப்படும். அன்றியும் புராணங்களுள் ஆழ்ந்த பொருளும், அரியகற்பனைகளும் நிரம்பிய தணிகைப்புராணம்போலும் கோவைகளுள் இந்த மயூரகிரிக்கோவை யென்பது பல பிரபலவித்துவான்களுடைய கொள்கை.

இத்தகைய விந்தக்கோவையை யரங்கேற்றியபோது பல ஆடையாபரணவாகனாதி விருதுகளுடன் காளையார் கோவிலுக்கு அருகில் இப்போது புலவர்மருதன்குடி என வழங்குங் கிராமத்தையுஞ் சம்மானஞ் செய்யப்பெற்றனர் என்ப. இது அச்சமயத்திற்சொல்லியதாயறியப்படுகிற

---

* இந்த அரண்மனை இப்போது கீழவீதியிற் சிதைவுற்றிருக்கிறது.

‡ இந்தக்காடன் செட்டியார் மரபிலுதித்தவர்கள் இப்போது அரண்மனைப்பட்டியென்னும் ஆத்தன்குடியிலிருக்கும் செ. கா. வகையினராவர். இவர்களது அன்னசத்திரமும். மண்டபப்படியும் இன்றைக்கும் குறைவின்றி நடைபெற்று வருகின்றன. இவர்கள் சத்திரத்திற்கு மருதுபாண்டியனால் விடப்பட்ட கிராமங்களைத்தும் இப்பொழுது மதற்கேயுரித்தாகவுள்ளன.

"பொருதன்பி லார்மரு மன்னிய வாகை புயத்தணிந்த
விருதி னுயர்மூத் தமிழ்மாலை யுங்கொள்ள வேண்டுமென்றே
ஒருதன் குடியென் றுரையாமற் றுனு முயர்வுபெற
மருதன் குடிதனைத் தந்தான் மருது மகிபதியே" என்னுங் கட்டளைக்கலித்துறையானுந் தெரிகின்றது.

அன்றியுஞ் சிவகங்கைச் சமஸ்தானத்தில் சர்க்கரைப்புலவர் மகமை யென்றொன்றுமுளது. அது சேது சமஸ்தானத்தினின்றுஞ் சிவகங்கை பிரிவதற்கு முன் ஆதிரெட்டிமாலைச் சர்க்கரைப்புலவருக்குச் சேதுபதி களாற் கொடுக்கப்பட்டதோ, அல்லது இவரது தகப்பனாராகிய சர்க்க ரைப் புலவருக்கு மருது பூபதியாற் கொடுக்கப்பட்டதோ நன்கு புலப் படவில்லை.

இங்ஙனஞ் சம்மானிக்கப்பெற்ற சாந்துப்புலவர் தன்னையாதரித்த மருதுபூபதிக்குப் பகைவரிடையூறுண்டானபோது அவரைப் பிரியாத வராய், நேர்ந்த யுத்தங்களில் தாமும் ஒருதலைவராய் நின்று போர் புரிந்து, கி. பி. 1801வரு அக்டோபர்மீ 3உ மருதுதுரையானவர்பகை வர் கையிலகப்பட்டுப் போனவுடன் பிரிவாற்றாது துயரக்கடலின் மூழ் கினவராய்த் தனது ஊராகிய சிறுகம்பையூருக்குச் சென்று, பின்னொரு வாரத்துள் சிவபெருமான் திருவடி நிழலை அடைந்தனர். பின்னர் இவ ருடைய குமாரராகிய சர்க்கரைப் புலவரை இவர் பிதாவாகிய சர்க் கரைப்புலவர் சில காலம்படிப்பித்துப் பாதுகாத்தனர் என்று கூறுப.

இதனால் இப்புலவருடைய செய்ந்நன்றி மறவாமையென்னு முத்தம குணமும், தன்னையாதரித்த பிரபுவினிடத்தில் வைத்திருந்தபேரன்பும்.

§ "காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப்
பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றால்
மாணுயி ருடம்பில் வாழும் வாழ்க்கைபோ யொழிக வென்றே
யூணிடு மொருதாய் நீத்த பார்ப்பென வுளங்கு லைந்தார்."

என்று ஆன்றோர் வாக்குக் கிணங்க வுத்தமநண்பரைப் பிரிந்துயிர்வாழா மையென்னு நட்புத்திறனு நன்குணரலாகும்.

இவராலும், இவர் முன்னோராலும், பின்னோராலும் இயற்றப்பட்ட நூல்கள் பலவாகும். அவைகளுள் சிற்சிலவே இப்போது கிடைத்துள் ளன. அவற்றுள் இவரியற்றியதாக வேறொரு நூலும் காணக்கிடைக்க வில்லை. கிடைத்துள்ளவை. ஆதிரெட்டிமாலைச் சர்க்கரையரியற்றிய திருச்செந்தூர்க்கோவை, மேகாந்த சூடாமணிக்கு இயற்றிய சித்தாந்தம்

§ பிரபுலிங்கலீலை கோரக்கர்கதி ௯.

சார்பானவுமை; பிந்திய சர்க்கரைப்புலவரியற்றிய மழைலச்சதகம். மண்டல்கோட்டை வண்டுவனப் பெருமாளூசல், திருவாடானைச் சித்திர கவி மஞ்சரி; சீனிச்சர்க்கரைப்புலவரியற்றிய திருச்செந்தூர்ப்பரணி; சீனிப் புலவரியற்றிய துறைசைக்கலம்பகம்; சர்க்கரை அருணசலப்புலவரியற்றிய பொன்பேத்திச் செல்லியம்மை ஊசல் முதலியன; சர்க்கரை முத்துமுருகப்புலவரியற்றிய செங்காலபிள்ளை மடத்தில் நிலைபெற்றிருக்கும் * வைரவக்கடவுள் பதிக முதலியன; சர்க்கரை இராமசாமிப்புலவரியற்றிய மஞ்சக்குடி சொர்ணவல்லியம்மன் பதிகம் முதலியனவாம்.

இவையன்றிச் சீட்டுக்கவிகளாலும் பிறவாற்றாலும் பெயர் மாத்திரம் அறியப்படும் நூல்களாவன: சர்க்கரைப் புலவரியற்றிய திருப்புனவாயிற் புராணம். திருப்புனவாயிற் பள்ளு, புதுக்கோட்டை அரண்மனையிலுள்ள தக்ஷிணாமூர்த்தி மும்மணிக்கோவை. சிங்கவனம் ஜமீந்தார் மெய்க்கீன் கோபாலர் பேரிலியற்றிய நக்ஷத்திரமாலை, மங்கலக்குடிக் குறவஞ்சி. சர்க்கரை இராமசாமிப்புலவர், மஞ்சக்குடிப் பெருமாள்பிள்ளை பேரிலியற்றிய குறவஞ்சி முதலியனவாம். அன்றியிவர்கள் செய்த தனிச்செய்யுட்களுள்ளுஞ் சீட்டுக்கவிகளுள்ளும் எண்ணிறந்தன இறந்தொழிந்தன என்ப.

## முற்காலத்துப் பிரபல வித்துவான்களாகச் சர்க்கரைப் புலவர் இருவரிருந்தன ரென்பது

இந்த மயூரகிரிக்கோவையின் நேட்டுப்பிரதியில் 510-ம் பாடலின் கீழ் 'இறையோன் மகிழ்ச்சியைக்கண்டோர் கூற்று கவுரைத்தது காண்க. பிரிவுடன் படுதலைப் படர்க்கையாகவும் இறையோன் முன்னிலையாகவுங் கூறினருமுளர்; அவர் திருச்செந்தூர்க்கோவை பாடிய மூன்றாம் பாட்டனாகிய சர்க்கரைப் புலவரென்க, எனக்காணப்படுங் குறிப்புரையாலும்; இந்நூலிற் காணப்படுங் குறிப்புக்கள் ஆசிரியர் காலத்திலேயே எழுதியனவாக அறியப்படுவதாலும் இந்நூலாசிரியராகிய சாந்துப் புலவருக்குத் தகப்பனாராகிய சர்க்கரைப்புலவரேயன்றி யவர் மூன்றாம் பாட்டனா

---

* இப்பதிகம் பொன்பேத்திச்செங்காலவீரப்பெருமாள் பிள்ளைக்குப் புத்திரப்பேறளிக்க வேண்டிப்பாடியங்ஙனம் புரிவித்ததாகும்.

இது, வேதமென்பதுவேந்தவேதத்தின் விளங்குஞானக்கருத்துணின்றுடைய நாதனென்பது நான்கவியென்பது நானிலத்திலினிச் சமாயினாற் [வாய் கோயில்வீரப்பெருமாள் செங்காலனுக்குரியமைந்தர் கொடுத்தருள்செய்கு மாதவத்துச் செங்காலவேள் சத்ரத்தில் வளருமெங்கள் வைரவமூர்த்தியே, என்பதாலுமறிக.

கிய சர்க்கரைப்புலவரும் பெரும் புலவராக விருந்ததாகத் தோற்றுகிறது. இது பின்வருஞ்சிறப்புப்பாயிரச் செய்யுட்களாலும் பட்டயங்களாலும் வலியுறுகின்றது. அவை வருமாறு:

“மறைதருவேதாந்தசூளாமணியுட்பொருளை யுலகிலுள்ளோ
ருணரவுரைசெய்கவெனக்கடல்சூழ்
தரையரசன்சேதுபதியமாத்தியனுந்தாமோதரன்கங்காகுல
திலகன்றருதிபெறச்சாற்ற
வரையறுத்துச் சித்தாந்தப்பொருட்டிறனுந் தோன்றவுரைத்
தனன்றுறைசைநமச்சிவாய தேசிகன்றன்
பதசிவக்கொழுந்துதியருள்கல்விக்கடலைப்பருகுமு
கில் சர்க்கரை நற்பாவலவர் கோனே”.

இவ்வுரைப்பாயிரம் இராமநாதபுரத்திலிருக்கின்ற நெல்லையப்பபிள்ளையவர்கள் குமாரர் எம்மோடு கற்றோராகிய சாமிநாதபிள்ளையவர்கள் பாடியதென்று சர்க்கரைப்புலவரியற்றிய வேதாந்த சூடாமணியுரை யேட்டிற் காணப்படுவதால் சர்க்கரைப் புலவர் திருக்கைலாசபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்திற் சிவக்கொழுந்து தேசிகரிடத்தில் படித்தவரென்பதும், சேதுபதிகளுடைய மந்திரியாயிருந்த தாமோதரம்பிள்ளையவர்கள் விரும்பியபடி வேதாந்த சூளாமணிக்குச் சித்தாந்தப்பொருட்டிறங்களுந்தோன்ற உரை இயற்றினரென்பதுந் தெளிவாய் விளங்குகின்றது.

இந்தச் சிவக்கொழுந்துதேசிகர் திருவாவடுதுறையாதீனத்தில் எட்டாவதி குருமூர்த்தியாகிய மாசிலாமணி தேசிகர் பெரிய பட்டத்திலும், இலக்கணக்கொத்து நூலாசிரியராகிய சாமிநாததேசிகர் சங்காபிடேகஞ் செய்யப்பெற்றுத் திருநெல்வேலி ஈசானிய மடத்தில் மூன்றாவது சின்னப்பட்டத்திலுமிருந்தபொழுது. இரண்டாவது சின்னப்பட்டத்திலிருந்தவர் என்றுவிளங்குவதோடு, இப்பொழுது திருவாவடுதுறை யாதீனத்தில் எழுந்தருளியிருக்கும் மஹாசந்நிதானமாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ அம்பலவாண தேசிகரவர்கள் பதினெழாவது பட்டமாதலாற் பட்டம் ஒன்றுக்குக் குறைந்தபக்ஷம் இருபத்தைந்து வருடங்களாகக் கொண்டாலும், கி. பி. 1658-ல் இருந்தவராகவுந் தோற்றுகிறது. அன்றியும் சாமிநாததேசிகர் தாமியற்றிய இலக்கணக்கொத்தில் “என் கண் காணத்திருவாரூரிற்றிருக் கூட்டத்திற் றமிழ்க்கிலக்காகிய வைத்தியநாதன் இலக்கண விளக்கம் வகுத்துரை எழுதினன்” என்பதனாற் சாமிநாததேசிகர் காலத்தில் இருந்தவரென்றறியப் படுகிற திருவாரூர் வைத்தியநாததேசிகர் காலம் இருநூற்றைம்பது வருடங்களென்பது; இற்றைக்கு இருபது வருடங்கட்கு முன் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் இலக்கணவிளக்கப்பதிப்புரை

-யில் எழுதியிருப்பதை நோக்கும்பொழுது, இப்போது இருநூற்றெழுபது வருடங்களாகக் கருதப்படினும் திருவாவடுதுறையில் பதின்மூன்றாவது பட்டமாக எழுந்தருளியிருந்த அம்பலவாணதேசிகரிடத்து சைவசந்நியாசமும் சிவதீக்ஷையும் ஞானோபதேசமும் பெற்றவரும், திராவிட மஹாபாஷ்ய கர்த்தராகிய சிவஞானமுனிவர் மாணாக்கரிலொருவருமாகிய தொட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் காலம் இற்றைக்கு நூற்றிருபது வருடங்களாகுமென்று சென்னைப் பிரஸிடென்ஸிக் காலேஜ் தமிழாசிரியராகிய ப்ரும்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் திருத்துறைசைக்கோவை முகவுரையிற் குறித்திருப்பதைக் கணக்கிடும்பொழுது பட்டம் ஒன்றுக்கு இருபத்துநாலு வருடங்களாவதாற் சாமிநாததேசிகருடனிருந்த சிவக்கொழுந்து தேசிகர் காலம் இருநூற்றைம்பது வருஷங்கட்கு முற்பட்டதென்பது பெரும்பாலும் சரியாகவேயிருக்கலாகும். இவை நிற்க. சர்க்கரைப்புலவர் எழுதிய சீட்டுக்கவிகளில் "கதிரவகுலாதிபதி சேதுபதி சித்தமகிழ் கனைப்பிரபந்தவாக்கி" என்றும் "சேதுபதி சித்தமகிழ் சர்க்கரைக்கவிராச சிங்க" மென்றும் "சேதுபதிவாசற் பிரபந்தவாக்கி" என்றும் பேர் குறிக்காமற் பொதுவாகக்காணப்படுவதன்றிச் சேதுபதிகளையே பாடிய தனிப்பாடல்கள் அகப்படாவிடினும், ஓர் சமயத்திற் சேதுபதிகள் சர்க்கரைப்புலவர் சொல்லிய கவியை மதித்துப் புகழ்ந்து பாராட்டியதைக்கண்டு பொறாமைகொண்ட சவ்வாதுப்புலவர் "சர்க்கரை தொண்டைமட்டுஞ் சவ்வாது கண்டமட்டும்." எனக்கேட்ட சர்க்கரைப்புலவர், "அதுவும் அந்தமட்டுத்தானே" என்றனர். எனவழங்குஞ் சாதுரிய வசனத்தால் (அந்த மட்டுத்தானே என்றது கண்டமுந் தொண்டையும் ஒன்று என்றபடி.) சர்க்கரைப் புலவருஞ் சவ்வாதுப்புலவரும் ஒரு காலத்திலிருந்தவரென்பதும். சவ்வாதுப்புலவர் கிளையாளன் சேதுபதி ரகுநாயகன் எனப்பாடிய தனிப்பாடலான் இவர்களை யாதரித்த சேதுபதிகள் கி. பி. 1645-முதல் 1670-வரையில் அரசு புரிந்தவரென்று செந்தமிழ்ப்பத்திரிகைத்தொகுதி 2 பகுதி 2-ஆல் அறியப்படுகிற இரகுநாத சேதுபதியாகிய திருமலைச் சேதுபதிகளேயென்பதும். இவர்கள் காலத்தில் இருந்த புலவர்கள், மிதிலைப்பட்டி அழகிய திருச்சிற்றம்பலக் கவிராயர், அமிர்த கவிராயர், படிக்காசுப் புலவர், என்பது தனிப்பாடல்களாலும், திருத்துறைக்கோவை, நளசிங்கமாலை முதலியவற்றாலுந் தெளிவாய் விளங்குவதன்றி, எங்கள் குடும்பத்தவர்களுள் ஆதியிலிருந்தவர் செட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் என்று இற்றைக்கும் வழங்கிவரும் வழக்கத்தால் மற்றொரு சர்க்கரைப் புலவரும் பிரபலமுள்ளவராக பிற்காலத்தில் இருந்திருக்கலாகுமென்றே தோற்றுகிறது.

## நெட்டிமாலைபெற்ற வரலாறு.

ஒரு நாள் கம்பராமாயணத்தில் கடல்தாவுபடலத்தைப் பிரசங்கித்து வரும்போது அநுமார் கடலைத் தாண்டினரென்ற சமயத்தில் எப்படித் தாண்டினரென்று இரகுநாதசேதுபதிகள் வினவ, இப்படித்தான் தாண்டினரென்று இருந்தபடியே மேலெழுந்து சேதுபதிகள் இருந்த ஆசனத்தில் உட்கார்ந்தனரென்றும். கண்டு வியப்புற்ற அரசர் மேலெழுந்தபோது சபாமண்டபத்தில் விதானமாக அலங்கரித்திருந்த நெட்டிமாலைகள் அறுபட்டுக் கழுத்தில் விழுந்தமையால் அன்றுமுதல் அம்மாலையையே விருதாக வளர்த்து 'இராமாயணப் பிரசங்கம் நெட்டிமாலைச் சர்க்கரைப்புலவர்' என்பட்டஞ்சூட்டி உழக்குடிக்கிராமத்தை சர்வமானியமாக அளித்தனரென்றுங் கூறுப. இது "வங்கஜெயபாரத விராமாயணத்திலே வாடாத நெட்டிமாலை மருவிட்டதிருவீட்டு வழுவாது நழுவாது வாசாமகோசரமதாய்ச் சிந்தைதிகவே சற்றுமலையாது சபையிலே செய்யும் பிரசங்கப்புணன். சேதுபதி சித்தமகிழ் சர்க்கரைக்கவிராச சிங்கம் யாமெழுதுஞ் சீருபம்" என்னும் சீட்டுக்கவியானுந்தெளிவாய் விளங்குகிறது.

இஃதன்றியும் சிறுகம்பையூர், ஊரியூர், பாகனூர் முதலாகிய கிராமங்களில் மானியங்களுஞ் சமஸ்தானத்தில் மகமையும் பெற்றிருப்பினும், அவை இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன சேதுபதிகளால் இன்ன இன்ன புலவருக்கு கொடுபட்டனவென்று புலப்படவில்லை. ஆனாலும் இரகுநாதசேதுபதிகள் காலத்திலேயே சிறுகம்பையூரில் மானியம் விடப்பட்டதென்பதும். ஆதிநெட்டிமாலைச்சர்க்கரைப்புலவரே அவ்வூரைத்தமக்கு உறைவிடமாகக் கொண்டனரென்பதும். சிறுகம்பையூர் மானியமாகிய கோணச்செய் அவ்வூரிலுள்ள நிலங்களைப்பார்க்கிலும் அதிகமாய் விளைகின்றதென்று சிலர்சொல்லியதைக் கேள்வியுற்ற சர்க்கரைப் புலவர், "கரும்பாலையாடுவதேன்? கம்பையூர்க் கோணச்செய்விளைவதேன்? சர்க்கரைக்குச் சர்க்கரைக்கு" எனக்கூறினரென்பதானும் விளங்குகிறது. இரகுநாதசேதுபதிகளேயன்றியவர்கள் வழிவந்தசேதுபதிகளும் சர்க்கரைப் புலவர் வழிவந்த புலவர்களுக்கு மானியமும் மகமையுங்கொடுத்து ஆதரித்துவந்தார்களென்பது கி. பி. 1795-ல் இருந்த முத்துமுருகப் புலவர்பெருக்கு கோட்டைப்பட்டணம் தாலூகா கிராமங்களில் மானிய சுதந்திரம் ஏற்பட்டிருப்பதாலேயே யறியலாகும்.

இரகுநாதசேதுபதிகளாற் பெற்ற மானியமகமைகளுக்கும் அவர்கள் வழிவந்த சேதுபதிகளாற் கொடுக்கப்பட்ட மானிய மகமைகட்கும்

யாதொரு பட்டயமும் கிடையாவிடினும், இரகுநாதசேதுபதிகளது சகோதரரான *முத்துவைரவநாத தேவரவர்கள் கொடுத்த கோடகுடி கொந்தலான் வயல் என்னுங்கிராமங்களின் சர்வமானியப் பட்டயத்தால் ஆதிசெட்டிமாலைச் சர்க்கரைப்புலவர் கடைசியாயிருந்தகாலம் இன்னதென்று துணியப்படுகின்றது. அப்பட்டயமாவது:—

ஸ்வஸ்திஸ்ரீ ஸாலிவாஹன ஸகாப்தம் ௲௬௱௫௰. இதன் மேற் செல்லாநின்ற கரநாமஸம்வத்ஸரத்தில் வருஷருதுவில் கார்த்திகை மாசத்தில் சோமவாரமும் புனர்பூசநக்ஷத்திரமும் ஸித்தநாமயோகமும் பாலவாகரணமும் கூடிய சுபதினத்தில் தேவை நகராதிபன். ராமநாதசுவாமி, காரியதுரந்தரன். சிவபூஜாதுரந்தரன். பரராஜசேகரன் பரராசதேசசிங்கம், இரவிகுலசேகரன். சொரிமுத்துவன்னியன். அரியராயர் தளவிபாடன். வாக்குத்தப்புவாரக்கண்டன். பட்டமானங்காத்தான், துட்டராயர்கண்டன். புவனேகவீரன். வீரகஞ்சுகன். வீரவளநாடன், வீரமார்த்தாண்டன். பரவித்தியாதரன இயல்வித்தியாதரன பரதளவிபாடன், அரிகொலரசுதன். அந்தமபாகண்டன். சாடிக்காரன்கண்டன். சாமித்துரோகிகள் கண்டன். பஞ்சவன்ன ராகுத்தன் பனுக்கு வராக்கண்டன். கொட்டமடக்கிவையாளி. நாராயணனீ இவுளி பாவடி மிதித்தேறுவார்கண்டன். இளஞ்சிங்கம். தளஞ்சிங்கம். பகைமன்னர் சிங்கம், துரைராயன். ஆற்றிற் பாய்ச்சி. கடலிற்பாய்ச்சி. மதப்புலி. வணங்காப்புலி. வன். * ருமலிங்கசப்துலை. எரியராட்டந்தவிழ்த்தான், மேவலர்கள் சோளரி, மேவலர்கள் வணங்குதிருதாளினன், வீரகெம்பீரன். தொண்டித்துறை காவலன். துரகரேவெந்தன். அநுமகேதனன். கொடைக்குக் கர்ணன், பரிக்கு நகுலன். குன்றனையமேருவிற் குன்றுவளை குனில்பொறித்தவன். திலகநுதன் மடமாதர் மடலெழுத வருசுமுகன், விசயலக்ஷமிகாந்தன். சகலகலை விற்பன்னன் காமினி கந்தர்ப்பன். அட்டதிக்கு மனோபயங்கர துட்ட நிக்கிரகசிட்ட பரிபாலன. வீரதண்டை சேமத்தலை விளங்குதிருதாளினன். சேது காவலன், ஏமாதிபனான தாகலூர்க் கூற்றத்துக்காத்தூரான குலோத்துங்க சோழநல்லூர்க்கீழ்பால் விளையாதகண்டன், ஹிரண்யகர்ப்பயாஜி ரெகுநாததேவர் மருமகன் செம்பிநாட்டில் திருவுத்தரகோசமங்கையிலிருக்கும் சடம்பதேவர் புத்திரன் விஜய ரகுநாத சேதுபதி சகோதரரான முத்துவயிரவநாததேவரவர்கள் கிடாரத்திலிருக்கும் சாந்தாபிள்ளை புத்திரன் ராமாயணப்பிரசங்கப் சர்க்கரைப் புலவருக்கு ராமசுவாமி சந்நிதியில் வேதபாரகரும் இயலிசை நாடகத்தமிழ் வித்தியாதாரருங்கூடிய சபையில் ராமாயணப் பிர

* இது சேதுபதியவர்கள் கையெழுத்து.

சங்கத்துக்குப் பரிசாய் இராமசாமி பட்டாபிஷேகத்தில் கட்டளையிட்ட கிராமமாவது, வெள்ளாம்பத்தில் சாத்தனி வயலுக்கும் ஏம்பற் குளத்துக் காலுக்குந் தெற்கு, மஞ்சக்குடிப்புரவாகிய வலையன் வயலுக்கும், கீழக் காவனூருக்குங் கிழக்கு, விதத்தூருக்கு மேற்படியூர்ப் புரவாகிய பொத்தையன் வயலுக்கும் வடக்கு, ஆசான் வயலுக்கும் ஏம்பற் குளத்துக்கும் மேற்கு, ஆக இந்த நான்கெல்லைக்குட்பட்ட கோடகுடி கொந்தாலம் வயல் நஞ்சை புஞ்சை மாவடை மரவடை திட்டுத்திடல் மேல்நோக்கிய மரம், கீழ்நோக்கிய கிணறும் நீரும் பாசி முதலாகிய குடி, படை, பள்ளுப் பறை, இறைவரி, ஊழியம், உலுப்பை சகல சமுதாய வளப்பிரயோசன நிதி நிக்ஷேபஜலதருபாஷாண அக்ஷய பிர்மவுசுவிவசுமென்று சொல்லப்பட்ட அஷ்டபோக தெசஹாசியங்களுக்கும் தானவிக்கிரயங்களுக்கு யோக்கியமாக சந்திரார்க்க சந்ததிப் பிரவேச புத்திர பௌத்திர பாரம் பரியாகச் சருவமானியமாக ஆண்டனுபவித்துக்கொள்ளவும். இந்தக் கிராமத்துக்கு யாதாமொருவர் பரிபாலனம் பண்ணினபேர்கள் காசியிலேயும், மற்றைப் புண்ணியஸ்தலங்களிலேயும், பெரியோர்கள் சந்நிதானங்களிலேயும், ராமசுவாமி சரித்திரங்களாகிய இராமாயணத்தைக் கேள்வியானவர்கள் எந்தப் பலத்தையடைவார்களோ அந்தப்பலத்தையடைவாராகவும். இந்தக் கிராமத்துக்கு அஹிதம் பண்ணினவர்கள் ராமசுவாமி சரித்திரத்தை யசத்தியமாக நினைத்தவர்கள் போகின்ற தோஷத்திலேயும் கங்கைக்கரையிலேயும், சேதுக்கோடிக்கரையிலேயும்; ராமபத்தரையும், சிவபத்தரையும்; இம்சிசை பண்ணின தோஷத்திலேயும் அடைவாராகவும்.

இறவாம் பிலிராம வென்றேறு ரும்பர்
நிறவா ரென்பது நிச்சய மாதலான்
மறவின் மாக்கதை கேட்டவர் வைகுந்தம்
பெறுவா ரென்பது பேசவும் வேண்டுமோ. என்பதாம்.

இது கி. பி. 1711 ல் கொடுக்கப்பட்டிருப்பதால் சர்க்கரைப்புலவர் ரகுநாதசேதுபதிகளுக்குப் பின்னும் சக வருடம் வரையிலும் இருந்ததாகத் தெரிகிறது.

இவரது ஆசிரியராகிய சிவக்கொழுந்து தேசிகர் கி. பி. 1658-ல் இருந்ததாகக் கருதப்படுவதால், அவரிடம் கல்விகற்று முற்றியபின் இரகுநாதசேதுபதிகளின் ஆட்சியின் பிற்பகுதியிலே தான் இவர் சமஸ்தான வித்துவானாக வந்திருக்கவேண்டும். அங்ஙனஞ் சமஸ்தான வித்துவான் ஆனகாலத்தில் இவருக்கு வயது இருபத்தைந்து வைத்துக்கொண்டாலும், இந்தப்பட்டயம் பெறும்பொழுது எழுபத்தைந்து வயதுக்கு குறையாதிருந்திருக்க வேண்டுமென்றே தோற்றுகிறது. இவ்வளவு முதிர்ந்த வயதில் இராமாயணப் பிரசங்கஞ்செய்து இத்தகைய நன்

கொடை பெற்றாரென்பது இக்காலத்தவர்க்குப் புதுமையாகக் காணப்படினும், தற்போதிருக்கும் முற்காலத்திய முதியவருடைய தேகபலத்தை நோக்கும்பொழுது அக்காலத்துத் தொண்ணூறு வயது வரையிலும் இருந்ததாக அறியப்படுகிறது. இவர் திடசரீரியாக இருந்திருக்கக்கூடுமென்றே தோன்றுகிறது. அன்றியும் செட்டிமாலைச் சர்க்கரைப்புலவர் தொண்ணூறு வயது வரையிலுமிருந்தாரென்பது * தமிழருமையறிந்தவளும் நூறு வயது வரையிலுமிருந்தவளுமாகிய அவர் மனைவியாலறியப்பட்ட கர்ணபரம்பரைச் செய்தியாகும்.

இஃது இங்ஙனமாக; நூற்றுநாற்பத்தேழு வருடங்கட்குமுன் கி. பி 1761-ல் சர்க்கரைப் புலவர் மிழலைச்சதகம்பாடி அரங்கேற்றியதற்கு மிழலைக்கூற்றத்து வேளாண்குலத்தவர்களால் அவர் குமாரராகிய முத்து முருகப்புலவருக்கு மகமைப்பட்டயமொன்று கொடுக்கப்பட்டிருக்கிறது அப்பட்டயமாவது:—

ஸ்வஸ்திஸ்ரீ [illegible] கலியாப்தம் [illegible] இதின்மேற்செல்லாநின்ற விக்கிரம வருஷம் மாசிமீ [illegible]. திருமிழலை நாட்டுப் பிள்ளைமார் சர்க்கரைப்புலவர் குமாரர் முத்துமுருகப்புலவருக்கு மகமைப் பட்டயம் பண்ணிக்கொடுத்தபடி மிழலை நாட்டுச்சதகம்பாடி நாட்டுப்பிள்

---

* இவ்வரலாறு வருமாறு:—இது சேதுபதிகள் சர்வமானியமாக வார்த்த உழக்குடிக் கிராமத்தின் குளக்கால் சம்பந்தமாக ஏற்பட்ட மனத்தாங்கலால் அதற்கு அயற்கிராமத்தார்கள் புலவர் வீட்டைக் கொள்ளையடிக்கக் கருதியிருந்ததை யறிந்த ஆதி செட்டிமாலைச் சர்க்கரைப்புலவருடைய பௌத்திரர்கள் வீட்டிலுள்ள பண்டங்களையெல்லாம்வீட்டுப்புறத்திலுள்ள கொல்லையிற் புதைத்துவிட்டுத் தமது பாட்டியாகிய கிழவியைவீட்டிலிருத்தி அயல் ஊருக்குப் போய்விட்டார்களென்றும், அச்சமயத்தில் கொள்ளையடிக்கக் கருதியவர் வந்து வீட்டில் யாதொன்றுங் காணப்பெறாமையால் கவற்சிகொண்ட பேர்களுள் ஒருவன் வெறுங்கையை வீசிக்கொண்டு போகிறதா, இதோ அடுக்கியிருக்கும் ஏடுகளிலாவது ஆளுக்கொன்றை எடுங்கள் என்று சொன்னதைக்கேட்டிருந்த கிழவி, எந்தப்பொருள் போனாலும் நம்பிள்ளைகள் தேடிக்கொள்வார்கள் அந்தப் பொருளைத் தேடிக்கொள்வதற்கு ஏதுவாயிருக்கும் இந்த ஏடுகள்போய் விட்டால் யாது செய்வார்கள்? நம்வீட்டிற் பலபேர்கள் வந்து ஏடுகள் எழுதிக்கொண்டகாலம்போக. நம்பிள்ளைகள் அயலார் வீட்டுத்திண்ணையிற்போயிருந்து எழுதிக்கொள்ள விரும்பினும் கிடைக்கக்கூடியதில்லையே யென்றெண்ணி ஏடுகளை யெடுக்க முயன்றவர்களைக் கூப்பிட்டு வீட்டிலிருந்த பண்டங்களைப் புதைத்து வைத்திருக்குமிடத்தைச் சொல்லி விட்டாளென்றும். அப்போது ஒருவன் கையில் ஒரு ஏட்டையெடுத்துக் கொண்டுபோக விரும்பியதைக்கண்டு அவ்வேட்டைத்திருகிப் பறித்துக் கொண்டாளென்றும். அந்த ஏடுதான் இப்போது எங்கள் வீட்டிலிருக்குங் கம்பராமாயணமென்றும், இப்போது எங்கள் வீட்டிலிருக்கும்முதியவர்களால் விளங்குகிறது.

ளைமாரிபேரிலே அரங்கேற்றினதற்குச் செங்காலபிள்ளை நாட்டுப்பிள்ளைமார் உள்ளிட்டாரும். ஆத்மசந்தோஷமாக மாத்கால் குருணி வீதம் மகமைப் பட்டயம் பண்ணிக்கொடுத்தோம்.

வெள்ளாம் பத்தில்...... .. .. .. .. .. .. .. .. ..பண்டாரவாடைக்கிராமம். சருவமானியக்கிராமம். அர்த்தமானியக்கிராமம். சுரோத்திரியக்கிராமம். கோவிற்கிராமம். இந்த கிராமத்துக்கெல்லாம் மாத்கால் குருணி வீதம் மகமை என்றென்றைக்கும் கொடுத்து நடப்பிவிப்போமாகவும். இந்தப்படிக்குப் பொன்பேத்திச் செங்கால சொக்கபிள்ளை. வீரப்பெருமாள் பிள்ளை. தீரவிளை தீர்த்தபிள்ளை. திருவப்பிள்ளை. தியயத்தூர்ப்பெருமாள் பிள்ளை. குளத்தூர்ச் சொக்கப்பிள்ளை, களபம் வீரப்பெருமாள்பிள்ளை, அவணம் வெழுவப்பிள்ளை. பெரியணைபிள்ளை. அமரடக்கி வீரப்பெருமாள் பிள்ளை. சேக்ரலேந்திரம் சின்னப்பிள்ளை, வேங்கப்பிள்ளை, தாளனூர் கொண்டாபிள்ளை, அடைக்கலங்காத்தபிள்ளை. பாக்கம் மணவாளபிள்ளை. நீன்புகல் செய்யானம் குஞ்சுப்பிள்ளை, மணவாளபிள்ளை. வீரப்பெருமாள்பிள்ளை. வெட்டையளம் மகாகட்டியபா வீரப்பெருமாள் பிள்ளை, விளத்தூர் உலகபிள்ளை. கார்க்கமலம் மணவாளபிள்ளை. பாண்டியாபிள்ளை. ஆவணைபிள்ளை, .. .. ... .. ..... ..ருமபிள்ளை. நெய்வேலி வீரப்பெருமாள்பிள்ளை. வெள்ளூர் அழகபிள்ளை. நீட்டாபிள்ளை. சிறுவணைமாக்கபிள்ளை. பூவலூர் வீரப்பெருமாள்பிள்ளை. சாத்தகுடிக் கொண்டாபிள்ளை. வேட்டனூர் . .. .... .... . பிள்ளை. கொடிக்குளம் மலையப்பபிள்ளை. வேங்கடப்பிள்ளை. பெரியணைபிள்ளை, வீரப்பெருமாள் பிள்ளை. ஆருடையார்கோவில் அம்பலத்தாடு தம்பிரான் அவர்கள். காசியப்பநம்பியார். சிலம்பாத்தான் சேருவைகாரர். ஒக்கூர் சின்னம்பலகாரன், கட்டயனம்பலகாரன், பொதுவக்குடிச் சேருவைகாரன். ஆலத்தூர். ......... ........ ........ .. .. .. .. பொய்யனூர் அழகபிள்ளை ; இவர்கள் சொற்படிக்கு வெள்ளூர் மாகாணம் நாட்டுக்கணக்கு. குப்பையன் கையெழுத்து இந்தப்படிக்குச் சந்திராதித்திய பிரவேச புத்திர பௌத்திர பாரம்பரியமாகப்பெற்றுக்கொண்டு சுகமேயிருக்கக்கடவாராகவும் இந்தப்படிக்குச் * செங்காலபிள்ளை.

---

* இவர், திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளலைப் போலவே பிற்காலத்திருந்த கண்டியரசனுக்குச் சம்பா நெல் லனுப்பிய பெருஞ் செல்வர்.

இது. "கொந்தாருங்கண்டியர் கோனுக்குச்செந்நெற் கொடுத்தனுப்புஞ்
செந்தாமரைக்கண்ண னன்பாலோர்பிள்ளை செங்காலனென்றே
வந்தாருவெண்ணப் புவியிலுற்றான்மற் றவன்குலத்தில்
வந்தார்களாவரிவர்காண் டிழலையில்வாழ் பவரே." என்னுஞ்
செய்யுளிற் சதகத்தான் விளங்குகிறது.

உ

கணபதி துணை.

வேலுமயிலுந் துணை.

# மயூரகிரிக்கோவை.

## காப்பு.

வெண்பா.

பூமான் மருவும் புயன்மருகன் விண்ணவர்கள்
கோமான் மயூரகிரிக் கோவைசொலத்—தாமுதவும்
பிந்தா வளமுகவன் பில்லார்க்குச் செய்யுமொரு
தந்தா வளமுகவன் றாள்.

## முதலாவது—கைக்கிளை.

### காட்சி.

கட்டளைக்கலித்துறை.

பூமேவு பொற்பிடி சிங்கங் களிறம் புலிபசும்பூங்
காமேவு மான்கொண் டொருதோகை யன்னத்தின் கண்ணுற்ற
றேமேவு முல்லை யருதேந்த்ரன் போற்றுஞ்செவ் வேள்கமல [தாற்
மாமே வியகுஞ்ச ராசனச் சோலை மயில்வரைக்கே. (க)

### ஐயம்.

பாய்தந்த கோட்டுத் தகரான் மயூரப் பருப்பதத்தான்
றாய்தந்தை யோதந்தை கண்ணான சந்த்ரோ தயப்பகையோ
வேய்தந்த தோகை மயிர்பகை யோசெங்கை வேலெடுத்துக்
காய்தந்த காலத்தி லூர்கொண்ட தோவிடங் காதலிக்கே. (உ)

### துணிவு

திரைமேலுள் ளாரெனிற் கைமல ரிங்கில்லைச் செம்மலைநாண்
டரைமேலுள் ளாரெனிற் கான்மல ரங்கில்லைத் தானடித்த
வரைமேலுள் ளார்பணி வேலோன் மயூர வரையினிற்பத்
தரைமேலுள் ளாரிவர் வெண்பிறை மேன்முத் தரும்பியதே. (ங)

### குறிப்பறிதல்.

சுரரு மறையவ ரும்வருந் தாமற் சுரும்பைநஞ்சந்
தரரு நிலாவு மடாமன் மயில்வரைச் சாமிக்கன்னா
முரருமல் லாரும் பெறும்பேற்றின் மான்விழிக் கூடுற்றவாற்
பாரும் பரையுந் தொடுநஞ்சும் வான்சுதைப் பாலதுமே. (ச)

கைக்கிளை முற்றிற்று.

## இரண்டாவது—இயற்கைப்புணர்ச்சி.

### இரந்துபின் னிற்றற் கெண்ணல்.

பொன்னுங் கரும்பொன்னுங் கல்லுந்தம் மாற்செம்மை பூணுமிந்த
மின்னுந்தம் மாற்செம்மை யென்றனக் காயுறல் வேண்டுநெஞ்சே
பின்னுந் துவிதமி லாவேண் மயூரப் பிறங்கலுக்கே
யுன்னு மருந்து மணியுஞ் செயும்வினை யொன்றில்லையே. (௫)

### இரந்து பின்னிலை நிற்றல்.

பூவடு கான்வெட்டி வேருறச் சாய்த்துப்புத் தேளயில்போன்
மாவடுக் கண்டகண் வண்டென் மனத்தா மரைக்குநல்கிக்
காவடு தோகை மலைத்தேனுக் காசையைக் காட்டிநின்றாய்
நீவடு கோதமி ழோபுவி தோகை நெடுமலைக்கே. (௬)

### இதுவுமது.

கையன்றி மெய்யறி யான்கொடைப் பாலிற் கவிஞர்தம்பான்
மெய்யொன்று சங்கர லிங்கத் தபோநிதி வேண்டுஞ்செவ்வேண்
மையொன்று தோகை மலைமயி லேமன் மதன்சமரி
லெய்யென்று வேலெறிந் தென்னோ பராமுக மெய்தினையே. (௭)

### முன்னிலை யாக்கல்.

குவளையின் மீதுசங் கொண்டபி ரானுக்குங் கோட்டொலிதங்
குவளைமின் னுக்கு மருகன் கணவன்குன் றக்குடிமேற்
குவளை பகையென்று கொய்யீர்பங் கந்தனைக் கூடிலிர்தாங்
குவளையு நீத்தெனக் கோதனி நின்றனிர் கோகிலமே. (௮)

### வண்டோச்சி மருங்கணைதல்.

வான்மறந் தாலு மெவர்மறந் தாலு மலர்ப்பதத்தை
நான்மறந் தாலுந் தடுத்தாள் குகன்மயி லகத்திலே
கான்மறந் தேகுழற் கான்றேடி யோடுங் கரும்பினமே
நான்மறந் தார்க்கென்னைம் பாலேட்டி லாசை நுவலுங்களே. (௯)

### மெய்தொட்டுப் பயிறல்.

ஏரிக்குத் தாவடி யிட்ட தளிசொல்லுந் தண்மலர்க்கா
வேரிக்கு வான்பரி செல்லா மயிலயில் வேள்வரையீர்
பாரிக் குடத்திற் களப மடைப்பதும் பங்கயத்தின்
வாரிக் கருமையைக் காட்டு வதுமென் மலர்க்கரமே. (௧௦)

### பொய்பா ராட்டல்.

நின்னய மொன்பது மெட்டுஞ்சத் தாகி நிறைந்துப்டாம்
வன்ன விகாசப் பொருண்மாற் றுங் கந்தன் மயில்வரைமேற்
கன்னமு லாங்கண்ணி கொங்கை குறித்தபுன் கைப்பழகிச்
சொன்னகடம்பின்னல்லோரையும்பெற்றுவிண்சுற்றியதே. (௧௧)

### இடம்பெற்றுத் தழால்.

தூண்டிய வாசியும் வாழும் பதமுஞ் சொலிற்றகரார்
வேண்டிய நல்கு மயிலார் மயில்வரை மேன்மருது
பாண்டியன் பொய்கையுங் கீழ்பாற் சவுக்கையும் பைம்புயல்கீ
ளீண்டிய காவு மினிப்பா ரினிப்பா ரிதழமுதே. (கஉ)

### வழிபாடு மறுத்தல்.

வருவா ரிவர்கின்ற யானுமிவ் வூரண் மறுத்திடற்குத்
தருவா ரலர்சண் முகவேலன் றேரகையஞ் சாரலிற்பூங்
கருவார் புனக்கொடி யாரிடஞ் செல்லல் கருத்தென்பர்வே
ளுருவா ரெதிர்நிற்கி லென்கொடி யாரிட முன்னிடமே. (கங)

### இடையூறு கிளத்தல்.

கரிய கொடியிடம் போதனன் றன்றிற் கனக்குழைநிற்
கரிய தூருவன் குகன்கந்தன் றேரகை யணிவரைமேற்
பிரிய மருளென வந்தேற் கமுதப் பெருங்குடம்விட்
டுரியதென் றேநஞ்சங் கைப்படுத் தீர்நெஞ் சுலவுறவே. (கச)

### நீடுநினைந் திரங்கல்.

சூடன் மதனன் கரும்பிது நாணிற் றேமென்றே
வாடல் புரிந்த கயறந்து நன்மதி யார்மரபிற்
கூடறந் தாற்கும ரிச்சேர்ப்ப னென்றுமண் கூறுமென்றே
நீடல் விதியு மயின்மலைத் தேவு நினைந்திலவே. (கரு)

### மறுத்தெதிர் கோடல்.

பொன்னுண் டிருக்கு மிறைவர் முறுக்கும் பொறுப்பதின்றே
கன்னுணக் கால்வைத்த மாயோன் மருகன்கு கன்சிகண்டி
முன்னுண் மலையி லுயிரினு மிக்கு மொழியவுள்ள
தென்னுண் வடமலை வின்னுண மாயின தின்றெனக்கே. (கசு)

### வழிதுநகை தோற்றல்.

தேனாறு பாயுங்குன் றக்குடி யான்முன் சிகண்டியுஞ்சூ
ருணாறு வேலு மணமாக்கி னீரென் றுரைத்தவன்றே
வானாறு தோயு மதியங்கொல் லோமுத்த மாலைகொல்லோ
காணாது பாய்முல்லை கொல்லோவழி திங்குக் கண்டனனே. (கஎ)

### முறுவற்குறிப் புணர்த்தல்.

சேவ லிடையில் லதுமுகன் மாத்திரை சென்றதுமுன்
காவல் புரிந்து கொடிகளிற் போக்கிய கந்தன்முன்னு
ளேவில் புரிமயில் வெற்யார் பவளமுத் தீன்றதுண்டு
பூவர செய்துள் ளவர்பே றெனுமிந்தப் பொற்கொடியே. (கஅ)

### முயங்குத லுறுத்தல்.

போரினி லேறுமயிலேந்தும் வாட்படை பூட்டியநாண்
டாரினன் வந்த சிவகிரி யான்மயிற் சாரலிலே
பாரினிற் றுருவைச் சிந்தா மணியைப்பொற் பங்கயத்னிதக்
காரினைக் கொண்டது போலா மிவடனைக் கைக்கொண்டதே. (கக)

### புணர்ச்சியின் மகிழ்தல்.

பூலோகத் தின்பும் பரலோகத் தன்பும் பொருத்தியவேள்
கோலா கலக்குக் குடத்துசன் றூகைக் குலவரையார்
நாலா நிலையமு துண்டிடி லாவர் நரர்பவத்தின்
மாலேலீத வாரி யமுதுண் டவரணு மாத்திரமே. (உய)

### புகழ்தல்.

தூண்டிய தோகை தனில்வட் மேற்கிற் றுரைமருது
பாண்டியன் றேரினிற் கால்வைத் தவர்மயிற் பைங்கிரிமே
லாண்டிசை கொண்டவர் மூவரு நின்புணர்ப் பானவின்பம்
வேண்டிக் கருகித் தலைபோய்ப் பகிருடன் மேவினரோ. (உக)

### கற்பை யுயர்த்தித் தலைவி தலைவனைப் புகழ்தல்.

வானத் திரவியுஞ் சோமனு மார்க்கம் வழாமுன்மற்றோர்
தானத் திரங்கவி ழாமற் குகன்மயிற் சாரலுள்ளார்
மானத் திரவியங் கொண்டார் நெறியின் மணந்ததுபோற்
கானத் திரவிற் பகன்மா லளித்திலர் காசினிக்கே. (உஉ)

### மறுத்தெதிர் நாணல்.

காலிட்ட வாகுவிற் பானுவும் பேடுங் களிச்சுரும்பு
மோலிட்ட விண்ணுஞ் சரோருகத் தன்ன மொதுங்கலுந்தீம்
பாலிட்ட சொல்லிய ரார்ப்பு மயூரப் பருப்பதத்தார்
வேலிட்ட மாம்பிஞ்சும் பூணுங்கண் டாரில்லை வெற்பவரே. (உங)

இயற்கைப்புணர்ச்சி முற்றிற்று.

---

## மூன்றாவது—வன்புறை.

### அணிந்துழி நாணிய துணர்ந்துதெளி வித்தல்.

காலிற் பணியுஞ் சிலம்பு நெளிந்திறல் கண்டதுண்டோ
பாலி னுறுமே கலையொது ங் காதது பார்த்தனிர்கார்
மேலிற்கண் பெற்ற மயிலார்குன் றக்குடி மின்னிடையீர்
மாலின் மகிழு முருக்கு மணிக்கில்லை மாசெனக்கே. (உச)

### பெருநயப் புரைத்தல்.

மயிலீ ரிவடன் மொழிபோற் கீயின்மொழி மாற்றுங்கொல்லோ
குயிலீரஞ் சாயன் மயிலோ கவர்ந்தது கொண்டசெங்கை
யயிலீர் விழிமலர் போல விராவு மலருமலர்
பயிலீர் சுரும்பின மேகந்தன் றேகைப் பருப்பதத்தே. (௨௫)

### தெய்வத்திறம் பேசல்.

சுனைதீர்த்த மியாவுமொன் றான சரவணச் சோதிதொல்லை
வினைதீர்த்த தோகை மலைக்குமரேசன்செவ் வேடிறத்தாற்
றினைதீர்த் தனைமணம் பெற்றாயி ராமனுஞ் சீதையும்போற்
பனைதீர்த்த கைப்பிடி யேயிருப் பாமிந்தப் பாரிடத்தே. (௨௬)

### தலைவி பிரிவெண்ணி யழுங்கல்.

சீதையுங் கொண்கனு மென்றார் பிரிவிற் சிறந்தவவர்
காதை யறிகிலர் கொல்லோ விறைவர் கருணைவற்றா
வோதை நதிபதி யன்றோ மயில்வரை யோன்முருகன்
றாதையம் மான்மகம் போலான தென்மனந் தாருக்களே. (௨௭)

### பிரியே னென்றல்.

மட்டார்ந்த கோதை மயிலே யிராமனை வைத்துரைத்த
திட்டாந்தம் வேலன் குகன்சந் திரங்கச் சிலம்பனிற்
கட்டாங்கு பூங்குழ லார்மனங் காணக் கருத்திற்கன்றே
வுட்டாங்க லென்றுய ரென்பிரி யேன்பிறப் பொன்றினுமே. (௨அ

### பிரிந்துவரு கென்றல்.

கலையோர் மயிலை யெருத்தினிற் கொண்டு கடையினும்வாழ்
நிலையோதுஞ் செட்டி மயில்வரைச் சாரலினேரிழைநின்
முலையோ சிறந்ததென் னிவ்வூரிற் சந்தன முத்தவெள்ள
மலையோ சிறந்த தெனப்பார்த் திதோமுன் வருகுவனே. (௨௯)

### தலைவி பிரிவச்சம்.

விதியோ பிறப்பினை யாதியொப் போவென் விரகநதி
பதியோ கொடுவரி யோவன்ன மோவுயிர்ப் பாவையரோ
துதியோ பழிகொள்வ தியாதோ விசாகன்பைங்தோகைவெற்பர்
மதியோன் கதிரெனத் தோன்றல ராமென்னில் வந்தெனக்கே.()

### இடமணித் தென்றல்.

பணித்தாம் பசைக்கு மலைமே லடியிட்ட பாண்டியன்பூங்
கணித்தார் முதற்குகன் மாயூர வெற்பிற் கனங்குழைநின்
மணித்தார் வயிரத்து மாடி யினுநின் மனையினிற்பா
ரணித்தாகு மென்னகர் நான்மாடி யேறினு மப்படியே. (௩௧)

• வன்புறை முற்றிற்று.

---

## நான்காவது—தெளிவு.

ஆறறி யந்தணர்க் காதி மறைப்பொரு ளாயமறத்
தேற வுரைத்த சிவன்மகன் றோகைச் சிலம்பினுள்ளார்
மாற வுரைத்துக் கனிவா யமுதுண்ட வர்க்குவஞ்சங்
கூற நினைப்பினு நாவெழும் பாதன்பு கொண்டுநெஞ்சே (௩௨)

தெளிவு முற்றிற்று.

## ஐந்தாவது—பிரிவுழி மகிழ்ச்சி.

செல்லுங் கிழத்தி செலவுகண் ளேத்தோடு, சொல்லல்.

சுரவு சாகர ரோகப் பெரும்பவந் தீரவர்ச்சித்
தசுரபி யோற்கருள் செய்தோன் சிகண்டித் தனிவரைபோ
லசுரரைச் சேடனை நஞ்சைக் கருதி யரனரிநம்
புசுரர் விரும்பிலர் நெஞ்சே செலுமிந்தப் பூவமுதே. (௩௩)

பாகனோடு சொல்லல்.

மேலார் பகைநன்று கீழா ருறவிற்கு வெள்வளையான்
பாலாருங் குன்றக் குடியா னகர்ப்புறம் பார்வலவா
மாலார் கமஞ்சூன் முகின்மீதிற் றோன்றிய மாதொருத்தி
வேலாவி தந்த தளிராவி கொண்ட வியனிடத்தே. (௩௪)

பிரிவுழி மகிழ்ச்சி முற்றிற்று.

## ஆறாவது—பிரிவுழிக் கலங்கல்.

ஆய வெள்ளம் வழிபடக் கண்டிது, மாயமோ வென்றல்.

வையம்விட் டேவல வாசென் றதுஞ்சென்று வந்ததுவு
மையம்விட் டேசொன் னிசமோ புணர்ப்புமை யோகனவோ
மையம்விட் டாயந் தொழும்வேண் மயில்வரை வண்கதிரு
தையம்விட் டாரென்ன மோவிந்த மானைத் தனிவழியே. (௩௫)

வாயில்பெற் றுய்தல்.

கண்ணு யிரும்பெற்ற வன்பணி வோன்புணர் கற்பினரீ
ரெண்ணு யிரத்தன் மருகன் மயில்வரை யேந்திழைவெல்
பெண்ணார் பலரி லொருத்திகண் வாளிற் பிறங்கினதீர்
விண்ணார் மதிகண்டு தாமரை வேண்டின மெய்த்துயரோ. (௩௬)

பண்பு பாராட்டல்.

காலங்கை நீடிய கற்சாபம் வாங்குங் கடவுளர்க்குப்
பாலன் முருகன் மயில்வரை மேவிய பைங்கொடிபா
லாலந் தளிர்வருஞ் சாமளத் தால்வயி றுகிலகண்
வேலம்பி னுற்கொடுங் கூர்கொண்ட மன்னவர் வேற்படையே. ()

பயந்தோர்ப் பழிச்சல்.

பெண்கூற்றம் வென்றவர் யானின்றி வேறில்லைப் பேதையனாக்
கண்கூற்றிற் பெற்றவர் பேறுணின் மேவுக கஞ்சன்செய்கை
சிண்கூற்றின் மேவப் புரிந்தோன் மயூரச் சிலம்பவர்க்கு
விண்கூற்றி லாகுக மேலா மவர்கள் விளம்புரையே. (௩அ)

பலதிறப் புகழ்ச்சி.

பைத்தா மனரப்பணி சேய்மயில் வெற்பிற் பருமவல்குன்
மைத்தா மரைக்கிலக் காமன மேநின்ற மாதவியே
வைத்தா மரைக்கணை பின்கூடு மென்னுடை மாற்றலர்தங்
கைத்தா மரைநிகர் பூவே தழைகவிக் காசினிக்கே. (௩௯)

கண்படை பெறாது கங்கு னோதல்.

விழியா ரிமைக்கி லுருமாறு மென்று வியன்மனத்தார்
சுழியார் புனற்சண் முகநதி யார்பசுந் தோகைவெற்பி
லழியார் நனவை யவர்குழல் போனீண் டறக்கருகி
வழியாரு முண்கட் குவளை மலர்த்தி வருமிருளே. (௪0)

பிரிவுழிக்கலங்கல் முற்றிற்று.

ஏழாவது—இடந்தலைப் பாடு.



தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

புலியை யனத்தை யெனைமானைக் கூறிற் புணர்ப்பினுக்கு
வலியை யுடையநல் லேதுவன் றேபொன் மயில்வனைக்கென்
கலியைப் பிறப்பைக் கடிந்தோன் முருகன் கருணையுண்டென்
மெலியைநெஞ் சேதரு மின்னஞ்செ லந்நெறி மேல்விரைந்தே.

முந்துறக் காண்டல்.

இரைதேடி மாவும் பறவையுங் கானத் தெழாமுன்மலர்
விரைதேடி வண்டினஞ் சாயாமுன் மன்மத வேண்மருது
துரைதேடிக் கும்பிடும் வேலோன் மயூரச் சுரும்பினிற்பொன்
வரைதேடிப் பானு வராமுன்முந் துற்றதென் மன்னுயிரே (௪௨)

முயங்கல்.

வாழ்கானைக் காளைக் கொருகொப்பு தந்தோன் மயூரகிரிச்
சூழ்கான் குழலுமவ் வேள்கை யயில்போற் றனைவிழியு
மேழ்கான வார்த்தையுங் கட்கிலக் காய விருமுலையு
மூழ்கா னகையுங்கண் டாடின மின்ப வுததியிலே. (௪௩)

### புகழ்தல்.

கள்ளங் கொடுத்தகண் மீனுடை வைந்து கரணத்திலார்
புள்ளங் கொடுக்க முடன்கூவ வாரிக்குப் போற்றலரூர்ப்
பள்ளங் கொடுத்த முருகன் மயில்வரைப் பாரிலின்ப
வெள்ளங் கொடுத்தனை யுன்போலு ளாரில்லை மேதினிக்கே. (சச)

### உடன்புணராயத் துய்த்தல்.

பிறப்பொன் றினும்பிரி யேனென் றவன்புறைப் பேச்சையெண்ணி
மறப்பொன் றிடாமற் கனிக்குப் புவிசுற் றி வந்ததெய்வச்
சிறப்பொன்று தோகை மலைவேலன் சீறச் சிதைந்தவர்போ
லிறப்பொன் றினும்பிரி யேனினை நாயத்தை யெய்துகவே (சரு)

இடந்தலைப்பாடு முற்றிற்று.

---

## எட்டாவது—பாங்கற்கூட்டம்.



### தலைவன், பாங்கனைச் சார்தல்.

தக்கினு மெச்சினுந் தும்புரு நாரதர் சாற்றமுன்றிற்
றிக்கிட தோவென நின்றபடி மைந்தன் சிகண்டிவெற்பின்
மக்களி லாறெனும் வாயிலைச் சாரின்மற் றுங்கவனாற்
புக்கிட மேலிட மாயினு மேவுவன் பூவையையே. (சசா)

### பாங்கன், தலைவனை யுற்றது வினாதல்.

மூன்று மிசைத்தரு மாலிகை யான்மயின் முத்திவரை
யான்று பதர்க்கருள் செய்தது வோவய ணூர்மகற்குத்
தான்றாழ்வி லாதவன் சொல்லிய தோபதஞ் சார்ந்ததுடியோ
வான்றாழ் குடுமிவெற் பாவென்னை யெண்ணிய வந்ததுவே. (சஎ)

### தலைவன், உற்றதுரைத்தல்.

வேட்டம் புரிந்தன முன்னுட் கொடுந்தொழில் வெங்கைவில்விற்
பூட்டம்பி லெய்த்தது போன்மான்மயூரப்பொருப்பில்விண்ணோர்
கூட்டம் பணிகுகன் மாமியி னல்லெழில் கொண்டுநின்
றோட்டமு நெஞ்சும் பெயர்ந்துள்ள பேரில்லை நானிலத்தே. (சஅ)

### கற்றறி பாங்கன், கழறல்.

மலைதாங்கு நானு மிரவினைந் தம்பகை மாற்றுமங்கைச்
சிலைதாங்கு நேமி மதயானை நோக்கிற்குச் சீயமஞ்சுங்
கலைதாங்கும் வெம்புலிப் போர்வேலன் றோகைக் கனங்கிரிமே
னிலைதாங் கிலாது விடர்போல வாகினை நீயென்னிலே. (சகூ)

### கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

குன்றக் குடிக்கும ரேசனைப் பொன்வளை கூறச்செய்
தன்றவன் றந்தையை யோர்கூறு கொண்டதம் மான்மனத்தி
லொன்ற விரத்தி லுதித்த தவன்மக னேதியநாச்
சென்றது பெண்மையென் றல்வன்மை யாரினிச் செப்புவமே.

### கிழவோற் பழித்தல்.

வாண்மையும் வின்மையு மோதுஞ் சமரின் மனத்திறமு
மாண்மையுந் தேவரு மூரல்செய் யார்கொ லடுத்திலர்க்குச்
சேண்மையு மண்மை பிறருக்கு மாகியென் சிந்தைநடுக்
காண்மையுங் ளோன்மயில் வெற்பாளைக் கண்டு கலங்கிடினே. ( )

### கிழவோன் வேட்கை, தாங்கற் கருமை சாற்றல்.

குப்பிட மோதுங் கிரீடங் துகளெழுக் கூடி வந்து
நம்பிடத் தேவனைக் காத்தோன் மயில்வனை நாரிவிழி
யம்பிட மோநகைப் பாலோ தழும்பி யசைந்த சொங்கை
வம்பிட மோகுழன் மேலோ மனஞ்சென்ற மார்க்கங்களே. (௫௨)

### பாங்கன், தன்மனத் தழுங்கல்.

விண்ட விளக்கிற் கொளிதனை நல்குதன் மின்மினியோ
கொண்ட வமுதிற் குருசி விடமுங் கொடுப்பதுண்டே
வண்டமர் பூங்குழன் பானுக்கு வேங்கை வடிவுகொண்டோன்
றண்டமிழ்த் தோகை மலைமன்னர்க் கிபான்சொலத் தக்கதின்றே.

### தலைவனோ டழுங்கல்.

அல்லவை நீக்கியு முத்தானஞ் செய்து மறப்புறத்தின்
வல்லபங் காட்டியும் வேலன் மயூர வரையின் மன்னு
நல்லவர் கற்ற மனஞ்சிங்க மேலுற நண்ணிலேயார்
வில்லணி போனுதன் மான்மே லுறவும் விரும்பினையே. (௫௪)

### எவ்விடத் தென்றல்.

காகங் கவிழ்த்தநன் னீர்பாய்வ தோதின்ற கைக்குழந்தை
யாகங் கரையிற் கராத்தந்த தோசெங்கை யள்ளியநீர்
மோகந் தரும்விண்டு பீனை தோசொன் முருகன்மயி
னுக பகிர்நிறை வாதேய மேதந்த நாரியர்க்கே. (௫௫)

### அவனஃ திவ்விடத்தென்றல்.

மாமன் பணியுமஞ் சேறு மயில்வா கனமுருக
நாமன் கடற்கயி லேவிச் செயம்பெற்ற நாட்டில்வஞ்சி
காமன் கணையைந்திற் கண்ணை யிலேவிக் கலக்குமிட
நாமன்பு பெற்ற பசுந்தோகை வெற்பி னகர்ப்புறமே. (௫௬)

### எவ்வியற் றென்றல்.

தந்தை பணிமணிச் சாரன் மயூரத் தனிவரையா
னெந்தனை யாயுதங் கண்காட்டு மோபச் செனும்பரியை
முந்தைய வீட்டையொப் பாமோ வியலு முலையும்வநிருச்
சிந்தை குறைத்த திருவன்ன மானுக்குச் செப்புகவே. (௫௭)

### அவனஃ திவ்வியற் றென்றல்.

நாலெனுஞ் சாதியிற் சண்பக மேனியெண் ணுசிபச்சை
மாலெனச் சக்கரஞ் சங்கேந்துங் கையில் வனக்கொடிக்குப்
பாலெனப் பேசி யிரந்தோன் மயில்வரைப் பாவைமைக்கண்
கோலென வாகு மறிகுழை மேன்மணிக் கொப்பொன் றுமே. (௫௮)

### பாங்கன் இறைவனைத் தேற்றல்.

சங்கார காலனை வான்வழித் தூன்றிய தானவருக்
குங்கார வேலனை மாயூர வெற்பனை யுன்னுதலார்
சிங்காரச் சொற்க முடையாரைக் காணற்கென் சேணெறிக்க
ணிங்காரஞ் சூழ்சிலம் பாவரு மேனிற்றி யில்வயினே. (௫௯)

### தலைவன் கூறுதல்.

மல்லார் கிரணம் விரும்பாத தாமரை யில்லைமதி
மல்லார் மலர்விரும் பாத குமுதமும் வண்டிரண்டே
யுல்லாச வேலன் குமரன் குகன்மயி லோங்கலொப்பாய்
நல்லா டவரை விரும்பாத பேரில்லை நாரியரே. (௬௰)

### குறிவழிச் சேறல்.

இந்திர ஞாலவை யம்போன சேனையை யெஃகின்வரைத்
தந்திரஞ் செய்த முருகேசன் பொன்மயிற் சாரலிஃ
தந்திற் சரவண மீது மருதூர ராதிபதி
சிந்தையிற் செய்த திருக்குள மீதிவண் சேர்விடமே. (௬௧)

### இறைவியைக் காண்டல்.

தாருக வெற்பு மலையு மயில்கொண்டு சாய்த்துமற்றைச்
சூருக வென்ற குகன்மயில் வெற்பிலித் தோகையரே
யோருக மோர்கண மெம்மிறைக் காக்கி யுதவிதழும்
போருக வாசங் கமழச் சுகந்தரப் போந்தவரே. (௬௨)

### இகழ்ந்ததற் கிரங்கல்.

காலஞ்சு மேசெலக் கண்ணைஞ்சி றைப்புலி காத்தன்முதற்
பாலஞ்சு மான குகன்றுறை வெற்பிற் பருத்தன
சாலஞ்சு மந்தகை யென்படு மோவெற்பர் தையன்முத்த
நாலஞ்சு மொன்று நகையென்று பார்ப்பர் நறுமுல்லையே. (௬௩)

### தலைவனை வியத்தல்.

கருவேலை விட்டுக் கரையேற்றி யூழ்தருங் காலனெதிர்
வருவேலை முன்வரு வோன்மயில் வெற்பன் வயப்பெறுநா
ளொருவேலை யஞ்சினன் சூர னுருவடு வுற்றதுமா
னிருவேலை யுற்றுங் குழைதந்த தானம் மிறையுருவே. (௬௪)

### தலைவியை வியத்தல்.

கோடணை வில்லி முசுகுந்தன் சேர்நரக் குஞ்சரிமா
னூட மணஞ்செய் பரங்குன்றி னைம்மயி னைகமின்னார்
கூடலி லணைக்கொம் பால்வந்த காயமுங் கூர்மைபெற்ற
வாடருங் காயமு மாற்றுவ தார்வாய் மருந்தன்றியே. (௬௫)

### தலைவன்றனக்குத் தலைவிநிலைகூறல்.

தொட்டிற் சிறையுற் றயனைக் குரவந்தஞ் சொல்வினவிக்
குட்டிற் சிறைவைத்த வேலன் பரமயிற் குன்றமின்னார்
சிட்டிற் புணர்ப்பினை நோக்குமெ வருவழிச் செல்லுங்கொங்கை
வட்டிற் குறிமகி ழுங்குளிர் விக்குமெய் வாழையினே. (௬௬)

### இதுவுமது.

மருவிப் பிரிந்த கலைமானை யுன்னி மறத்தியெனு
முருவிக்கு வேட வடிவெடுத் தோன்மயி லோங்கலின்வா
யருவித் தினையிலொர் பொன்மறி மான்விளை யாடல்கண்டேன்
றருவிப் புனத்தை யகல்பா ருரிந்தஞ் சுடர்வெற்பனே. (௬௭)

### தலைவன் சேறல்.

பாலும் பழமுங் கமலத்தி லேகொண்டு பாக்கிலையு
மேலுமும் வைத்திள நீர்தாகந் தீர விரண்டகலு
நாலுஞ் சுமந்தெதிர் தோன்றுங்கொ லோதெய்வநாகதொழுங்கூர்
வேலு மயிலு முடையபி ரான்மயில் வெற்பகத்தே. (௬௮)

### தலைவியைக் காண்டல்.

மலைமே லருவி யெழுந்தென்ன மைக்கு வளைத்தரள
முலைமே லருவி விழவள்ளி மாது முகிழ்நகைக்காக்
கொலைமே லருவித் தினைசுற் றும்வேண் மயிற்குன்றின்மன
நிலைமே லருவினை மாதவி வாய்க்கண்டு நொந்தனமே. (௬௯)

### கலவியின் மகிழ்தல்.

முயலுங் கலவி முயலும் பிணையு முதிர்கனித்தேன்
வயலுங் குளமு நிறையு முருகன் மயில்வரைக்கென்
செயலும் விரும்புஞ் சமயோக மென்றுந் தெவிட்டுவதன்
றியலுங் கலவ மயிலன்ன கூந்த லிளம்பிடியே. (௭௰)

### புகழ்தல்.

ஆயமுன் னார்க்குச் செயுமாயக் கீட்டு மருண்முடிப்பும்
நாயமென் றேகொண்ட செவ்வேள் குகன்மயி லாகமின்னே
நேயமு றுமழற் பயவுத ரம்பெற்று நின்குழற்கீ
ரேய மருந்துள்ளி யாகாயம் புக்க வெழிலிகளே. (௭௧)

### தலைவியைப், பாங்கியோடு வருகெனப்பகர்தல்.

ஒருமைமயி னீவர னீகா னகல்புனை யோதுஞ்செவ்வே
ளருண்மயில் வெற்பிற் கணைக்கறு செல்வ மவர்நறையொப்பா
மருவுஞ்ச காயத் துணையற்ற நின்னை மருவல்பொல்லா
விருவினைறி விட்டனர் நேர்மலர்க் கூந்த லிளம்பிடியே. (௭௨)

### பாங்கிற், கூட்டல்.

விழிக்காவி போலு முருகன் மயில்வரை மேற்கொடிக்கால்
வழிச்சாரி நோக்கியு மாண்கூடும் பேட்டை மகிழ்ந்துகண்டுங்
கழிச்சார் துறைவழி மீன்வரத் தள்ளியுங் கானடையிற்
பழிக்காச றீர்ந்துநும் மாயத்தை மேவு பசுங்கொடியே. (௭௩)

பாங்கற்கூட்ட முற்றிற்று.

---

## ஒன்பதாவது — பாங்கி மதியுடம்பாடு.

### நாற்றத்தா லையமுற்றோர்தல்.

கனத்தால் விளங்கிய வோதிக்குண் டாங்கொல் கடிபெரிய
தனத்தார்க்கு மம்புண் டிபரெவ் வனத்தினுஞ் சாருமயன்
மனத்தார் வெறியே யெனினு முருகன் மயில்வரைக்கெ
ளினத்தார் கிளிக்குப் பெருவாச மேவிய தென்னை நெஞ்சே. (௭௪)

### தான்புனையா எழில்கண்டு ஐயமுற்றோர்தல்.

விழலுக்கு நீரிறைத் தாங்குப் பிறவன்பு மேயினர்தந்
நிழலுக்கு நீங்கு முருகன் மயில்வரை நேரலர்போற்
குழலுக்கு நன்று குறிஞ்சியென் றேகொண்டு கூர்விழிசேர்
தழலுக் கனைய தளிர்மேனி கொண்டதென் னயிலிழையே. (௭௫)

### இறைவிதனைத்தான் புனையா வெழில்கண்டைய முற்றோர்தல்.

வினைக்குறையென் னினும் பர்க்கலையோ வகம் வேண்டினர்பொற்
பனைக்குறை கொள்கை வளைவிள்வ ரோபுனம் பாடியமா
தினைக்குறை சொல்லிப் புகழ்ந்தோன் மயில்வரைத் தேம்பொழிபூ
மனைக்குறை மான்விழி நன்மைகொள் வாத மயக்கமென்னே. ()

## பிறைதொழுகென்றல்.

கொற்றவர் வில்வில் லம்பின் மதகரிக் கோட்டினல்லார்
சொற்ற புணையின் மயில்வரை நாதன் றொடர்ந்தபன்றிக்
கிற்ற மருப்பிற் கீர் மலரினு மேனர் நுதலிற்
பொற்ற நகையிற் பிறைவந்த தாற்றொழு பூந்திருவே. (எஎ)

## தலைவி மறுத்தல்.

இறைமகன் மாதுலன் சாபமுங் கோபமு மேற்றுடலங்
குறைத னிறைத லுளதுப தேசி கொடுமொழிகொண்
டிறைவனு வேண்மயில் வெற்பி லரன்றிட்டி யுற்றொருநான்
மறையுங் குடிலை மதிக்கேது நான்சம் மதிவணக்கே. (எஅ)

## ஊசல் முதலன மறுத்தலால் ஐயமுற்றோர்தல்.

காதன வூசலுங் கொங்கையிற் பந்துங் கழங்குநகைப்
போதன மூரலுந் தேவருக் கெய்திய புன்கணறச்
சேதன்ஞ் செய்சண் முகவேண் மயில்வெற்பிற் றேசுடைய
மாதனம் பூவையுந் தேடாத தென்ன மதிமயக்கே. (எகூ)

## செய்வினை மறைப்பால் ஐயமுற்றோர்தல்.

அல்லிளங் கூந்தன் மடமாது தன்செய லல்லசெய்கை
நல்லிள ர்க்கச் சுறுவதுண் டோகதிர் நாதனுஞ்சேர்
மெல்லிளந் தோகையும் பூசித்த வேண்மயில் வெற்பினிலாம்
பல்லிளங் காவிபலரா திதழ்கொண்ட பங்கயமே. (அ௰)

## ஆயநீங்கி அருநெறிப்போதல்கண் டையமுற்றோர்தல்.

கொடைகற்ற மன்னவர் வேட்டஞ்செய் கானிற்றங் கோதிமத்தி
னடைகற்க வோபிறர் காணுது தத்தை நவிலும்விறு
விடைகற்க வோமயில் செல்லு மயில்வரை வேண்மருவார்
படைகற்ற காட்டிச் செலும்புரம் போலும் படர்வனத்தே. (அக)

## ஒருழைப் பயிற்சிகண் டையமுற்றோர்தல்.

மருத்து நராதிபன் றாமரைப் பொய்கையின் மற்றவனே
கருதிய வாயிரத் தூண்மண்ட பத்திற் கடம்பணிவேள்
வருதிசெய் தோகை மலையி லரச வனத்தினிதம்
பருதியை நோக்கு மலர்போற் கிளிசென்று பார்ப்பதென்னே. ()

## அவ்வகைதன்னு லையந்தீர்தல்.

ஐய மெழுவகை யானு மகன்றன வாதலினன்
மையமர் கண்ணியைப் பேரறிவுற்றது மான்மருகன்
செய்யபொன் மான்மகள் சேர்வேண் மயூரச் சிலம்பின்மண
நெய்யமர் கூந்தல் வளர்ந்தில தோன்றில நேர்முலையே. (அங)

## மெய்யினுற் கவர்பொருட் சொல்லி நாடல்.

கோடிக்கு ளானூ தனத்தாரும் பல்வடுக் கொண்டனர்கொண்
டாடிக்கை பேல்புரி கோக்க ளும் வின்மை யழிந்ததுண்டே
தேடிக் கதிர்பணி சேந்தன் மயில்வரைச் சேயிழைதன்
னேடிக் குளமறைப் பேது வருந்துய ரோதுனக்கே. (அச)

## பொய்யினுற் கவர்பொருட் சொல்லி நாடல்.

என்ன புகல்வ தினியான் மலர்த்தடத் தெய்துமிரு [டோர்
கன்னன் மொழிச்சியர் சேர்வேண் மயிற்வெற்பிற் கத்திகொண்
மன்னர் தலைகொய் திசைந்த திருமுகம் வைத்தனர்கை [டே.
நென்னலின் போல்பவர்க் கேய்ந்த மணமென்று நேர்ந்துகொண்

## மெய்யினும் பொய்யினுங் கவர்பொருட் சொல்லி நாடல்.

வம்பார் புலிகொண்ட சூரன முகனறன மகன மகனுரு
செம்பாற் கரனும் பணிவேண் மயூரச் சிலம்பிலென்னே
கொம்பாருந் தும்பி யொருவன் றனுவைக் குழைத்த கன்னோர்
கம்பாவ தோளைந் துருவின் மதனென்ப ராயிழையே. (அரு)

## சுனைவியந்துரைத்தல்.

காராடல் செய்யுங் குறிஞ்சியை வேய்தந்து கங்குசுற்றிப்
பாராடு மாம்பல் வடுச்செய்து வேல்சிவப் பாக்கிவஞ்சச்
சூரா டனீகந் துகளாக்கி வேள்பசுந் தோகை வெற்பிற்
போராடல் போலச் சுனையாட லற்புதம் பொற்கொடியே. (அஎ)

## பெட்டவாயில் பெற்றுச் சேறல்.

நாளொன்று போலப்பன் னூரு மெளிதன்று நாமகிழ்ந்து
வேளொன் றியமருங் காரை மருவுதல் வேடர்வனத்
தாளொன்று தாரென்றுக் காவார் மயில்வரை யான்சமலத்
தாளொன்றவரிற் சகிக்கோதிப் பேரின்பஞ் சார்குவனே. (அஅ)

## இரவு வலியுறுத்தல்.

உடைநகை யொப்பனை பாகன்ன வார்த்தைவெள் ளோதிமத்தி
னடைகுண மொன்று மயில்வரை யான்செக நாதன்கைவேற்
படைவிழி காட்டு முயிருமொன் றென்பதைப் பாங்கிமின்னே
யடைமனத் தைய மில்லைய வாருக்கென் னுருவதே. (அகூ)

## இருவருமுளவழி யொருமையிற் போதல்.

பூதேவி யுங்கிருப் பாற்கடற் பால்வந்து பொற்பிருந்த
சீதே வியுமென வைகினராலித் தெரிவையரு
மாதேவி பாலன்குன் றக்குடி யானருள் வாய்த்ததுதப்
பாதே வியப்புள்ள நான்மா லெனச்சொற் பகருவனே. (கூ0)

### ஊர் வினாதல்.

சீரூருங் காரைக் குடிகொண் டிருமதி சேர்ந்துகட
மேலூர் குமிழ்ப்பட்டி காட்டிமுத் தூரெல்லை யெய்தவுற்றுய்
பாரூருக் கிப்படிச் சென்னெறி காட்டிடிற் பச்சைமயி
லாரூர்குன் றக்குடி கைவச மாக்குவ ரணங்கே. (௬௧)

### பெயர் வினாதல்.

புலனைந்தி லொன்றயன் வைத்தில னேமணப் பூங்கொடியென்
றலம்வந் திடாமற் குழைகொப் பிசைத்தகம் மாளன்கொண்ட
பலனென்ன போகந்தன் னேகையஞ் சாரலிற் பாவைநின்னூர்
நலன்விண்டி டாயென்னி னும்பே ருரைக்கினு நன்மையுண்டே.

### இடை வினாதல்.

கண்ணேறு பட்டது வோவயன் செய்தல் கருதிலனே
வுண்ணோர் சுனையு மதன்மேற் கமலமு மோர்ந்தனம்யாம்
விண்ணே மலருமுல் லோகந்த வேண்மயில் வெற்பினின்ற
பெண்ணே கொடிதெரிக் கேமில்லை யென்னினும் பேதைமையே.

### மொழியாமை வினாதல்.

முத்தத்தை யாம்ப லளிக்குமென் றேசு முகமதித்தா
வித்தத்தை வாய்ப்பகன் மேவுமென் றுமே வினருக்குவா
யத்தத்தைக் காட்டிற் பிழையோ மயில்வரை யாரருள்போ
லித்தத்தை நீக்க மொழியா விரதமெ னேந்திழையே. (௬௪)

### இடை வினாவிற் கெதிர்மொழி கொடுத்தல்.

விடைக்கொடி கட்டி மகன்றேவ குஞ்சரி மென்குறிஞ்சிச்
சடைக்கொடி பாகனெம் மான்றோகை வெற்பிற் றனிச்சுடர்வேற்
படைக்கொடி யீர்திரு மாலுமன் றேடிவிப் பார்த்திபர்நீ
ரிடைக்கொடி மேல்வந்த தேட்டமென் னேவுமக் கெய்தியதே.

### கண்ணியேந்தி நண்ணி வினாதல்.

பார்க்கினும் போலும்பொற் றோகைநங் கண்ணியிற்பட்டு நென்னற்
சேர்க்கையை யெண்ணிப் படர்ந்தத னுலைத் தேடினஞ்சூர்ப்
போர்க்கயில் கொண்ட முருகன் மயில்வரைப் பொற்கொடியீ
ரார்க்குந் தவறுண்டு கண்டான் மறைப்ப தறிவின்மையே.

### எதிர்மொழி கொடுத்தல்.

காவின் மயிலுக்கு நீர்வைத்த கண்ணி தலையினீ கண்டேன்
றேவி மலைமகள் பாலன் மயில்வரை தேடியிந்தப்
பூவிற் றினைப்புன மெல்லாந் துருவியிப் போதுமலர்க்
காவினி னீர்கொண்ட கண்ணிகண் டேன்கொடிக் காவிடத்தே.

### தழையேந்திநின்று வினாதல்.

றையற் படாதக்கலையான் மயில்வரைத் தையலிர்நீர்
வையத் தருவன வார்த்தைசொன் னீர்பயிர் வையமெல்லா
மூய்யப்பல் கோடி விலங்கடித் தோஞ்செல் லொளிக்குழைநங்
கையிற் செறிந்தன பார்த்தும்பொய் போலக் கருதலென்னே. ( )

### எதிர்மொழி கொடுத்தல்.

பாருல கிற்செல் லொளிக்குழை கைக்கொண்ட பார்த்திபர்க
ளாருல கோருய்யக் கோடி விலங்கடித் தாரெவர்நுஞ்
சீருள நீதியும் வாழ்வுநன் றாயின சேந்தன் பச்சை
யேருநீ தோகை மலையில் விளங்கு மிறையவரே. (௯௯)

### சிங்கம் வினாதல்.

தங்கத்தை யன்ன வடிவீர் வியதுக்குத் தக்க சொல்லாய்ப்
பங்கத்தை யெண்ணி யுரைத்தீ ருமைபெற்ற பாலன்பச்சை
யங்கச் சிகண்டி மலைமே லுமதிடை யாமெனுமோர்
சிங்கத்தை நீர்வரக் கண்டா லுரைமின்கள் சென்னெறியே. (௱)

### எதிர்மொழி கொடுத்தல்.

வன்னி தொடரும் வன்மா யுலக மடுத்தபிறைச்
சென்னி மகன்குகன் மாயூர வெற்பினிற் றேடவெங்கான்
றுன்னிய சிங்க மறிந்திலஞ் சோதிடர் சொற்றதுண்டே
கன்னி தொடர்சிங்க நும்போற் குடிலங் கலந்ததின்றே. (௱௧)

### புலி வினாதல்.

சூலக் கடிப்பிட் டுடைவா ளுரீஇக்கை துணித்தனங்கார்க்
கோலத்த பூமல ராவேங்கை வந்தது கூறுங்கண்டா
லாலத்தை யன்னகண் ணீர்பரி யாச மடைத்த செப்போ
ஞாலத்தில் வேண்மயில் வெற்பினி லும்வாய் நறுங்கனியே. (௱௨)

### எதிர்மொழி கொடுத்தல்.

உரைத்தது வேங்கை யெனிற்பூ வுதவு முழுவையென்று
விரைத்தலன் னீரின்று புல்லெனில் வீரமென் னுமிறையோர்
வரைத்த கொடுவரி நாடுவ ரோமெய்க்கை வல்லியமேல்
விரைத்த கடம்பன் மயில்வரை சார்ந்தவர் மேவுவரே. (௱௩)

### வேழம் வினாதல்.

பாடாத தும்பி யணியாத மாதங்கம் பட்சியொன்றிற்
கோடாத நாகஞ் சுடாத கரிகொடி யோர்சிறைக்குத்
தேடா விலங்கு குகன்மயில் வெற்பிற் றெறித்தகொம்பு
வாடாத மாவென் பதுகாய மேவி வரிற்சொல்லுமே. (௱௪)

### எதிர்மொழி கொடுத்தல்.

பாடிய தும்பி யணிகின்ற மாதங்கம் பட்டுயொன் றிற்
கோடிய நாகங்கள் சுட்ட கரிகொடி யோர்சிறைக்குத்
தேடும் விலங்கு குகன்மயில் வெற்பிற் றெறித்தகொம்பு
வாடிய மாவுண்டு காயத்தி லானை வருவதின்றே. (௱௫)

### பன்றி வினுதல்.

மருகியைக் கொண்ட மனையாளை முன்ன மருப்பெடுத்துப்
பெருமுத லாதி பதமலர் தேடிப் பிளந்துலகைத்
திருவிய கோலக் குலக்கோலம் வேலவன் றேறுகைவெற்பி
லுருவிய வேலிது கண்டதுண் டோவந்த தோதுங்களே. (௱௬)

### எதிர்மொழி கொடுத்தல்.

அடிப்பார் பலருண்டு காப்பார்க ளில்லனத் தாங்கவரை
நொடிப்பாய் வினவு மயில்வரை நாதனை நோக்கியெம்மூர்க்
கடிப்பரீர் முரசங் கறங்கிய போர்தெங்கள் கைக்குடிலி
னிடிப்பார் தினையந்த மாக்கோலம் வேல்பட் டிருப்ப துண்டே. ()

### கரடி வினுதல்.

பணித்தச்ச னுக்குப் பகைகுதி ரைத்தடமீ பார்த்தவற்கு
மணித்தொட்டின் மாதை யளித்த திராகவன் வானரத்தி
னணித்தலை மைக்குரியொன் றனது வேண்மயி லார்வரைபோற்
கணித்த வுருவத்த பல்லுகந் தென்னெறி காட்டுங்களே. (௱௮)

### எதிர்மொழி கொடுத்தல்.

ஆங்கே யறுகொடும் போர்புரிந் தீரஙீ தன்றிமறித்
தீங்கே யொருபுற்கு வாளெறிந் தீர்ங்க ரேதுபுனப்
பாங்கேமெய்த் தாங்கல்வென் றீர்பல் லுகம்வரப் பார்த்திலம்யாங்
காங்கேயன் றேறுகை மலையென்பர் பல்லுகங் கண்டதுவே. (௱௯)

### மரை வினுதல்.

பைத்தீ ரணியவர் தாமரை யென்றுசொல் பட்டங்கட்டி
வைத்தாம் வடமற்று வந்ததுண் டோபொன் மயில்வரைபோற்
சத்தான நாதற் கணியாகுஞ் சாமரை சாற்றிலின்ப
வித்தா யெமக்குமு தாயென் றுரெய்துவிர் மேன்மைகளே. (௱௰)

### எதிர்மொழிகொடுத்தல்.

சாமரை யென்னி னடவா துலகினிற் றுமரைமேற்
காமரைப் போலப் பறிப்பீர் மயில்வெற்பிற் கார்மயிலா
மாமரை முன்பட்டங் கட்டிவைத் தோனருள் வாய்த்திடினே
பாமரை நாழிகை யிற்பட்டங் கட்டுவ தாருக்குமே. (௱௰௧)

## மான்வினுதல்.

மறிபிணை யென்று திரிசொல்லி னுமிரு மன்னர் துணைப்
பிறிதலை மேவ வருத்திய தாறு பெரும்படைவீட்
டெற்றிமுனை யெஃகன் மயில்வரை நாதற்கொ ரேந்திழைநல்
லறிவி னளித்தது மான்வரிற் சொல்லு மரிவையரே. (கக௨)

## எதிர்மொழி கொடுத்தல்.

ஏதமில் லாமன் மறியென்கி லோம்பிணை யென்றவரை
மோதம ராகினும் விள்ளுகி லோந்தங்கண் முன்வருமான்
போத லறிகிலந் தோகையஞ் சாரற்புத் தேண்முருகன்
றூதைக்கைப் பட்டதுண் டோர்மான் முனிவர் தழற்பிறந்தே. ()

## முயல்வினுதல்.

சஞ்சீ வகன்மகிழ் கேசரி மார்க்கந் தவறச்செய்து
வஞ்சீ சரித்தது சோமற்கு நாமம் வழங்கியது
பஞ்சீ கரித்த புவிநாதன் றூகைப் பருப்பதமெய்
துஞ்சீ தளச்சுனை யுண்ணு முயல்வந்த தோமெலிந்தே. (ககச)

## எதிர்மொழி கொடுத்தல்.

பூருவ பக்கத் துவாமதி யோனைப் பொருக்கெனவே
பாரு மிருக்கு முயல்குகன் றூகைப் பருப்பதத்தா
ராரு மறிவர் சிவன்கான் முயலை யவருடன்போய்
நேரு மெமக்கு முயலேதுண் டாயிடி னீர்சொல்லுமே. (ககரு)

## மனம் வினுதல்.

வாளா வினவினம் பற்பல செய்கை வருவததிற்
கேளா தனநும்மிற் கேட்டது வேதிண்ணன் கேடிறெண்டு
நாளாறிற் கொண்டபி ரான்மகன் வேண்மயி னுகத்தினும்
மாளாகி யிப்புனங் காப்போம்பொன் மானை யளித்திடினே. ()

## எதிர்மொழி கொடுத்தல்.

கற்கட கமதி போலாகி னீரெங்கள் காட்டிற்குவீண்
மற்க டகமனந் தீர்த்தோன் முருகன் மயில்வரைமேற்
சொற்க டகர்தன சொல்லாது போமுன் றொடர்ந்தபொன்மா
னிற்கட காஞ்செங்கை யேந்துங் குழைக ளிறையவரே. (ககஎ)

## வழிவினுதல்

சுரமெது கந்தன் மயூர கிரிக்குத் தொடர்ந்தசரி
சரவணத் திற்கெது வாரி யெதுதிருச் சன்னிதிக்கே
யரச வனத்திற் கெதுபட் டமத்தம்மை யாபுரிக்கே
துரையு மருது துரைசெய் தடாகத்துக் கோர்நெறியே. (ககஅ)

எதிர்மொழி கொடுத்தல்.

நீரறி வீர்நெறி யுத்திர மேலத்த நீண்டபட்ட
மூரவர் விட்டன வான்பாரும் வாரி யொலித்திடுமின்
னூரகங் கையிற் சரியுண்டு வெஞ்சுர மாய்மயில்வெற்
பாரடி யாருக்கின் றாருக்குப் பாதை பதமலரே. (ககக)

தலைவன் நயந்துரையாடல்.

நான்வைத்த கண்ணி யொடும்வந்த தோகையை நாடறிய
மான்வைத்த கண்ணி தரினுண்டு புண்ணிய மற்றினிச்செந்
தேன்வைத்த நின்சொன் மறிப்பா ரெவரெங்கள் சேந்தன்மயிற்
கோன்வைத்த கோல மணிமுடித் தோகையங் குன்றிடத்தே. ()

யாரேயிவர்மனத் தெண்ணம்யாதெனத்தேர்தல்.

சொல்லாதன சொல்லி யும்பிரி யான்சொற்க டுச்சமென்ப
தல்லா னிசமுமின் றன்றிக் கவர்பொரு ளாயதுகை
வில்லானு மின்று முருகன் மயில்வரை மேவிநின் றுங்
கல்லா நெறியி னுரையா டினனெண்ணங் கண்டிலனே. (கஉக)

எண்ணந்தெளிதல்.

அவ்வகை யானைய முன்றீர்ந் தனமிவட் காளிமுத
லிவ்வகை யானைய மன்னர்க்கு மாறின மேந்திழைக்கா
வைவகை யூர்சுற்றி னோன்மயில் வெற்பினம் மாயிழைக்குக்
கைவகை செய்தவர் வேறு ரிவரன்றிக் காசினிக்கே. (கஉஉ)

பாங்கியை நகுதல்.

புனங்காவ லுக்குவந் தீரோ குகன்மயிற் பூதரத்தார்
மனங்காவ லுக்குவந் தீரோ முலைகண்ட வாரணங்கள்
கனங்காவல் கொண்ட குழலீர் வருமியல் கண்டுமெயி
லினங்கா வலம்புங் கருந்தினைப் போர்பெரி தேறிடுமே. (கஉங)

தோழி, இறைவனை நகுதல்.

பரதர் குலம்புரி காதையிற் கோட்டிற் பழம்பொருந்தல்
விரதம் பிறவினன் றேயயில் வேண்மயில் வெற்பினினும்
கரபங்க யத்திற் குழையு மிருகமுங் கண்ணியுஞ்சொற்
சரதமி லாமையுங் காரியம் யாவும் தருந்தருமே. (கஉச)

மதியினவரவர் மனக்கருத்துணர்தல்.

மேலாந் திருக்குவி வேகத்தி னத்து விதந்தெரித்தார்
காலா விராகவன் பொன்மான் றொடர்ந்தது காரிகைக்கே
பாலா மிவர்க்குமற் றென்குகன் றோகைப் பருப்பதத்தின்
மாலா யினண்மெல்ல வெண்பிறை தோன்றி மறைகின்றதே. ()

பாங்கி மதியுடம்பாடு முற்றிற்று.

## பத்தாவது—பாங்கியிற் கூட்டம்.

புதுமிறை யிரப்பிற்குச் சகியுரையாடல்.

தேனுக்குச் சாதியும் வேங்கையு மெய்தில்லன் சேர்பயனோர்
சூனுக்குப் பாற்கட லீந்தோர் மகன்குகன் ஞேகைவெற்பி
லூனுக்குச் சிங்கங் கரிவேட்ட மன்றி யுருது மன்னர்
கோனுக்கென் னேதனி யானிற்கு மிவ்வுரிக் கொள்பயனே. ()

தலைவ னுட்கோள் சாற்றல்.

குன்றக் குடிக்குமரேசன்கை வேல்பொருங் கூர்விழிமான்
மன்றற் கெணைக்கலை மாறைகச் செய்தரை வாசிதர
வின்கறைக் கிரண்டு தனக்குடங் கொள்ள விசையிலன்றே
தென்றற் குழலி நடையீர் பகர்பணி செய்வதுவே. (கஉஎ)

பாங்கி, குலமுறை கிளத்தல்.

பங்கந் தருங்குலம் பார்க்கினுஞ் சேர்க்கையைப் பண்ணினுந்தாழ்
சங்கம் பழத்தைத் தாளமொவ் வாது சரியெனவே
வங்கந் தனைவெள்ளிக் கோதுவரோபொன் மயில்வரைமேற்
றுங்கஞ் செறிமயில் வேள்போ லுமக்குநந் தோகைக்குமே.

தலைவன் தலைவி தன்னை யுயர்த்தல்.

மன்னர்க்கு நாற்குல மாசிலைச் சேரின் மயில்வரைவேண்
முன்னுக் கெனையவர் போலென்ற லானு முதிர்ந்ததவப் [வ்வி
பொன்னுக்கும் வீரர்குங் கற்றோர்க்கும் யௌவனம் போந்த செ
மின்னுக்குந் தாழ்வின் றெனலானும் பூத்த வியன்கொடியே. ()

நன்னுதற்பாங்கி, அறியாள் போன்று வினுதல்.

ஆறுமு கேசன்குன் றக்குடி யானருள் போல்விளைந்துஞ்
சேறக லாத வயலூர வான்புடை சேர்ந்துமின்னு
மூறகன் மீனு மறனு நிகரன்றிவ் வூர்மடவார்
கூறு மளவிற் கெவரென்றி யானும்மிற் கூட்டுவதே (கஙo)

இறையோ, னிறைவி தன்மை யியம்பல்.

தனைமே லெனச்செய்த சேந்தன் மயில்வரை யேந்திழையாண்
மனைமேல் வலைப்பட்ட மானுருக் காணின் மழைமயிலாந்
தினைமேல் வளர்த்த பசுங்கிளி நின்னுயிர்ச் சேக்கைசெங்கட்
சுனைமேற் பிடிபவ ளக்கொடி சன்னத் துடியிடையே. (கஙக)

பாங்கி, தலைவி யருமை சாற்றல்.

தேனுந் தினையுங் குறவள்ளி போலத் திரட்டிநெடு
வானஞ்சுந் தோகை மலைவேட் குதவ வருமொருநாட்
கானு நிதியு மமுதமுஞ் சேரினுங் கைப்பெறுமோ
நானும்பு காதது நீயுஞ்செல் லாதது நன்மனையே. (கஙஉ)

### தலைவன், இன்றியமையாமை யியம்பல்.

பூவுண்டு சஞ்சாரி கங்கட் கதிர்சிறைப் போகிக்கட்குக்
காவுண்டு கார்க்கு மலையுண்டு விண்ணுக்குங் காசினிக்குங்
கோவுண்டு தோகை மலைவேல னுமக் கொடியவன்கை
பேவுண்டு வந்த வெமக்கா ருமையன்றி யேந்திழையே. (௧௯௯)

### பாங்கி, நின்குறை நீயே சென்றுரை யென்றல்.

கற்றாரைக் கற்றவர் கல்லாரைக் கல்லார் களிப்பர்கண்டு
மற்றா ருரைக்கினுஞ் செஞ்செவிச் செல்கில வாரிசுற்றும்
பற்றாரை வென்ற முருகன் மயில்வரைப் பாரிலின்பம்
விற்றாருங் கொண்ட வருமண்மை கூறின் மிறையில்லையே. (௨௦௦)

### பாங்கியைத் தலைவன் பழித்தல்.

வட்டின் மதியை வரவழைப் பீர்மதி லோவியத்தைக்
கட்டி முகம னுரையுமென் பீர்களித் தாவலமே
கொட்டி முருகன் மயில்வரைக் கேயெதிர் கூய்த்திரிவீர்
கெட்டி யுமைப்பெண் குறைமுடிப் பீரென்று கேட்கின்றதே. ()

### பாங்கி, பேதைமை யூட்டல்.

பொன்னலர் காவிற் றிராமிளம் பூவை புக்கவதுண்டோ
கொன்னலர் வேழங் குழையா லடுஞ்சிந்தை கொண்டுசொற்றாய்
மின்னலர் வேலனை மாயூர வெற்பனை வேதியனை
யுன்னலர் போல்வன்கண் மாதர்க்குண் டோவுன் னுழையுறவே. ()

### காதலன் தலைவி, மூதறிவுடைமை மொழிதல்.

வளநீர்ப் பரவையில் வந்தவன் றேர்மிசை நிட்களஞ்ச
களநீர்மை யானவன் றோகையஞ் சாரலிற் காரிகையா
ருளநீ ரறிந்திலி ரோர்நாட் டுயர்ந்த தறிந்திரண்டா
மிளநீர் கொடுத்தி தாகந் தவிர்த்ததுண் டென்னெஞ்சிலே. ()

### பாங்கி, முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்.

மன்னர் கொடுத்த மரியாதந் தோகை மலைக்குமரன்
றன்ன தருளில் வரும்போக மாதவர் சாபநல்லோர்
சொன்ன வசனம் பிசகாமற் றாங்குந் தொடர்பகலா
க்கன்னன் மொழியவர் தாம்வேண்டு மின்பமுங் காவலர்க்கே. ()

### தன்னிலை தலைவன் சாற்றல்.

ஆறு முகன்குகன் றோகை மலைப்பயி லஞ்சுகமே
மாறுசெய் தென்னுடன் போர்செய் கொடிய மதன்கையம்பாற்
பீறிய மெய்யெனும் போர்வைக்குத் தையலைப் பேணினல்லா
லூறக லாது பெரும்பாச முன்னரு ளுன்னருளே.. (௧௯)௧

பாங்கி, உலகிய லுரைத்தல்.

வல்லிக் கொடிமணந் தீருச் செயுமெனில் வாய்த்தமலர்
புல்லிக் கொடிமணம் வண்டே யுறுமெனிற் பூங்கமுகிற்
செல்லிக் கொடிதிகழ் சேந்தன் மயில்வரைச் செந்துவர்வா
யல்லிக் கொடிமண நீவிர்செய் யாதினி யார்செய்வரே. (௧௪0)

தலைமகன் மறுத்தல்.

காடும்புக் காடுங் கனியுங் கனியுமங் காயெனக்காய்த்
தேடுங் குகன்மயில் வெற்பினி னீயொன்று செப்பிலென்கை
சூடு மலர்தனை மேற்கொண்டு நன்மொழி சொல்லினுண்டாம்
வாடு மலர்தனைத் தந்தாலுண் டோநன் மணமென்பதே. (௧௪௧)

பாங்கி அஞ்சி யச்சுறுத்தல்.

வருமாலை யானனம் வெம்புலிப் போத்துங்கை மாத்திரளுங்
குருமாலைக் காலமு மாறலைப் பார்தங் கொலையுமன்று
வுருமாலை யண்ணிய சேந்தன் மயில்வரைக் குன்னலரென்
றிருமாலை மேற்கொண்ட மின்னார்க ளில்லைத்திருவன் றியே. (௧௪௨)

ஆங்கவன், கையுறை புகழ்தல்.

கதிரோன் கதிர்க்கு விகாசிக்கு மாலை கழுத்தினிற்சேர்
நிதிதாழ் சுருக்கைமின் னார்தருங் கத்திகை நெட்டிலைவேற்
பதிவாழ் மயூர கிரிக்காசைப் புட்படப் பட்டகண்ணி
யதிரா வருமதிக் கீசன்பொன் னார மரிவையர்க்கே. (௧௪௩)

தையல் மறுத்தல்.

ஆரக் கழுத்திய ரெஞ்சாதிக் கில்லை யணிக்கழுத்திற்
சேரச் சுருக்கை யிடுவாருண் டோநத் திகைபுனைவார்
வீரப் புயத்தார் சுவாமி மயில்வரை வேங்கையெண்ணிப்
பாரப் பறையறை போதிலெப் போதும் பரிப்பதுண்டே. (௧௪௪)

ஆற்றுநெஞ்சினோ டவன்புலத்தல்.

ஏன்மாலை யோதியு நீங்கா திரந்து மிரங்கலளாய்
நன்மாது நின்றனள் வேலன் மயில்வரை நண்ணினர்போன்
மின்மா சகலுஞ்செங் கையணி யீதல் விரும்பினர்தோ
பொன்மாலை வேண்டிலர் முத்திரை யாழி பொறுப்பதின்றே. ()

அவள், ஆற்றுவித்தகற்றல்.

மாலையி லேயொரு மாலையைக் காட்டியுன் மாலைவிண்டு
காலையி லேமலர்க் காலையும் வேண்டிக் கருத்துரைப்பேன்
சோலை மயில்வரை யான்கால் பிடித்துத் தொடர்ந்தகொடி
வேலையிற் சூரனைக் காட்டிடுங் காலிவண் மேவனன்றே. (௧௪௬)

இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன்.
மடலே பொருளென மதித்தல்.

பொன்னூரணிகலன் மாமணி யாதி பொருக்கிலராங்
தன்னால் வருந்துன்பந் தானேயொழித்த றகுதியன்றோ
வென்னாதன் வேலன் மயில்வரை போன்முலை யேந்தெழில்சேர்
மின்னாரை வேண்டிற் கருக்கேறுஞ் சிந்தையும் வேண்டுநெஞ்சே.

பாங்கிக், குலகின் மேல்வைத்துரைத்தல்.

செங்கனல் வந்த தகரேறி னோன்மயிற் சேவகன்வான்
கங்கை மகன்குகன் றோகையஞ் சாரற் கனங்குழையீ
ருங்களைப் போலு முதவியில் லாரை யுறிற்சிறியோர்
சங்கீர னவ ரெருக்கணிந் தாடித் தனித்துநின்றே. (௧௪௮)

அதனைத், தன்மேல் வைத்துச்சாற்றல்.

கடம்பெற்ற தாருக னவியும் வெற்புங் கடந்தவைவே
லிடம்பெற்ற செங்கை தரித்தோன் மயில்வரை யேந்திழையீர்
திடம்பெற்ற காசினி யோர்யாவு மங்கையுஞ் சித்திரஞ்சேர்
படம்பெற் றிருக்கிலன் றோதிரு மாலெனப் பாவிப்பரே. (௧௪௯)

பாங்கி, தலைமகளவயவத் தருமைசாற்றல்.

எருக்கொடு நீறு புனைந்து மயறலைக் கேறிமனங்
கருக்கினின் மேவ லெளிதையன் றோகனங் காவல்கொண்ட
சொருக்கினில் வேலன் மயூர கிரியெனத் தோன்றுமுலை
நெருக்கினிற் சற்று மெழுத லரிது நெகிழ்வினையே. (௧௫0)

இ து வு ம து .

என்றன் விருப்பும் வெறுப்புஞ் செலுந்திசை யெங்குஞ்சென்று
நின்றன்பு தந்த மயில்வரை மேவு நிமலனருட்
டன்றந்தை போலெழு பூவும் விசும்புந் தரினுமுயர்
குன்றங் குழைய வெழுத லரிது குவலயத்தே. (௧௫௧)

தலைமகன் தன்னைத் தானே புகழ்தல்.

பழைய செயலும் புதிய செயலும் பயில்செயலும்
விழையுமன் பர்க்குத் தவிர்த்தோன் குகன்மயில் வெற்பணங்கே
தழைவல்லி சாதகத் திற்றீட்டுங் கொம்புக்குன் சார்பிருந்தாற்
குழையு மழகு மலரு மணமுங் குறிக்குவனே. (௧௫௨)

அலர்முலைப் பாங்கி யருளியல் கிளத்தல்.

விரும்பு கவச மருது மகீபதி வேண்டியிட
வரும்பிய வோகை யயில்வேலன் றோகை யணிவரையீர்
குரும்பை முலைப்பெண் பொருட்டாகி யீசனுங் கூட்டுடனே
கரும்பனை மாய்த்தில னீர்மாய்த்த னல்ல கருத்தல்லவே. (௧௫௩)

### கோண்டுநிலை கூறல்.

கடும்பனைக் கைமுகன் பின்னோனில் யாருங் கருதிவிரும்
பிடும்பனை யாளிலை னீக்கிலென் றேருகைப் பெருஞ்சிலைப்பா
தடும்பல பெண்ணை யணைதலை யென்னிற் றயைவருமோ
சொடும்பழி யாருக்கொ லோபின்சொல் வேனிலை கோடலையே. ()

### தலைவி யிளமைத் தன்மை பாங்கி, தலைவற்குணர்த்தல்.

மங்கையு மல்லள் பெதும்பையு மல்லள்பொன் வார்புனையக்
கொங்கையு மல்ல விளநீரு மல்ல குமரன்மயி
லங்கவெற் பாமதக் கூத்துக்குப் பாத்திர மல்லள்விண்பேற்
றங்கிடு மோமுளைக் குஞ்சிற கில்லாத் தனிப்பட்சியே. (௧௫௫)

### தலைவன் தலைவி, வருத்திய வண்ணமுரைத்தல்.

சிங்கத்தின் குட்டி மதமாவிற் பாய்ந்திடுஞ் சித்திரம்போன்
மங்கைக்கு ஞானூற்ற துண்டே முருகன் மயில்வரையாய்
துங்கச் சலத்திற் சரிப்பது மீனுக்குச் சொல்வதுண்டோ
சங்கிற்குக் கூர்மைசெய் பாவமல் லாவெலவர் தந்தவரே. (௧௫௬)

### பாங்கி, செவ்வி யருமை செப்பல்.

ஒருமல ரிற்பல காய்கொள்ளு வாளுயர் பாண்டியபசு
விருகுழி யிற்பதி னைங்குவி டாள்குமரேசன்மயில்
வரையிலு னிச்சை புகல்வதெங் கேபுனம் வாய்த்தசெல்வத்
துரைமக ளுக்கெனைப் போலொரு கோடியர் தோழியரே. ()

### தலைவன், செவ்வி யெளிமை செப்பல்.

தக்க பகுதி விகுதி யிடைநிலை சாரியையுந்
துக்கமில் லாதுறுஞ் சந்திவி காரமுந் தோன்றப்பெண்ணே
கொக்கின் மயிலுங் குருகுங்கண் டோன்மயிற் குன்றுறைவோன்
மிக்குற வந்தன னென்னும் பதநீ விளம்பிடினே. (௧௫௮)

### பாங்கி, என்னைமறைத்தபி னெளிதென நகுதல்.

பாவை நிமித்த முடன்கூடி னுமப் பாவையினைக்
கோவை செயுந்துணை விட்டாடு மோமயிற் குன்றையுள்ளார்
சேவையில் வேண்டல் பெறலா மெனினுமென் சேயிழையை
நீவையம் போற்றப் பெறுவதுண் டோவென்னை நீத்தென்றுமே.

### அந்நகை பொறாஅ தவன் புலம்பல்.

நாலின் முதனகை நான்பெறற் பாற்றன்று நாரியுமை
பாலனிகங் காநதி பாலன் மயில்வரைப் பைந்தொடியாய்
கோல நகையமு தாலம தாகினுங் கூர்விழியா
மால மமுதென வாக்கிய தென்விதி யாந்துணையே. (௧௬௦)

### அவள் தேற்றல்.

திராச் சபதந் தருஞ்சண் பகவல்லி தன்னையும்போய்
சேராத் தமிழ்சொரி சிந்தா மணியையுஞ் சேர்ந்தனரே
வாராப் பொருளுமுண் டோமுயன் றாலெங்கண் மாதுமனை
நேராக் குவன்குகன் றோகையஞ் சாரலி னின்னுடனே. (க௱க)

### கையுறையேற்றல்.

வெப்புங் குளிருஞ் சமமாக்கி யாண்டருள் வேலன்மழை
யப்பு மயூர கிரிக்கிறை வாவுன் னருளடைந்தா
டப்பு நடையறி யாள்கொளத் தக்கது தானிதென்றாற்
கொட்புங் குழையு மறுப்பதுன் டோலைக் கொடுத்தருளே. ()

### கிழவோன் ஆற்றல்.

மானுக்குப் புத்திரி யாகிய மானுக்கும் வானிற்றெய்வ
யானைக்கும் பாகன் மயூர கிரியனை யாண்மலர்க்கை
மேனிற்கு மென்கை முறிகொண்ட போதே விலைப்பொருளாய்
நானிற்கின் றேனெழுத் துச்சோர்வு மில்லை நடுவில்லையே. (க௱௩)

### இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி, இறைவிக் கவன்குறை யுணர்த்தல்.

பூமேலுண் டேயிரு தாமரை யென்பர் புயலணவுங்
காமேலுண் டேயொரு பொற்பிடி யென்பர் கடியமயின்
மாமேல் வருமுரு கன்றோகை வெற்பில் வருமனங்கே
நாமே துரைப்பது பித்தரிற் சொல்கின்ற நல்லவர்க்கே. (க௱௪)

### இறைவி, அறியாள்போன்று குறியாள் கூறல்.

காவில் விளங்கு மயூர கிரிக்கந்தன் கால்பணியும்
பாவை மயிலைக் குயிலாட் டியதுப்பான் ஞைத்தின் வாய்ப்
பூவை மயங்கலும் வேண்டுஞ் சுகம்வெளிப் போதலுநீ
ராவியின் மஞ்சோ டியதும் பிறவு மறிந்திலையே. (க௱௫)

### பாங்கி யிறையோற் கண்டமை பகர்தல்.

கனக வரைநிகர் மாயூர வெற்பன் கருணைபெற்ற
வனகனுன் மேனியைத் தாங்கி வதனம் புயத்தினுக்கே
தினகர னாகி யொருவன்கண் டேன்பொய்யிற் சேர்ந்தபொன்மான்
வனமயி ரேடிப் புனமயி லுன்னிடம் வந்ததுவே. (க௱௬)

### பாங்கியைத் தலைவி மறைத்தல்.

அன்னங்க டாமரை சேருங் குவளை யடைந்திலசூர்
மன்னனை வென்ற வடிவேலன் றோகை வரையவர்க்கே
சின்னம் புகன்றனை நீயுயர் வானிற் செடியுமுண்டோ
வின்ன மினத்தொ டினஞ்சேரு மென்குத லெண்ணலையே. (க௱௭)

### பாங்கி, என்னைமறைப்ப தென்னெனத் தழால்.

காலிருந் தாலு முருகன் மயில்வரைக் காரிகைகண்
வேலிருந் தாலுங் கதிர்தோன் றினுஞ்செல்ல வேண்டுமென
மாலிருந் தாலும் பலரிருந் தாலு மறைந்தொருவர்
பாலிருந் தாலுமென் னல்லா முயற்சி பலிப்பதின்றே. (௧௬௮)

### இதுவுமது.

பொன்னை மறைப்பதுங் கள்ளுண் மறைப்பதும் போகமது
தன்னை மறைப்பதுஞ் சண்முகன் றோகையஞ் சாரலில்வாழ்
மின்னை மறைத்த விடையா யரிதுன்னை விட்டகலா
வென்னை மறைத்த முயற்சியென் னேவுனக் கெய்தியதே. (௧௬௯)

### கையுறை புகழ்தல்.

மன்சொற் கிரங்கிய தோகைச் சிலம்புக் கிறைவருக்கே
முன்சொல் சடைக்கண்ணி யாம்வள்ளிக் காநடு முற்றியசொற்
பின்சொ லவளுக்குத் தாயா நகையாம் பெரிதுமுனக்
கின்சொற்பெண் ணேமன்ன ராரக் குழையென் றியம்பினரே. ()

### தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்.

வில்லையெ டாரம்பு பட்டதுண் டேயென்பர் மெய்யில்பல
சொல்லையி டாரொரு மெய்ம்மொழி நாமென்பர் தோகைவெற்பி
லல்லைம ருர்பக னிங்கார் குகன்பதத் தன்பிலர்போ
லில்லையு ளார்நா லெழுத்தின் குணத்தை யிசைந்தனரே. (௧௭௧

### மறுத்தற் கருமை மாட்டல்.

தேவிற் சிறந்த சுவாமி மயில்வரைத் தென்றிசைக்கே
கோவிற் சிறந்த மருது துரையருட் கொண்டுசெய்த
வாவிக் கமலத் தனம்விளை யாட மயங்குமுன்கட்
காவிக்கு மாரன்கைக் காவிக்கும் வேற்றுமை காணிலுண்டே. ()

### தலைவன், குறிப்புவேறாக நெறிப்படக் கூறல்.

ஆடவியெல் லாங்கொடிப் போதாய் விரிந்தன வாளுமிந்தப்
பூடவியெல் லாம்புனற் போதா யிருந்தன பொன்மயில்சே
ரீடமலை யான்குகன் றன்னருள் பெற்ற விறைவர்க்குண்டோ
படரொழி யாது பனையேறும் புன்றொழில் பாலிப்பதே. (௧௭௩

### தலைவியை முனிதல்.

வனத்தில் வருங்கலை மானைக்கண் ணனை வலைப்படுத்தாற்
புனத்தைவிட் டேகத் தரமல்ல வேவிண் புரந்தரனை
யினத்திற் பதித்த சுவாமி மயின்மலை யேந்திழையுன்
றனத்தணி மூன்றட் சரவாச நாவுக்குத் தக்கதன்றே. (௧௭௪)

### தலைவி பாங்கி, தன்னை முனிதல்.

கலைமா னெனுஞ்சொற் கவர்பொரு ளாகக் கழறினைகார்
மலைமானை மேவுமெம் மான்வேலன் றஞ்சை மலைக்கொடியே
சிலைமா னிரண்டு தொழிலினு முன்சொற் சிறந்ததன்றே
கொலைமா விளம்பிடி நீங்காத காவிற் குறிப்பதென்னே. (௧௭௫)

### தன்கைக் கையுறை, யேற்றல்.

தாமரை போலுமுன் கையென்கை யெம்மனஞ் சார்புமொன்றே
காமன் மருண்மணா வாளன் மயின்மலைக் காரிகையே
நீமலர்க் கண்ணி கொளவின்பப் புள்ளொன்றை நேர்ந்தனன்யான்
மாமதப் பூசைக்கிப் பத்திர மீந்தவர் வாழியவே. (௧௭௬)

### இறைவி கையுறை யேற்றமை பாங்கி, இறைவற் குணர்த்தல்.

தூவியந் தோகை மலைக்குமரேசர்க்குத் தொண்டுசெய்த
காவியங் கண்ணிக்கு நீதந்த மஞ்சரி கைக்கொடுத்தேன்
கோவைவின் டாள்பின்பு லாவுமெய் வண்ணமுங் கூடப்பின்னைப்
பாவைவின் டாள்பின் சகிவிடு தூதும் பகர்ந்தனளே. (௧௭௭)

### குறியிடங் கூறல்.

கையா யுதமயி லான்கொடி காலா யுதக்கிரத்தா
னுய்யா மையிலான் மயிலோன் மயில்வெற்பி லொண்டொடிதன்
மெய்யாகு சாயன் மயிலா யவளின்சொன் மென்கிளியாய்ப்
பொய்யா மிடைகொடி யாய்க்குழல் காவாம் புனமதுவே. (௧௭௮)

### குறியிடத் திறைவியைக் கொண்டுசேறல்.

நிதமா டியசுனை யாடா திருப்பது நீதியன்றே
மதமா விளம்பிடி நீங்காத காவென்ற வார்த்தைபொய்யே
நதியாய் நடந்தனை வேலன் மயில்வரை கண்டனையே
பததா மரைக்கர்ச்சிப் பாராறு தாமரை பாரவரே. (௧௭௯)

### குறியிடத் துய்த்து நீங்கல்.

மலர்தேடி வண்டு வருஞ்செயல் போற்புவி மன்னர்பொய்யாங்
கலைதேடி முன்போல் வரினும் வருவர் கலங்கியஞ்சே [வோன்
லைதேடுங் கண்ணினில் வேண்மயில் வெற்பினம் மாற்றல்கொள்
சிலைதேடி வாங்கியஞ் சம்பும் பறித்துத் திருப்புவனே. (௧௮௦)

### இறையோன், இடத்தெதிர்ப் படுதல்.

தேனிற் சிறந்த கடம்பன்னை வேலன் சிகண்டிவெற்புள்
ளானுக் கரைமனை வேலைவி டோவிறு மாந்தமுலை
யானைக் கெதிர்பொரு தோமதி யாலம் புய்மலர்த்தோ
கானத்து மீனிருட் பெற்றுநின் றுய்பகற் காரிகையே. (௧௮௧)

## இயைதல்.

ஆகம்பிரம்ம மேயென்றது வாதல் பேறு னவளென லான்
முகங்கண் ணிதழ்பொன் வளைசெங்கை பஞ்சடி மூரன்மணஞ்
சுகங்கொங்கை பொன்னணி பெற்றவடன்னுருத்தோர் றினன்பல்
லுகங்கண்ட சேந்தன் மயில்வெற்பி லென்னினி யோதுவதே. ()

## புகழ்தல்.

மேலா மயில்வரை வேளருட் டந்தை வெகுண்டுகையான்
மாலார் சிலம்பு வளைத்தார் தெறித்திலர் மாங்குயினீ
காலாற் சிலம்பு வளைத்துத் தெறித்திடக் கற்றுவிட்டாய்
தோலாத முப்புரந் தீயிட்டு மூவர் சுகம்பெறவே. (கஅங)

## விடுத்தல்.

எழுதிய சித்திர மென்மனைக் கேயுண்டுன் னின்பவுருத்
தழுவிய மெய்யினுண் டாந்துன் பிலேமயிற் றண்வரைவேண்
முழுதரு ளுண்டுமுன் காயாய்ப் பழமாய் முடிந்து முய்ந்தும்
பழுதுகொள் ளாதநும் மாயத்தை மேவு பசுங்கிளியே. (கஅச)

## பாங்கி, மெல்லியற் சார்ந்து கையுறை காட்டல்.

என்றைக்கும் வாழு மருது துரைகும ரேசருக்குக்
குன்றக் குடியில்வைக் குந்தென்னஞ் சோலைக் குளிரிளநீ
ரொன்றுந் தனத்துக் கிணையாகும் பார்கரும் புக்கமுத்த
நன்று நகையென லாங்காவி யாங்க ணளினமின்னே. (கஅரு)

## மையுறு கண்ணியைப் பாங்கிற் கூட்டல்.

மேலாறு கால்கொண்ட யானைகண் மேற்பல வேங்கைகண்டாய்
நாலாறு மான குமரன் மயில்வரை நாரியரே
காலாறு முப்பங்கி லொன்று துவண்டொன்று கன்றியதான்
மாலா ரொருபங்கு வீசமின் னுர்தொழ வாமனைக்கே. (கஅசு)

## நீங்கித் தலைவற் கோம்படை சாற்றல்.

காதல் பெறுமன்றில் பேடையை நீங்காக் கடற்றுறைவா
மாதைமுத் தேவருந் தாங்கினர் நீவிடின் மஞ்ஞைவரை
நாத னடையலன் போல்வடுச் சேரு நடத்துணியு
மோதற் குருகும் பிணிமுக முப்பெற வுற்றிடுமே. (கஅஎ)

## விருந்து விலக்கல்.

அருவியும் வெற்பும் புயமுமுத் தாரமு மாகநின்னைத்
திருகும் பிடிக்கு மதயானை யாயிர வுண்டிருந்து
மருது துரைசெய்த தைப்பூசத் தேர்மிசை மஞ்ஞைவரை
முருகன் வரக்கண்டு நின்னூர்க்குப் போதி முறையுரைத்தே. ()

### பெருந்தகை விருந்திறை, விரும்பல்.

மூன்றை யீரண்டிற் புரட்டிக் குறக்கொடி மூன்னொடுக்கத்
தான்றனித் துண்டதுண் டேடயில் வெற்புறை சாமியென்மா
னூன்றா மெழுத்தொரு நாலி லிரண்டைவிட் டெப்பொரித்துத்
தேன்றசை யோடஞ் செழுத்தைத் தந்தானுண்டு செல்குவமே. ()

பாங்கியிற் கூட்டம் முற்றிற்று.

## பதினொன்றாவது—ஒருசார்பகற்குறி.

### கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம், பொழுது கண்டிரங்கல்.

முலையஞ் செழுத்தைக்கச் சான்மணித் தார்சுவை முத்தழுத்து
மெலிய பவளத்தை முத்துக்கு ளேவைக்க விண்டனர்பொற்
சிலைநிகர் பன்னிரு கையான் மயில்வரைச் செல்வர்சிவந்
துலையுமெய்க் கிட்டனர் சாந்தஞ்செம் மாலைக்கொன் றேதிலரே ()

### பாங்கி புலம்பல்.

மருவு மிறைவர் சிறுபொழு தேசொன் மறந்தனரே
திருவை விகாரம் பெருக்கினை யோபொற் சிகண்டிவரை
முருகன் குறிஞ்சி மலர்மாலை யேனுஞ்செய் மோகத்தினை
யுருவஞ் சிவக்கினு நீமுல்லை மாலையென் றேதுவனே. (கக௯க)

### தலைவனீடத் தலைவி வருந்தல்.

தாரா திராச்சுகந் தந்தவ ரென்னே தடைசகிமார்
வாரா திராரினி வேலன்பைந் தோகை மயில்வரைமே
லாரா ரெனக்குற வையோ விடர்பல ராய்வர்பழி
யூரார்செய் வார்மறந் தார்மதி பானுவென் றேதியதே. (௯க௯உ)

### தலைவியைப் பாங்கி கழறல்.

நீருற்ற புள்ளல்லர் தேனுண்ட வண்டல்லர் நேசித்தநம்
மேருற்ற மன்னர்ச கோரங்கண் டாயெங்க ளேந்திழைநீ
சோருற்ற வன்றிற் பெடைநிகர் வாய்குகன் றோகைவெற்பாய்
தாருற்ற வேனளை னைப்பிரிந் தான்முன் றமயந்தியே. (கக௯௩)

### தலைவி, முன்னிலைப்புறமொழி மொழிதல்.

உண்டமர் நீனி லொதுங்கினர் போலென் னுமைபிருந்தோர்
விண்டிருந் தானு மிருப்பர் மயில்வரை வேலனருட்
கொண்ட விறைவரு மாயமிக் காரினிக் கூறுவதென்
வண்டனன் றென்பார் பலர்நாலி லொன்றறி வாரில்லையே. (கக௯௪)

### இன்னுயிர்ப் பாங்கியோடு புகர்தல்.

பாரினும் வானினுந் தேவரென் றோது பகுப்புடையா
ராரினு மிக்குள்ள சேந்தன் மயின்மலை யாயிழைகேள்
பேரினுஞ் சீரினு மிக்கையுள் ளாரைப் பிரிதலெங்கே
சேரினுஞ் சேரா விடினுங் குவியுங்கைச் செம்மலரே. (௧௯௫)

### பாங்கியச் சுறுத்தல்.

நினைத்த மருது மகிபதி நெஞ்சி னிறைந்துதொல்லை
வினைத்திரண் மாற்றிய கந்தன் மயில்வரை மென்கொடியே
தினைப்புனக் கேபெரு மான்சாரி வந்த திறநிந்தா
னினைப்பினிலை யாக்கி யெனைக்கள்ள னாக்குவ னன்னனையே. ( )

### நீங்கற் கருமை தலைவி நினைந்திரங்கல்.

தாமரை மேல்விழும் வண்டுஞ்செவ் வல்லியிற் றாமரையு
மாமலை பைச்சற் றசைக்கின்ற கையுஞ்செவ் வாய்நகையு
நாமகன் றோமல்லுந் தாமகன் றார்மயி லுகைச்செவ்வேள்
பூமலி நாட்டிற்பைந் தாருவை நீங்கில பூங்கொடியே. (௧௯௭)

### தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

பூவேந்தன் போற்றுங்குன் றக்குடி வேளருள் போற்றிப்பெற்ற
பாவேந்தர் சொல்லு மருது மகீபன் புவனியைப்போற்
றேவேந்தி ராவெச் சரிக்கையுன் றார்செழு மாப்பலவார்
மாவேந்தன் சந்தனம் பார்புன்னை நீழலில் வைகுவமே. (௧௯௮)

### சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தல்

விழிபோலு மானுங் கலையுங் கலையா விறல்பெறவு
மொழிபோலும் பச்சைக் கிளிவளை யாது முயன்றுறவும்
வழிகூடல் போலுங்குன் றக்குடி யான்முன் மறவர்க்கண்டு
பழிகூற நின்ற புலிநாமங் கானவர் பார்த்தனரே. (௧௯௯)

### முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

வள்ளி மயில்சேர் பயின்மலைக் கேமரு தையன்செய்த
வெள்ளி மயிலை விரும்புங் குகனருள் வேந்தன்மறந்
தெள்ளி மயிலிலென் பொன்மயி லைப்புணர்ந் தேகினும்போற்
புள்ளி மயிலின மேமற வீரன்பு போற்றுதலே. (௨௦௦)

### இதுவுமது.

செவ்வரி யேறுங்கண் மான்றெய்வ யானைதன் சீறடிக்கே
கைவரு செங்கை முருகன் மயில்வரைச் சாரலிலே
மவ்வரி யாதியு மெல்லினத் தாறு மறந்திடினுஞ்
சவ்வரி கவ்வரி மூன்றே மறத்த றருமமன்றே. (௨௦௧)

## முன்னின்றுணர்த்தல்.

மாறன் பரிப்பேர் மணப்பேர் கணைப்பேர் வனைந்தெழுந்தோர்
பாரெரு புல்லொளி மாலேதி நாமங்கைக் கையர்கொண்டார்
வீரப் பயன்பணி செவ்வேண் மயில்வரை மேலண்ணலே
பாரக் கிரியின் மலரா தினியிரு பங்கயமே. (௨௦௨).

## முன்னின்றுணர்த்தி, யோம்படைசாற்றல்.

வண்டினந் தேனுண்டப் பூவிற் றுவளு மருதநிலத்
தண்டலை யூர முருகன் மயில்வரைச் சாரலிலே
கண்டகண் பேரா திருகோங்கின் முத்தத்தைக் காட்டிநிற்கு
மொண்டொடிக் கும்மடி யேற்கும் பழியற வுன்னுகவே (௨௦௩)

## மேம்படுகிழவோன், தஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்.

வீடு மலையிப்பர். மெய்ப்படத் தொன்றில்விட் டேபம்வந்தாற்
கூடிவ தோவில் வரையிக வாத குறிமனமே
நாடு புகழ்ப்பன் னிருகையன் போன்மயி லைசரின்றார்
தேடி லரிப்புன நாமும் பறவையுந் தேடினமே. (௨௦௪)

ஒருசார் பகற்குறி முற்றிற்று.

---

# பன்னிரண்டாவது—பகற்குறியிடையீடு.

---

## இறைவனைப் பாங்கிகுறிவரல் விலக்கல்.

சீரா தமிழ்ச்சொலை றைச்சிறை யிட்டவர் கேகயத்தார்
பாராவில் வேதனை வைத்தவர் தோகைப் பருப்பதத்தீர்
தாராள மாய்மந்தி வெங்கைமு றொடிச் சரிப்பினன்றே
நீரா வயின்வர லெனலங் காவலு நீங்கினமே. (௨௦௫)

## இறைவியைக் குறிவரல் விலக்கல். [டத்தி

உண்ணுளென் னேயென்னுந் தாங்காளென் னேயென்னு மோரி
னண்ணுளென் னேயென்னும் பெண்குற வள்ளி நடுங்கவிரைந்
தண்ணு வருகவென் றன்மயில் வெற்பினம் மன்னையினிக்
கண்ணை கடத்தினை யேகவ றொடு கடத்தினையே. (௨௦௬)

## இறைமகள், ஆடிடம்நோக்கி யழிதல்.

பாரதத் தோர்தரு நீங்கா விரதஞ்செய் பட்சியினை
நீரத றணிலைத் தாண்மற வாமனெடி ஆநின்றிர்
வீரநவர்பணி வேலுடை யான்மயில் வெற்பிறைவர்
சாரலிளங்கிள்ளை யேமறந் தார்பொற் றனக்கிள்ளையே. (௨௦௭)

பாங்கி, ஆடிடம்விடுத்துக்கொண்டகறல்.

குருகின மேருரு கேகன்மயில் வெற்பற் குருகினமே
மருமலி வண்டின மேவரிற் சொல்லுது வண்டினமே
பொருவரும் பாரல ரேபழி யூருரைப் பாரலரே
பெருமலை யேசொல்வை யேவந்து போகும் பொருமலையே. ()

பின்னாள், நெடுந்தகை குறிவயினீடுசென்றிரங்கல்.

அயிலணி கையான் மயில்வரை யிதெனி லாடல்கொண்ட
மயிலதெங் கேசந்தி ராங்கமெங் கேபெரு வாசமெங்கே
செயலறக் கொத்து மரவமெங் கேயிடஞ் சேர்ந்தசொன்னக்
குயிலுமெங் கேயில்லை யேயினி யேதொன்றுங் கூறிலமே (௨௦௯)

வறுங்களநாடிமறுகல்.

புண்ணியத் தோகை மயில்வரை வேலனைப் போற்றலர்போ
லெண்ணிய காரியங் கூடிலை யேயிது வேதினையே
பெண்ணிலை யோபுனம் வேறோ கனவோ பெறுவதுண்டோ
கண்ணிருந் தார்க்கல்ல வோகாண லாஞ்ச களச்சத்தியே (௨௧௦)

குறுந்தொடி, வாழூர்நோக்கிமதிமயங்கல்.

ஏறுத மேட்டுக்கு நீரிறைப் பாரின்றெட் டாக்கொம்பிற்றே
றூறு முடவற்கு வாராது தோகை வெற் பீரடிப்பே
றூறுதன்பில்ல வருக்குநெஞ் சேயிலை தொள்ளிழையாள்
சீறூரினிச்செய்ய லாவதின் றேதுன்பஞ் சேர்ந்தனமே (௨௧௧)

இதுவு மது.

தேமாப் பழுக்கு மயில்வெற்பின் வேலர் திருவருள்போன்
மாமான் மலர்மனைச் சென்றன ளேயவள் வாழுஞ்சிற்றூ
ராமீது வானத் தமுதம் விரும்பி யகங்குழைந்து
பூமேவு மக்க டவம்புரிந் தாலும் புசிப்பதின்றே. (௨௧௨)

பகற்குறி யிடையீடு முற்றும்.

---

## பதின்மூன்றாவது—இரவுக்குறி.

---

இறையோன் இருட்குறி வேண்டல்.

கூந்த லெனவிருண் டேநீட லாற்கண் ணுக் குச்சரியா
மேந்தற் குவளை மலர்த்தின தாலரி வேந்தங்கையான்
சாந்த மயில்வெற்பி னம்விரும் பார்விழித் தாமரைக்கே
காந்தி குறைப்பத னாலிருட்போதல் கருதினமே. (௨௧௩)

டாங்கி, நெறியினதருமை கூறல்.

இடைவிடுத் தான்முலை யாந்தலை போக்கி யெழுந்தலையா
மடையக் குறிக்கிற் கொலைச்செந்நு வாம தடிக்கொன்றதாம்
படர்வழி யெங்கு மயில்வெற்பர் தாதை பணிசுற்றமாந்
தொடையுறு பாதையொன் றுண்டறி யாய்வரச் சொல்வதெங்கே.

இறையோன், நெறியினதெளிமை கூறல்.

ஆறு பெரிதில்லைக் காவலை யஞ்சில ளுண்மைவன்மீ
னாறுமுண் டோதிரு மாலாழி யுண்டன் புறவசுரர்
நீறு படச்செய்த வேலோன் மயில்வெற்பி னேரிழைகாண்
சீறும்வெம் பாம்புக்குப் பெண்ணைங் கருடத் தியானமுண்டே. ()

பாங்கி, அவனாட் டணியியல் வினாதல்.

ஆயிரம் வெள்ளத்தொ டாளி முகனை யசியொன்றினான்
மாயப் புரிந்தவன் போற்றுஞ்சு வாமி மயில்வரையோய்
நீயுன் னகரின் மருவலர் மேன்மை நிகழ்த்திமனை
மோய்வில்குழையா ரையுநம் பினவரை யுஞ்சொல்லுமே. (உகசு)

கிழவோன், அவள்நாட் டணியியல் வினாதல்.

அறியாரைப் போன்று குறியா துரைக்கின்ற வத்துரைபோ
னெறிசே ரெளிமைக்குப் பின்னிது கூறினை நேசமிதென்
றறியேன் முருகன் மயில்வரை யாய்நும் மணிநகர்ப்பூஞ்
செறிவே தெதுவுங்கள் போன்றும்மைத் தந்த செழுங்கணையே ()

அவற்குத், தன்னாட் டணியியல் பாங்கிசாற்றல்.

ஆயா தவர்மனம் போன்றிரு நேங்குங்கற் றுய்ந்தவர்போ
லோயா மணம்பெறுஞ் சேந்தன் மயில்வெற் புறையண்ணலே
காயாத மாவென்றும் பூவாத மாவைக்கை யாலறிந்துப்
பாயாத வேங்கையஞ் சுஞ்சோலை யாங்கள் பயிலிடமே. (உகஅ)

இறைவிக் கிறைவன் குறையறி வுறுத்தல்.

சங்கையை யெண்ணிய பேரையை யான்புகழ்ந் தாரைவைப்பான்
புங்கவ ரிற்சண் முகவேலன் றோகைப் பொருப்பணங்கே [ன்றே
செங்கையில் வேலும் விரைவுங்கொண் டெம்மண்ணல் சேர்தன
கொங்கையை நாடி யிடைதேடு முன்மலர்க் கூந்தலிலே. (உககூ)

நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல்.

கான வரும்புடைச் செல்வர்களே தொழுக் கந்தனையே
வானவர் மங்கையர் செல்வர்க ளேபொன் மயில்வரைமேற்
கூனறு கானிலெங் குஞ்சர மேயெழுங் குஞ்சரமே
யானில் வருமம் புலியே யினியெழு மம்புலியே. (உஉ0)

### நேரிழை பாங்கியோடு நேர்ந்துரைத்தல்.

உரவினை செய்பவர் ஞானயமென் பாரறி வொன்றுதற்கோர்
திருமுகங் கூடப் பெறுஞ்சிவன் றோகைச் சிலம்பண்ணலார்
மருவினைக் கூறனு நன்றே யுனது மனமுநன்றே
யிரவினுக் கஞ்சுவ தில்லைகொ லேழைக் கிரங்கவரே. (௨௨௧)

### நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்.

ஒருவிரல் காட்டிக் குழைகாட்டிக் கைகுவித் தோங்கிச்செங்கை
பொருநெறி வைத்தனள் கூவி கரும்பார் புதல்வர்க்குண்டோ
முருகன் மயில்வரை மேலன்னங் காட்டிக்கை மூக்கில்வைத்தே
யிருவிரல் காட்டி யொருவிழி மூடின ளேந்திழையே. (௨௨௨)

### குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல்.

அகத்தான் வருந்திய வன்புருக் கன்பனமுகுளசண்
முகத்தான்மயில்வெற்பிலற்புதங்கண்டேன்மொழிவன்பெண்ணே
பகற்காக்குஞ் சண்பகஞ் சேராது தும்பியென் பார்களுரை
மிகத்தா னமுத மதுவுண்டு பூமெத்தை மேலுற்றதே. (௨௨௩)

### இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல்.

தோழியர் தூங்கினர் நற்றாயுந் துஞ்சின டோய்ந்துடையார்
வாழியர் நங்கொல்லைச் சண்பகச் சாவின் மலர்மெத்தைமேற்
கோழியர் குன்றக் குடியார்கை வேலன்ன கூர்ங்கண்ணியே
மேழியர் மாலை யெனவே யிருண்டது விண்கங்குலே. (௨௨௪)

### அவட்கொண்டு சேறல்.

பால்சர்க் கரைபழங் கர்ப்பூரம் வெற்றிலை பாக் தமுதற்
சாலவங் குண்டு மணிச்சிலம் பென்மடித் தாங்கினன் மாண்
சூலி மகன்குகன் றோகைவெற் பார்மெய்ச் சுகம்பெறவா
கோலைப்பெண் ணுக்கித் துகின்மூடிப் பஞ்சணைக் குட்படுத்தே.()

### குறியுய்த் தகறல்.

கர்ப்பூர மோர்பங்கு வைத்தளித் தார்பழுக் காயிலையி
தற்பூ ரவர்மன மாபூத்தர் காண்குக ஞர்சிகண்டி
வெற்பூ ரிரவைநஞ் சாதியைச் சாரின் மிறைசொல்வதார்
நிற்பீர் மருவல ரைத்தலை சாய்ப்ப னிமிடத்திலே. (௨௨௬)

### வண்டுறை தாரோன் வந்தெதிர்ப்படுதல்.

செடிதேடு மத்த கயம்பிடி தேடுஞ் சிறந்தவின்பப்
பிடிதேடு மோவடி வேலன் மயூரப் பிறங்கலின்மேல்
யடிமே லடியிட்டை யோகாடெ லாம்விழி யாக்கிநின்றாய்
விடியா விடுனல்ல வோமுக மாமதி மென்மைகளே. (௨௨௭)

### பெருமக ளாற்றின தருமைநினைந் திரங்கல்.

சாதிசஞ் சுவளிக ஞாயமெம் மூர்வரத் தக்கதன்று
மீதுறை சஞ்சா ளிகபுட்ப ஞாயத்தின் மேவினிர்நீ
ரோது மறைபணி சேந்தன் மயில்வரை யுற்றவர்க
டைதயு முரத ஞெனெறி கண்டெனைச் சேர்ந்தனிரே. (௨௨௮)

### புரவலன் றேற்றல்.

இடைநினைந் தாற்கன்னி வாகன மென்செப்பு மேய்ந்தவல்குற்
படநினைந் தாலரி பாபனு மென்செயும் பாற்கடல்சேர் [கட்.
விடைசுமந் தான்மகன் றோகைவெற் பாய்செற்றம் வேண்டியென்
கடைசிவந் தாலெங்கு நம்மூர் சிவக்குங் கனற்கொழுந்தே. ()

### புணர்தல்.

மறையாத மின்மலர் வாடாக் கொடியைய வகையுணவிற்
குறையா வமுத மெனுநீ தமயந்தி கொண்ணிடதத்
திறைநா னெனிற்குகன் றோகைவெற் பிற்கற்ற தில்லை கொல்லோ
நிறைதே ருருத்தெரி யாமந்தி ரத்தி னெறிநளனே. (௨௩௦)

### புகழ்தல்.

ஆல மெனுமக ரேசனை வேல்விட் டறுத்தமரர்
தாலி பதித்த முருகன் மயில்வரைத் தையலரே
மேலை யடைபலர் முன்னே கலைகலை வென்பதனாற்
காலிற் சிலம்புக்கு நேரல்ல வேசிவன் கைச்சிலம்பே. (௨௩௧)

### இறைமகளிறைவனைக் குறிவிலக்கல்.

இன்னமை வேண்டி னிரவி லெழுகவென் றேபெரியோர்
சொன்னர் பொய் யன்று முருகேசன்றன் பணிதோகைவெற்பா
பன்னடர் போற்றச் சிவந்தகை கால்கனென் பங்கயக்கண்
டன்றாற் கறுத்தன பார்நீயென் னச்சந் தவிர்ந்திடவே. (௨௩௨)

### அவன், இறைவியையில்வயின் விடுத்தல்.

முத்தாயர் கேள்விக்கு வைத்தீர்கொ றேழியர் மூன்றுகட்டுங்
கைத்தாளிட் டீர்கொல்பொய்த் தாளிட் டனிர்கொல் கிருணையெ
வைத்தாண் முருகன்மயில்வெற்பினீர்சென் மனங்கலக்கு[ண்மேல்
வித்தேன் கதிர்தோற் றினுங்கஞ்சங் கொள்ளா விகசிதமே. ()

### இறைவியை, எய்திப்பாங்கி கையுறைகாட்டல்.

கான்கொண்ட கூந்த விளம்பிடி யேகால் கடிதுசென்று
நான்கொண்டு வந்த மலர்கரத் தேந்தி னளினத்திலோர்
வான்கொண்ட நீல மலர்ந்ததென் பார்பச்சை வண்டிதென்பார்
தேன்கொண்ட சோலை முருகன் மயில்வரைச் செல்வர்களே. ()

### இற்கொண் டேகல்.

பாலிக்குச் சொல்லினும் வேல்சிவப்பானதைப் பாளிதங்கொ[வாய்
ணீலிக்குச் சொல்லினும்பொல்லாப்பெண்ணாய்முனிகழ்த்தல்செல்
சூலிக்கு மைந்தன் மயில்வெற்பி லெல்லாந் துவண்டனவே
காலிக்குஞ் சொற்றிடு மேகண்டைச் சேலைக் கமகமப்பே. ()

### பிற்சென்றிறைவனை, வரவு விலக்கல்.

கன்ன வடுவை யிதழை முலையைக் கலந்தன் றுநீ
சொன்ன படிமறைத் தாண்மறைத் தாளல்லள் சோர்வைமயில்
வன்னி முருகன் மயில்வரை மேலிறை வாவருத
வின்னம் பொறுப்பவ ளோபல்லக் கேற்ற வெழுந்தவளே. (௨௬௬)

### பெருமகன் மயங்கல்.

கொங்கைக்கு மார்பின் னகைக்குங் கலைக்குமக் கொங்கைதொட்ட
செங்கைக்குங் குற்ற முரைத்தனை யேயினிச் செய்வதென்னே
துங்க மயில்வரை வேலனு நீயுந் துணையன்றியோர்
வங்க நடந்திடு மேபெருங் கோதை மயற்கடற்கே. (௨௬௭)

### தோழி தலைமக டுயர்கிளந்து விடுத்தல்.

ஆதி மலரை நினைக்கு முடியு மயலவர்சொற்
பாதையிற் கொண்டு மகிழு முறம்விழல் பார்க்குங்கொடி
யோதை குறிக்கு மயில்வரை யான்பத முன்னுமிந்தக்
காதலிக் குத்தப்பு நீக்குவ தென்னூர்க் கனகதப்பே. (௨௬௮)

### திருமகட் புணர்ந்தவன் சேறல்.

மாவென்ற கண்ணியென் னூர்க்கேகற் கென்றடை வையமெலாங்
கூவென்ற சூரைவென் றோன்மயில் வெற்பிற் குறுகுமிருட்
காவென்று மாவென்றுஞ் சொன்னதெல் லாநிற்க காமமுற்றை
போவென்ற போதண்ட கோளமுந் தீப்பட் டொளிவிடுமே.

இரவுக்குறி முற்றிற்று.

## பதினான்காவது—இரவுக்குறி யிடையீடு.

### இறைவிக்கிகுளை யிறைவர வுணர்த்துதல்.

விண்ணி னுதித்த பதினொரு கோடி விபுதருக்காக்
கண்ணி னுதித்த முருகன் மயில்வரைக் காதலியே
யெண்ணி னுதித்தவன் காலுஞ் சிலம்பு மிகுகையும்போன்
மண்ணி னுதித்தன வோபட்சி சால மலர்வனத்தே. (௨௭௦)

### தான்கூறி மருண்டமை தலைவியவட்குரைத்தல்.

வேறா புகலுற்ற வேகாக்ர சித்த வியப்பிலிடை
யூறு வராதென் றிருந்தேன்பெண் ணேமர மொன்றையொன்றாச்
சூறை படுத்த விழுமொலி யாற்பசுந் தோகைவெற்பா
ராறு பொறிகொண்ட காற்று மருட்டிற்றெனைம்பொறியே. ().

### பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பல்.

காட்டவைத் தார்கல்லைச் சொல்லவைத் தார்பொய்யைக் கால்வயி
ற்றுக், கூட்டவைத் தார்கையைத் தன்மெய்யைக் கங்கையுள் ளங்
கைத்தொட்டி, லாட்டவைத் தார்மயில் வெற்பார்செய் நன்றி
யென், னன்றியுக்கை, நீட்டவைத் தார்புன்னை மேற்பாம்பைப் பெய
ன்ன நினைப்பினியே. (உசஉ)

### புலந்தவன் போதல்.

சரம்போ னிலைய்பொன் போலிலங் கும்மனஞ் சஞ்சலத்தாற்
குரங்கா மெனச்சொன் னதுநீச மாயின கூந்தல்வனம்
பரந்தோடித் தென்னையில் வாழையின் மாவிற் பருங்கமுகி
னிரந்தோ டியுமில்லை வேலன் மயில்வெற்பி னேரிழையே. (உசங)

### புலர்ந்தபின் வறுங்களங், தலைவி கண்டிரங்கல்.

பந்தினைக் காய்த்தது.புன்னைபொன் மாலையும் பங்கயமுஞ்
சந்தனம் பூத்தது பேசாக் கிளிமுல்லை தந்ததுண்டே
செந்தின் முருகன் மயில்வரை மேலண்ணல் சென்றனரோ
பிந்தின ரோநிற்கின் றரோகண் ணேயுன்னைப் பெற்றென்னையே.()

### தன்றுணைக் குரைத்தல்.

அனலுக்கு ளாகிச் சரவணத் தெய்தி யறுவர்கொங்கை
வனசத்தின் பாலுண்ட வன்றோகை வெற்பினர் வாரலரே
லுனையொற்றை யன்றிலென் பார்நக ரோர்மல ரோன்குருவி
தனிமெய்ப் பொருளமு தாகவுண் டன்னைவிண் டானெய்துமே.()

### தலைமகளவலம் பாங்கி தணித்தல்.

ஆறுரு வாய்ச்சுனைத் தொட்டிலு ளாடியெ னம்மைகைக்கோர்
பேறுரு வானசு வாமிபைந் தோகைப் பிறங்கலுள்வாய்
கூறுவ ரோபொய்ம்மை கண்டென் பலமின் குறிவிடிந்து
தேறுவையோ கொம்புபார்நேர்ந்தும் வீண்படச் சென்றனரே..()

### இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல்.

விடையி லிருவ ருடனேறி முன்வெள்ளி வெற்பகத்தே
நடைபுரி வேலன் மயூரவெற் பாவிங்கு நண்ணிலேயே
லடைகுவன் யானு கிலுந்துணை யாய்வரற் காய்ந்ததென்னை
மடறரு மோகமு கங்காயுள் ளன்பு மறந்தனையே. (உசஎ)

## இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றல்.

தொட்டிலூற் றூடி யுனமக்குப தேசஞ் சொலும்பொருளின்
மட்டறி வேலன் மயூர கிரிமட மான்பிணையே
பட்டினி யில்லைப் பகலெண்ண மில்லைப் பகருமக்குக்
கட்டிலு மெத்தையு மில்லை யெளியேன் கருத்திடத்தே. (உசஅ)

## அவள்குறிமருண்டமை யவளவற் கியம்பல்.

விழுக்கு முலக வடுக்கினை மாற்றி விலங்கலெல்லா
மழுக்கி யெழுப்பு முருகன் மயில்வெற்பி னாண்மலே
குழுக்கென்ற கேணியும் விண்ணொன்ற வோசையுங் கூவத்திலே
தொழுக்கென் றதுமுன் குறியென்றல் லெல்லாஞ் சுழன்றனளே.

## அவன்மொழிக் கொடுமைசென் றவளவட்கியம்பல்.

கின்னரி வீணையி னுவதின் றேசிங்கங் கொர்ச்சிக்கின்மேன்
மன்னுறு மிந்திரன்வெட்போரை யென்றான் மயில்வெற்பின்வாய்ப்
புன்னை யரும்புமுற் றத்தசைத் தேனென் புகன்றினியு
னன்னம் பறந்தது வோவென் றனரிறை யாயிழையே. (உருO)

## என்பிழைப் பன்றென் றிறைவிநோதல்.

தூங்கின னோதூங் கிலனோ தெரிந்திலன் சொல்லறிந்தா
னீங்கின ரோநீங் கிலரோ தலைவரென் னெஞ்சிருந்தா
ரேங்கிய தேவர்கள் வாழ வருளு மிறைவன்மயி
லோங்கல ரென்றோர் மிடாவை யுற் றஞ்சிப்பி னூர்றதுண்டே. ()

## தாய், துஞ்சாமை.

இலக்கத்தொன்பானெனும்வீரர் துணைக்கொண் டெழுந்துதகாக்
கலக்கந் தவிர்த்தசு வாமி மயில்வரைக் காரிகையே
துலக்குபொற் பாபத்தை முல்லையி லேவைத்துந் துஞ்சவனோ
பலிக்க வுழக்கின்ற வாபத்தைப் போக்கிப் பயந்தனனே. (உருஉ)

## நாய், துஞ்சாமை.

பேசு பிரமனை மாற்றிச் சிருட்டி பெருக்கிமனைக்
கீசன் வரச்செய்த வேலன் மயில்வரை யேந்திழையே
யோசனை பாரிந்த வூர்மலர்ப் பொய்கையுண் ணும்புனல்யாம்
பாசியை நீக்கியிங் நீர்குடிப் பாரெவர் பார்மன்னரே. (உருஙு)

## ஊர் துஞ்சாமை.

முட்டற்ற வீரா யிரம்வெள்ளம் பூதமு மோதியதூற்
றெட்டுத் தலைவரும் பெற்றோன் மயில்வெற்பி லேந்திழையே
கொட்டிய மேளமுங் கூத்தையும் பாருயிர் கொண்டவரிச்
சட்டத்தி லாறு மிடையி லிரண்டுந் தவிப்பில்லையே. (உருச)

### காவலர் கடுகுதல்.

மனவேகத் தேரு மருத்தெனும் பாகும் வழிச்சிலையுரு
சினவாழி யுஞ்சத்தி வேலுப்பெற் றோன்மயிற் றிண்சிலம்பார்
புனமேல் வருவர் தடையில்லை யின்று புகிற்கொடிதாந்
தனியான சோலைப் பெயரோடு பூப்பெயர் சார்ந்திடினே. (௨௫௫).

### நிலவு வெளிப் படுதல்.

முத்தக் குடைநிழற் றேவர்கள் சூழ முதற்சமரி
லத்தி முகனைக்கொன் றோன்மயில் வெற்பினி லாயிழையே
பத்துப் பெயரோ டொருவர்வந் தாலும் பவுஞ்சிதென்பார்
சுத்தக்கு பேரன்வந் தாலெவர் தாங்குவர் சொல்லுகவே. (௨௫௬)

### கூகை குழறுதல்.

அசுர மெனப்பல் லுயிர்தோறு மந்திரி யாரியுமாய்ச்
சுகநிலை யான முருகன் மயில்வரைத் தோகையரே
சகரத் திரண்டுனி லாமொன்ப தேறிக் கதறுமென்றற்
பகர்பதி னொன்று தடையென்று நீங்கும் பதியைவிட்டே. (௨௫௭)

### கோழி குரற்காட்டுதல்.

ஒருசாதி யிற்பிறந் தேயஞ்சு சாதி யுடன்கலந்து
வருநாளி லூண்முதனீ மாறிய தேட மனக்குருகார்
பரிவா யெனக்குரு கார்வே லன்றோகைப் பருப்பதத்தா
ரருகா மனையிற் பறையடித் தால்வர லாவதெங்கே. (௨௫௮)

இரவுக்குறியிடையீடு முற்றிற்று.

---

## பதினைந்தாவது—வரைதல்வேட்கை.

---

### (பாங்கி) பருவரல்வினவல்.

மாதாவுந் தந்தையும் பிள்ளையுஞ் சுற்றமு மற்றுமெல்லா
நீதா னெனநின் றவன்மயில் வெற்பினி னின்றமதி
மீதே பிறைமேற் பிறையுங்கொவ் வைக்கனி மேலிலையு
மாதே தரித்திலை யென்னே பருவரல் வந்ததுவே. (௨௫௯)

### பாங்கிக்கிறைவி, அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

கோவைப் பழத்தினிற் காயும் வடுவுங் கொடுத்தவரார்
பாவைக்கென் றன்னை யுன்னைக் கிளியைப் பகர்ந்தொழித்தேன்
பூவிற் கணத்தை மறைத்த க்ரவுஞ்சப் பொருப்பையங்கைத்
தேவிக் களித்த மயிலோன் மயில்வரைச் சேயிழையே. (௨௬௦)

### தலைமகன் வருந்தொழிற் கருமைசாற்றல்.

ஒருநாளும் பாதி யனுநாளு கூறதி லொன்றுதள்ளி
வரும்மொன்று கூறாக்கொ ரேழிடை யூறு வருங்கொடி தாய்த்
திருவே ரகத்தி லிருந்தோன் மயில்வெற்பர் சேயிழையே
யிருணாள்வருவதெங் கேகுற்றம் பார்க்கின்றவில்லைத்திலே. (௨௬௧)

### தலைமக னூர்க்குச் செலவொருப் படுதல்.

படையோ டெழுந்துவிண் ணோர்செய்கல் லூரிற் பணியச்செந்தி
லடைவார் மயில்வெற்பி னோனோர் விலைச்சரக் கானதினாற்
கடையூழி போய்க்கப்ப லேறிப் பலர்கள் படச்சென்றுபொன் ()
கொண்டையாளர் வீட்டிற் புகுந்தே சரக்குப்பை கூடுவனே.

### பாங்கி இறைவனைப் பழித்தல்.

விரும்பிமுன் காட்டின் மனமஞ்சி னீரென்று வேண்டியுன்கா
றிரும்பிய போதுகல் லென்று ரதுநல்ல செப்பலவே
கரும்பு மொழிவள்ளி யார்மயில் வெற்பர் கருணையென்னே
குரும்பையி லேயென்றுங் கோவாத முத்தங் குவித்ததுவே. ()

### பூங்கொடி, இறையோன்றன்னை நொந்தியற் படமொழிதல்.

வானுண்ட தேசிகன் சொற்படிக் கேவிறல் வாகுவைநீர்
மீனுண்ட வூர்க்குப் புகவிடுத் தோன்மயில் வெற்பனையாய்
நானுண்டு நீயுண்டென் றோர்பூத் தலைவைத்த நண்டார்விடார்
தேனுண்ட வண்டினந் தேடாத் தருவில்லைத் தேசத்திலே. ()

### கனவுநலி புரைத்தல்.

மாகாயம் பாய்ந்திந்தத் தேவையிற் சொர்ன மலையொடுக்கி
ரிகி முயர்ந்தவன் போற்றிய வேண்மயில் வெற்பர் வந்தார்
தோகாயென் றோர்முத்தந் தந்தார் படுத்தார் துயில்புரிந்தா
ராகாயப் பூவு முயற்கொம்பு மாயின ராரணங்கே. (௨௬௫)

### கவினழி புரைத்தல்.

அடியைப் படர விலங்கையி லூன்றி யதிர்கடற்குக்
குடியைப் படரவிட் டோன்பணி வேண்மயிற் கோத்திரத்தார்
படியைப் படரவிட் டார்பழி யாம்பயி ரைப்பசலைக்
கொடியைப் படரவிட் டார்மணம் பூசிய குன்றத்திலே. (௨௬௬)

### தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டல்.

மீறித் தனுவிட்டு நாண்போன வாறும் விழுந்திடுஞ்சிற்
றுறக் கரைப்பட்ட துஞ்சொல்லு வாருள ராயினன்றே
யேறாற்ற வானத் திலங்கேசன் பொன்முடி யாயிரமுஞ்
சூறைப் படுத்தான் செழூப்வேள் ளைபைந் தோகைச்சுரும்பவர்க்கே.

### வெறிவிலக் குவித்தல்.

முன்னிய சூரனைக் கொல்லாமை சொல்லி முனிந்தவர்கள்
பின்னிட வந்தோன் பணிகுகன் றோகைப் பிறங்கலன்னை
பொன்னிசை மேடத்தை முன்னிட்டுப் பூசை புரிந்திடினுந்
தன்னியுஞ் சிங்கமு நீங்காதென் றோது கனங்குழையே. (உஎரு)

### பிறர்விலக்குவித்தல்.

அன்றைத் தினத்தி லசுரேசர் பல்லா யிரரையவன்
முன்றிற் படுத்தான் பணிமேவண் மயில்வரை பொய்குழலே
யின்றைக் கிரப்பார்க் கிசைவதுண் டோபுக ழென்னையிவ்வூர்
குன்றக் குடியெனப் பேரிருந் தாலுங்குன் றாக்குடியே. (உஎசு)

### குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.

சொன்றிக் குறிசி யெனப்பதின் காவதகூரந்தெவ்வூர்
வென்றிக் கனலிட் டவன்பணி வேண்மயில் வெற்பணங்கே
குன்றக் குடிக்கா வலர்மண மிக்கென்று கூறினையே
லன்றைக் கனைநனி யாங்கார நீங்கும்பின் னுவதுண்டே. (உஎஎ)

வரைதல் வேட்கை முற்றிற்று.

---

## பதினொருவது—வரைவுகடாதல்.

---

### வினவிய சேவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

எப்போ தருள்புரி வீரென்ற வார்த்தை யிரவிற்கொண்டு
அப்போ திதழ்மின்னை யென்னையென் றுளன்னை தூங்கமரர்க்
கப்போது தூது தெரித்தவன் றோகை யணிவெற்பமே
செப்போதி னுண்மலர் கொய்மாதர் மேலிட்டுச் சீர்பெறவே. ()

### அலரறிவுறுத்தல்.

சீரார் சயந்தனுந் தேவரும் போற்றுஞ் சிறையினிற்கண்
ணேரார்ன வன்மயில் வெற்பிறை வாவிவ ணோர்பழிநீ
வாராத போதி லரும்பாகும் வந்தான் மலரலரா
மீரா றிடைப்பட் டிடில்வடு வாமென் றிரங்கினளே. (உஎஅ)

### தாயறிவுணர்த்தல்.

குறியான் வலுவென்ற போதே கணங்கள் குரைகடலே
நெறியாக வாளெறி வந்தோன் மயில்வெற்பி னேரண்ணலே
பறவாத வன்னமு முண்ணுதை வன்னமும் பார்த்திலளென்
றறவே வெகுண்டு குறித்தாளெம் மன்னை யருங்களவே. (உஎகூ)

### வெறியச்சுறுத்தல்.

வாட்டமில் வீர ருடனேமை கூட்டத்தின் மாமுனிவர்
பாட்டுக் கருள்செய் திருந்தோன் மயில்வெற்பிற் பார்மன்னனே
கோட்டிற் செறிமுலை பாரா யெனிலிந்தக் கோயிலிற்பா
ராட்டுக்கு முன்மத் தளதாள வோசை யதிர்ந்திடுமே. (உ௮0)

### பிறர்வரை வுணர்த்தல்.

ஆங்கார முற்றனன் வந்தா னிலனென் றடையலரூர்
தாங்காண நின்றவன் றோகைவெற் பாருந் தனித்துறையே
யேங்காத வுங்களி லூரு முலகமு மென்படுமோ
நீங்காத மானுக்குக் கொல்லாத வேங்கையை நேர்குவரே. (உ௮௧)

### வரைவெதிர் வுணர்த்தல்.

பூமலி சூரன் மகன்போரை வென்றிவன் போற்றுஞ்செவ்வேள்
காமலி தோகைவெற் பாமணம் பேசக் கருதினையேற்
றுமரை பெம்மூ ரகவித மெம்மையர் தையலிவண்
மாமணச் செந்தேன் வருநீகொண் டேகுதி வண்டெனவே. ()

### வரையுநா ளுணர்த்தல்.

தானைக்கு முன்வந் திடுஞ்சூர பன்மனைச் சாடிவந்த
சேனைக் கடலை யழித்தோன் மயில்வரைத் தேரலண்ணலே
வானத்தி னூர்கொண்ட வம்புலி டார்த்தனா மாதர்மலர்
கானத்தி னூர்கொண்ட வம்புலி பார்த்தனர் கானவரே. (உ௮௩)

### அறிவறிவுறுத்தல்.

அழிக்கின்ற தானவன் மாயமஞ் சக்கை யயிலெறிந்தோன்
செழிக்கின்ற தோகைவெற் பான்றந்தை போலத் திருவண்ணலே
பழிக்கஞ்சி ஞானோர் பதிவுசொன் றைம் பகர்தல்விட்டுச்
சுழிக்கின்ற வாரி முழங்கா லளவென்று சொல்லினளே. ()

### குறிபெயர்த்திடுதல்.

வேகித்த மானத் துடன்கோட்டை தாளிட்ட வீரன்பணி
மாகத் தவியன் முருகன் மயில்வரை மன்னவனே
சோகத்தி லேவர வேண்டா மினியின்று தொட்டுயர்ந்த
நாகதீதின் வாய்வருந் தேவா முதம்பெற நாடுவையே. (உ௮ரு)

### பகல்வருவானை யிரவுவருகென்றல்.

மையாரு மேனி.பெறுபானு கோபனை மாய்த்தல்செய்த
செய்யான் பணிகுகன் றோகைவெற் பாபகற் சேரவெண்ணிற்
கையாரு மாலையிற் சேரா ததுமணங் காண்கிலது
மெய்யார் மனித மரத்திலுண் டாமலர் மேவிடுமே. (உ௮௬)

பாங்கி விடுத்தல்.

பொருசூர ஞர்சர பப்பட்சி யாகப் பொன் மென்மயிலா
யொருமா மலையுகைத் தோன்மயில் வெற்பி னுறையண்ணலே
திருமானை நீத்தல்செய் மன்னருண் டோவிரைந் தேசென்றுநீ
குருவாரம் வந்து புகின்மந்த வாரங் குறிக்குவையே. (௩௦௦)

தலைவிக்கவன் செலவுணர்த்தல்.

பல்லா யிரமுருக் கொண்டெழுஞ் சூரனைப் பார்த்துநகைத்
தெல்லா மொடுக்கிய சாமி மயில்வெற்பி லேந்திழையே
மல்லார் மலைமர நோய்பின் னிடப்போய் வருதுமென்றார்
கல்லீர் சுரமென நீவாடச் செல்கின்ற காதலரே. (௩௦௧)

தலைவி, நெஞ்சோடு புலத்தல்.

மார்பினிற் றாமரை பூத்ததீங் கோங்குற்ற மாமரமும்
போருறு மாவி லசோக மலர்ந்ததும் பூகந்தென்னை
நேருறு சேந்தன் மயில்வெற்பர் கண்டிலர் நேர்ந்திலர்நம்
மூரு வகைமறந் தாரு ருவகைகொண் டோடினரே (௩௦௨)

சென்றோ னீடலிற், காமமிக்க கழிபடர்கிளவி.

ஞானசொ ரூபம்வெஞ் சூரற்குக் காட்டி யந் நாண்மறைத்த
கோன்முரு கையன் மயில்வெற்பர் நீடினர் கூர்கடலே
கானன் மரக்கல மேயிழி நீருங் கலங்கலமே
தூநலச் சோலைக ளேயெழு தீர்வரிஞ் சோலைகளே. (௩௦௩)

கோற்றொடிப் பாங்கி யாற்றுவித்தல்.

தூண்டிய தேரே றினர்மயில் வெற்பர் துரைமருது
பாண்டிய னுந்தேர் படைந்தொட் டனன்விருப் பாகுமுன்னே
வேண்டிய மன்னர் வருவார்வை யாபுரி மென்கரைமேற்
றீண்டு திருவர சேயிட மாவந் திருவரசே. (௩௦௪)

அவன், வந்தமை யுணர்த்தல்.

ஊர்காண் குரவையும் பேரியுங் கொம்பு மொலித்தவொலி
பார்மா வல்வர்முன் றுறர் படருடி பார்கொடிபார்
கார்மா நிகரு முனைப்பார் மயில்வெற்பிற் கந்தன்வருந்
தேர்காண வந்தனர் நீயலங் காரிபொற் சிந்துரமே. (௩௦௫)

வந்தோன்றன்னோடு, நொந்து வினாதல்.

சொன்னுறுத் தாரஞ்செய் தீரோ வெனவுரை தும்மல்செய்து
பின்னுள் வருமென் றகற்குங் கொடுமொழி பேசினள்பூம்
பொன்னுள் குகன்செய லாலிவண் வந்து புகுந்ததனு
லென்னுக்கு மூக்குங் கொடுத்தீர் மயில்வெற்பினுறையவரே. (௩௦௬)

## கஅ.—வரைவிடை வைத்துப்பொருள் வயிற் பிரிதல். சஎ

வேந்திறல்வேலோன், பாங்கியோடு நோந்து விளம்பல்.

இருதலைத் தீக்கர் பெறும்போடு மத்தள மேய்ந்தவுன்றன்
வருத றவிர்தன் மறப்பதுண்டேபொன் மயில்வரைமேற் [டோ
றருவிய சொற்கொண் டிறைவியை யென்னவுஞ் சொன்னதுண்
முருகனை யெண்ணித் துயர்போக வென்று முருகனையே (கூ0எ)

பாங்கி, இறைவியை யாற்றுவித்திருந்த வருமை கூறல்.

பொன்வினை யாளர் மரவினை யாளர் புகலுமண்ணின்
றன்வினை யாளர்பெண் ணூல்வினை யாளரைத் தாக்கல்செய்தென்
றென்வினை யாடு முருகன் மயில்வரைத் தேரண்ணலே
யென்வினை கூறுவ துன்வினை மேன்மன மெய்திடினே. (கூ0அ)

ஒருவழித்தணத்தல் முற்றிற்று.

## பதினெட்டாவது—வரைவிடை வைத்துப்பொருள் வயிற்பிரிதல்.

என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக்கென்றல்.

அறநிலை யஃகின் மறநிலைச் செம்பொ னரசர்கொள்வார்
செறுநர் பொருடன மூன்று வகையினுஞ் சிறியதாங்
குறவர் மலைக்கொடி மேவிய வேண்மயிற் கோத்திரத்திற்
றிறமுற் றுரைத்தி மலையாள வீழுந் திறைகொள்வதே. (கூ0க)

நின்பொருட் பிரிவுரை நீயவட்கென்றல்.

கண்டிக்குப் போம்ப வழக்காட்டுக் கேகுங் கலிங்கத்துக்குத்
தொண்டிக்குப் போந்திர வீழங்கை யாடுந் தொடுத்தடிமைக்
கொண்டசு வாமி மயில்வரை யாளுக்குக் கூறிடினீ
ருண்டவ ளுண்டு விடைகொண்டு போகுவ தோர்குவனே (கூக0)

நீடேனென்றவ னீங்கல்.

மாதரை மேவினர் மிக்கான வீகையை வர்ச்சிப்பரோ
காதலிப் பார்க்குக்கல் யாண முயற்சி கடனல்லவோ
நீதனி யாற்றுதி வேண்மயில் வெற்பினி னீடநில்லேன்
மீதெழு கண்ணுக்குங் காதுக்குந் தூர மிகவில்லையே. (உகக)

பாங்கி, ஓடரிக்கண்ணிக் கவன்செலவுணர்த்தல்.

அண்டமும் பாரு நிறைந்த வசுரர்க்குங் காரஞ்செய்தோன்
றண்டமிழ் வாழ்மயில் வெற்பாருஞ் சோலைத் தனிக்குயிலே
கொண்டிடு மாசைபற் றுதென்று மேலுங் கொளப்புகுந்தார்
திண்டிறன் மன்ன ருனையே யிருத்திய சிந்தைகொண்டே. ()

### பூங்குழையிரங்கல்.

பூங்குழை மானென நின்றனை வேலிற் பொருதவன்பூந்
தேங்கமழ் சோலை மயூர கிரிக்குறை செல்வரவர்
தாங்கட மேவி யெனது பதகைத் தனிபுரக்க
வேங்கையைத் தேடின ராமறிந் தார்க்கு வியப்பிதுவே (௯௧௩)

### பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.

மாவை யிரண்டிட்டுச் சேவலுந் தோகை மயிலுமெனப்
பூவி லுகைந்த முருகன் மயூரப் பொருப்பணங்கே
பாவையர்க் கிப்படி யுண்டோ மயில்பரி பார்த்திலேயே
யிரவியுங் கூடுமொன் றுக்கில னேமுன் னயனுமக்கே. (௯௧௪)

### தலைவி கொடுஞ் சொற் சொல்லல்.

பொன்வாசஞ் செய்யு முருகன் மயில்வரைப் பூங்கிளியின்
றன்வா சகமுஞ் சகிவா சகமுஞ் சரிசொல்லலா
மின்வாசஞ் செய்யு மயில்காட்டி யெம்மை விருந்தளித்த
மன்வா சகமு மரிச்சந்த்ரன் சொல்லு மதிக்கிலொன்றே. (௯௧௫)

### வருதுவர் மீண்டெனப் பாங்கிவலித்தல்

கானே யிருவர்நும் போற்கண் டனராங் கடிதுறுவார்
மீனே சுமந்த வரைமீட்ட வேண்மயில் வெற்பினில்வாழ்
மானேயுன் கண்வைத்த காலை நடந்தது வந்திடுநங்
கோனேது சென்றது நானே துரைத்தது கோபமென்னே. (௯௧௬)

### பருவங்கண்டு பெருமகள்புலம்பல்.

ஏறிய மேகஞ் சரிபவில் வீசரி னெற்றெருங்க
வேறிய லானை பிடியோ டெதிரமென் காந்தண்மின்னைத்
தூறனு மேவ விருமலர்க் கண்ணீர் சொரியச் செய்வோள்
கூறு மயில்வரைக் கார்கால மியாவெனக் கூடியதே (௯௧௭)

### இகுளை வம்பென்றல்.

கூந்தலைக் கண்டு மயிலோட மாடின கொண்டல்குற்
பாந்தளைக் கண்டு செங் காந்தளிற் பாந்தள் படமெடுத்த
வேந்திய மின்னு மிடைச்சோதி வேண்மயி லேய்ந்தவெற்பிற்
சாந்த முலைபல்ல வோவினை யாடுதந் தாவளமே. (௯௧௮)

### இறைமகண்மறுத்தல்.

வானி லிடித்தொனி கூறினும் பேரிகை வாத்தியமென்பாய்
ஞான முதற்பொரு ளாகிய வேண்மயி னகத்தின்வாய்க்
கான்வரு வார்செங்கைக் காந்தளின் மல்லிகைக் கண்ணியைப்பா
ரானையைக் குத்திச்சொல் லான்மறைத் தாளிக ரன்றனக்கே. ()

## ௧௮.—வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல். 

### அவர்தூ தாகிவந் தடைந்ததிப் பொழுதெனத், துணைவிசாற்றல்.

ஓது முருகன்கை வேலென மின்னி யுவண்மயில்போன்
மீது பசந்து கொடிச்சிறை போலிடி விட்டுமுகி
றாதொரு பத்திலொன் றுனதி னால்வந்து தோன்றியதா
னாத னருள்போற் குளிர்ந்துவிண் ணார்மயி னாகத்திலே. (௩௨௦)

### பிணைவிழியாற்றல்.

பாலெனத் தேனெனக் கண்டென்ன வார்த்தை பகருவர்
வேலன்ன கண்ணுக் கினியசெய் வேண்மயில் வெற்பிடத்தே
கோலன்ன வேந்தர் வரல்சொல்லிக் காக்குங் குணத்தினன்றோ
மானின்ன வுன்னை வருத்தான் கொடிய மலரயனே. (௩௨௧)

### அவனவட் புலம்பல்.

தேனாறு பாயுங்குன் றக்குடி மாதுக்குச் சேந்தன்செங்கை
வேனாடுங் கண்முத்த நீலமுத் தாகக்கொள் வெண்முத்தெல்லாங்
கானார் வெடிமுத்த மாக நுதன்முத்தங் கன்னத்தின்வா
யானாத செம்முத்த மாகநன் றப்பொரு ளாக்கினமே. (௩௨௨)

### அவன்வருகாலைப், பாகன்றன்னொடு சொல்லல்.

ஆடுங் கொடிநெடுந் தேர்வல வாவன்ப ரன்பரென்றே
தேடுங் கொடிகையிற் கற்பமந் தேடியி செய்தனம்யாம்
வாடுங் கொடிக்குவெந் நீர்விடல் போல்வேண் மயில்வரைமேற்
கூடுங் கொடியவென் னெஞ்சமுன் பாய்ச்சற் குதிரையுமே. (௩௨௩)

### மேகந் தன்னொடு சொல்லல்.

வீரா திருந்தவன் மேலன்பென் னேவென்று மாற்றுதற்கோ
பாரா திரார்வந் தனரென்ன வின்சொற் பகருதற்கோ
வேரா ரொருவரை நீத்துச்செல் பாவி யெனநிகராய்த்
தாரா தரமே முருகன் மயில்வரை சார்கின்றதே. (௩௨௪)

### பாங்கி, வலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தல்.

கார்முடி யாய்வெளி யேபயி லாயிரு கண்விழியாய்
வார்புனை யாயணி தானணி யாயிவை மாற்றினதா
லூர்திகழ் வேண்மயில் வெற்பி லரகர வோசையென்ன
வீரியர் வந்தன ரென்றேமுழங்கிய வெண்சங்கமே. (௩௨௫)

### வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

வலையிட்டும் பின்னொரு வீட்டி லடைத்துங்கைவாளுருவிக்[போல்
கொலையிட்டுங் கண்ட துண்டஞ்செய்தும்வேண்மயிற் குன்றத்தர்
விலையிட்டு மென்மையர் மென்மைய ரேசங்க மேயுங்கள்பேர்
தலையிட்டுங் காலிட்டுங் கல்யாணத் துஞ்சொல்லத் தக்கதுவே. ()

வந்துழி, நினைத்தமை வினவல்.

உங்களை விட்டுப் பிரியா திருந்திடு மொண்டொடிக்கு
மங்கலங் காட்டத் திருப்பூ வணம்வந்த மார்க்கநன்றுஞ்
செங்கைகொள் வேலன் மயில்வெற்பிற் சிந்தனை செய்ததுண்டோ
வெங்களை விட்டுப் பொருள் வேறு தேடு மிறையவரே. (௩௨௭)

நினைத்தமை செப்பல்.

குளங்கண்ட போதும் வயல்கண்டபோதுமுன் கூட்டுண்வண்டின்
வளங்கண்ட போதுங் குயில்கூவும் போது மழைசெறிகார்த்
தளங்கண்ட போது மயில்வெற்பி னிட்டஎ சாமிமெய்ச்ச
களங்கண்ட போது நினைத்தமை யாகனுங் கண்டனனே. (௩௨௮)

அனத்தகை யவளை யாற்றுவித் திருந்தமை, பாங்கிகூறல்

தாக்கா நிதிசெய்யச் சென்றமன் னுவுமை தன்புதல்வன்
மாக்கார் மயூர கிரிமான் வருத்தத்தை மாற்றியது
நீக்கான் முகிலும் படமுந்தன் நாலுஞ்செஞ் சேல்விழியுங்
காக்காய் கனுவெறும் பொய்தானு நானுமுன் கைகளுமே. ()

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் முற்றிற்று.

பத்தொன்பதாவது—வரைவு மலிவு.

காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி, காதலிக்குணர்த்தல்.

திரைக்கட லேயெண்ப தாயிரம் யோசனை சேர்ந்த வொன்னார்
புரத்திடை வாவென்ற சிங்கார வேலன் புரக்குமயில்
வரைக்குயி லேகிளி யேமன் னவருன் மணங்கருதி
யரைப்பணங் கொள்ளப்பொன் னுயிரங் கோடி யனுப்பினரே ()

காதலி நற்று, யுள்ள மகிழ்ச்சியுள்ளல்.

கண்டன்னை நெஞ்சங் களிகூருஞ் சிற்றன்னை கண்டனளேல்
விண்டிட நெஞ்சங் குறியா ளிதுநிசம் வீணல்லவே
திண்டிறல் வேலன் பசிய மயூரச் சிலம்பிடத்தே
வண்டென்ன வென்றன் மணந்தேடி மன்னவர் வந்திடினே. ()

பாங்கி, தமர்வரை வேதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்.

காதலர் வந்தனர் நீயெதிர்ந் தாலென்னக் காருண்யரான்
சோதி முருகன் குகன்சேர்ந்தன் றேகைச் சுரும்பிடத்தே
மாதங்கந் தேர்பொற் குடங்கயல் பூங்க வரியொடுமுன்
றுதை யெதிர்ந்தனர் கேண்மேளத் தோடுகைத் தாளங்களே. ()

### அவ,ளுவகையாற்ரு துளத்தோடு கிளத்தல்.

ஆடுதற்கு வந்த விபத்தும் வராத தறிந்துமுலைக்
கோட்டுக்கு வந்த விறுமாப்பு மாடவர் கூறுங்கல்விப்
பாட்டுக்கு ளான பயனுநெஞ் சேவிடப் பார்த்திபர்கைத்
தேட்டுக் களிற்றியம் வேண்மயில் வெற்பைத் திடுக்கிட்டதே. ()

### தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

தாமரை மேற்பனை காய்த்தது நின்மேற் றனையயிலன்போற்
பூமின் முடித்தலை சாய்த்ததும் வேண்மயிற் பொன்வரைநீ
காமனு மாசி விரதியும் போலக் கலந்ததுவு
நாமறிந் தோமன்னை யேயது வோவின்னு நன்னுவமே. (௯௯௪)

### தலைவி, மணம்பொருட் டாக வணங்கைப் பராநிலை; காட்டல்.

திருமான் மருகன் பரங்குன்றின் வாய்த்தெய்வ யானைதனக்
கொருமாலை யிட்டவன் றேறனை மயில்வெற் புறையண்ணலை
வருமாலை யந்தொழு மங்கையைப் பார்மறை மண்டலத்தே
யிருபூ வெழும்பி யொருபூ வரும்பா யிருந்ததுவே. (௯௯௫)

### கண்டோன் மகிழ்தல்.

மன்னன் முருகுந்தன் சீர்கொண்டு போற்று மனமகிழ்வோன்
பன்னுந் தமிழ்செறி தோகை மலையினிற் பார்மனமே
மின்னும் புயனு மதியமும் பூவில் விளக்கிமல
ரன்னங் கடவுளை நம்மால் வணங்கு மருமையையே. (௯௯௬)

வரைவுமலிவு முற்றிற்று.

---

## இருபதாவது—அறத்தொடு நிற்றல்.

---

### கையறு தோழி கண்ணீர் துடைத்தல்.

இந்திர னூர்குடி யேற்றிக் கயிலைக் கெழுந்தருளி
வந்தவர் தோகை மலைச்சாரற் போந்த பயிலிபலே
சந்திர காந்தக்கற் சாணையிற் றண்ணீர் தருதலென்னே
பந்தியில் லாத பகலே மதியெங் கமர்ந்ததுவே. (௯௯௭)

### கலுழ்தற் காரணங்கூறல்.

வாளுக்கு வின்னமை வைத்தா ருறவை மனத்தெண்ணியோ
நீளத் துயில்புரி யாத வெறுப்பை நினைந்துகொண்டோ
வேளுக்குப் பேரழ கீந்தருள் வேண்மயில் வெற்பிடத்திந்
நாளிற்பற் றுள்ளவர் போலே கலுழு நயனங்களே. (௯௯௮)

தலைவன், றெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமை, யெய்தக்கூறல்.

கண்ணூன தாமரை வேலவன் மேற்செலக் காட்டியுயர்
விண்மீ திருதா மரைமலர் நீட்டி விரைந்தினிமேற்
பெண்ணோ பிரியிற் பிரிந்தே னிசமென்று பேசினர்மற்
றெண்ணேர் தவறு மயில்வரை மீதி லிருந்தவரே. (௫௩௯)

இகந்தமை யியம்பல்.

அண்டர் பணிகும்ப மாமுனிக் கேதமி ழானவெல்லாம்
விண்ட குழகன் கடம்பன் மயில்வரை மேவுகொடைக்
கொண்டலன் னார்கனி வாய்ப்பா லமுதங் குலாவிப்பன்னா
ளுண்டவர் வீட்டுக் கிரண்டகஞ் செய்தா லுரைப்பதென்னே. ()

(பாங்கிஇறைவனை) இயற்பழித் துரைத்தல்.

பார்மே லிறைவர்சொற் கன்மே லெழுத்தென்பர் பார்க்கிலது
நீர்மே லெழுத்தென வாயிற்றன் றேயிவர் நேர்நனவு
கார்மேல் விளங்கு முருகன் மயில்வெற்பிற் கந்தருவ
ரூர்மேன்மை யானது நீயன்ப ரென்பதென் னேவியப்பே. (௫௪௧)

(தலைவி) இயற்பட மொழிதல்.

முயக்கிடை யேவெளி காண வயர்ந்தது முன்னொருநாட்
கயத்திடைச் சொற்றதும் வேண்மயில் வெற்பர் கருதலர்மேல்
வயத்திடைச் செல்பவ ராரென்ற போது வருந்துயரு
மயர்த்திருப் பாரல்லர் தப்பாது மார்க்க மதிர்கடலே. (௫௪௨)

தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றல்.

முருகாவுன் முன்சொன்ன வார்த்தைவிண் டாரென் றழுத்தவெற்பி
லிருகாந்த ளேற்றிய துண்டே பொறுத்தரு ளொன்றுசொல்லக்
குருகார் சரவணப் பொய்கையின் மூழ்கிக்குன் றக்குடிக்கே
திருகா மனச்சகி யேவிரை வாயின்று செல்குவமே. (௫௪௩)

இல்வயிற் செறித்தமை சொல்லல்.

காட்டின் மறித்துப்பொய் யாமொழி கூறுங் கவிதைகொண்டோன்
வீட்டினி லாறு படைவீட்டி னன்மயில் வெற்பனையாய்
சூட்டிய மாலையுந் தோண்மாலை யுஞ்சொல்லுஞ் சோலையுநின்
னூட்டிய மாலையுங் கண்டன்னை யிற்செறிப் பாக்கினளே. (௫௪௪)

செவிலி, கனையிருளவன்வரக் கண்டமைகூறல்.

கத்தூரி மிஞ்சிய நீற்றிலை சேர்பழுக் காய்ச்சுருட்டு
வைத்தாய் மலர்மெத்தை மீதுகொண் டன்னை மனத்துயிர்த்தா
ளொத்தா மெனவெண்ணி வேண்மயில் வெற்பி லிரவினின்று
முத்தார மும்வெற் றிலைச்சிட்டுங் கண்டு முனிந்தனளே. (௫௪௫)

### எறிவளை வேற்றுமைக் கேது வினாதல்.

செய்யவன் வேலன் மயில்வெற்பின் மன்னர் சிறுமிக்கின்றே
மெய்யுறு வேதனை நேரென்னி லன்னம் விருப்பமில்லைக்
கையில் வளையில்லை பாலென் றெவருங் கருதினரே
யையமுண் டாய தவள்பாங்கி யாமென் னருண்மகளே. (௩௪௬)

### வெறி விலக்கல்.

சோக முறுத்தென் கிழக்குறு தேவின் றுயர்குறியாய்
வாகன மான கடாய்க் கின மென்ன மனத்தெண்ணிலாய்
கூகுவென் றார்த்தனை குன்றக் குடியிற் குமரவெங்கள்
நாகின மானுன்னை நம்பின பாவநன் றாகியதே. (௩௪௭)

### வெறி விலக்கியவழி வினாதல்.

தாருகன் பாசு பதத்தைக்கை யேந்திய சாமியையம்
போருக னைப் புகன்றனை னனைப் புகல்வதென்னே
யோரு மயில்வரை மேலுள்ள வார்த்தை யுரைபெறுநூல்
வாரங்கொ ளன்னைக் குறாயா தொளித்தன் மரபல்லவே. (௩௪௮)

### பூ, ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

பெரும்பூத மைந்த னுருவான சூரைப் பிளந்தடியார்
தரும்பூசை பெற்றவன் மாயூர வெற்பிற்றை யற்களியே
பொருந்தாரைப் பைங்குழல் பற்றி யிழுத்துப் புகுமுடித்து
வருந்தா வுரைசொற் றிருந்தா ரொருவர் மனமகிழ்ந்தே. (௩௪௯)

### புனல், ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

முன்பகை யாக வரிபட்ட பூக்கண் முகிழ்நகையைத்
தன்பகை தீர்க்கவம் பிற்கொல்லு நாளித் தரணியிலோர்
மின்பதி வேலவர் கையிற் குழல்கொண்டு வேட்டெழுப்பி
யுன்புதல் விக்குயிர் தந்தார்செவ் வேண்மயி லோங்கலினே. (௩௫௰)

### களிறு, ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

கண்ணுக் கமுதெனும் வேண்மயில் வெற்பிலோர் காவலர்நம்
பெண்ணிற் கரும்போர் மதயானை வாய்ப்படப் பின்னளித்தார்
விண்ணி லெழும்புங் கலைகள்பின் போயது வெய்யபணி
நண்ணுமவ் வேளை கரிமலை வச்சிர நாந்தகமே. (௩௫௧)

### மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினாதல்.

அரவிற்சங் காமுலை மேற்றோன் றியபிறை யாய்ந்திலைசெய்
கரவிற்சங் கோதையுங் காண்கிலை சேர்துகில் காண்கிலைகோன்
வரவிற்சங் கோதை மகிழ்வதுஞ் செவ்வேண் மயில்வரைமே
லிரவிற்சங் கோதை குறிப்பதும் பாரா திருந்தனையே. (௩௫௨)

### செவிலி, முன்னிலை மொழியால் மொழிதல்.

அண்ணாக பரிங்கி மதியுடன் பாட்டிலொ ராண்சிங்கநம்
பெண்ணனை மத்தகஞ் செங்கை நகத்தாற் பிளந்ததுண்டாங்
கண்ணுன தெய்வ முருகன் மயில்வரைக் காரிகையே
யுண்ணு துறங்கா ததிர்சிங்க நோக்கநெஞ் சோர்கின்றதே. ()

அறத்தோடு நிற்றல் முற்றிற்று.

## இருபத்தோன்றாவது--உடன் போக்கு.

### டாங்கி தலைவற் குடன்போக் குணர்த்தல்.

அஞ்சரப் படையஞ் சனுப்பிவெஞ் சூர னணியைவென்றோன்
மஞ்சிற் பொலியு மயில்வரை காக்கின்ற மன்னவரே
செஞ்சொற் கிளியையுன் பூங்கா வனத்திற் செறிந்தனன்றுங்
கொஞ்சத் தனத்துக்குக் கொஞ்சத் தனத்தைக் கொடாமரே.

### ஆங்கவன் மறுத்தல்.

இரண்டு தனக்குட னீய மனுட னிருக்கவுநீ
முரண்பட வார்த்தை மொழிந்தனை நிற்க முதியவிண்ணோர்
சரண்புகுஞ் சாமி மயில்வெற்பிற் றுமனை பூத்திடுமோ
வரண்புரம் போகுமுன் மாந்தளிர் மேன்முத் தரும்பிடுமே. ()

### அவளுடன் படுத்தல்.

இனத்திற் செறிந்த விவள்புத்தி சாலியென் றின்னுமெண்ணீர்
கனத்திற் பொலிந்த முருகன் மயில்வரைக் காவலரே
யனத்திற் செறிநடை யார்நல்ல கான மகல்வதுண்டோ
வனத்திற் படாததுண் டோதா மரைநும் மகிழ்ச்சியுண்டே. ()

### தலைவன் போக்குடன் படுதல்.

கல்லுஞ் சரிமல ருஞ்சரி வேண்மயிற் கார்வரைமேற்
புல்லுமுள் ளுஞ்சரி சேர்ந்தேகி லென்று புகன்றதுண்டே
யொல்குங் கிளிக்குத் தினைசாமை காட்டியவ் வோர்புறந்தே
நெல்லுங் கனியுந் தெரித்தமு தூட்டிநின் றேகுவனே. (௫௫௭)

### பாங்கி, தலைவிக்குடன்போக்குணர்த்தல்.

தனத்திற் சிறந்தவர் மைபாலை யாழிற் றடவந்ததா
லுனக்கவ ரென்றும் பிரியா திருப்ப துசிதமன்றோ
வனத்திற் குமரிக்கு வேண்டுதல் செய்ய மயில்வரைவேள்
புனத்திற் குமரி வரவேண்டு மென்றும் புகன்றனரே. (௫௫௮)

## உகூ—உடன் போக்கு.

### தலைவி, நாணழி விரங்கல்.

தென்றுவென் றின்னிசை வண்டினம் பாடுஞ்செழும்பொழில்சூழ்
பன்றுடர் போற்று முருகேசன் றேகைப் பருப்பதத்தே
நன்றுணை தேசமெங் குஞ்செலப் போக்கித் தமையின்றியே
யென்றுணை மாற்ற நினைத்தனன் றேகம் மிறையவரே. (௩௫௧)

### கற்பு மேம்பாடு, பூண்முலைப்பாங்கி புகறல்.

இற்படி வாழ்க்கையர் போலிரு மாதரிடத்தர்மயில்
வெற்பிற் றனைக்க ணெடுத்தவ ரார்கரி வென்றவரார்
கற்பது வேதலைக் கொள்வார் மணத்தைக் கருதியபேர்
பொற்பறு நாண்டலைக் கொண்டா லென்றுவது பூங்கொடியே. ()

### தலைவி, யொருப்பட்டெழுதல்.

ஊரிருந் தாலென் றுறவிருந் தாலென் றுவந்தபெய
ராரிருந் தாலென் களிற்றைப் பிடிநீத் தமர்வதுண்டோ
பாரிருந் தாளுங் குமரன் மயில்வரைப் பாங்கிமின்னே
காரிருந் தாலல்ல வோமயி லாடல் கருதுவதே. (௩௫௩)

### விருப்புடைப்பாங்கி, சுரத்தியல் புரைத்தல்.

மன்னர்பி னப்படிச் செய்வது வேகற்பின் மங்கையர்க்கு
நன்னய மாவது சேந்தன் குகன்மயி ஞகமின்னே
யுன்னுசெம் பாப்பு கரும்பாம் பதாங்கரி யுங்கரியாம்
பன்னு தழலிற் குறையுங் குழையும்வெட் பாலையுண்டே. (௩௫௨)

### (தலைவி) சொல்லல்

ஆண்டவன் சோலை மலைதிரு வேரக மார்பழனி
வேண்டு பரங்கிரி செந்தூரன் வேண்மயில் வெற்பகத்தே
யீண்டிவர் வீட்டின் மனமில்லைக் கோவில்லை யின்பமில்லை
நாண்டரு கில்லா வலரில்லைக் காட்டிலெந் நாளுமுண்டே. (௩௫௩)

### பாங்கி, கையடை கொடுத்தல்.

பொருகும்ப ராசி யொருசிங்க ராசியிற் போயிடினுஞ்
சாநின்ற கூந்தல் விடைராசி யின்பெயர் சாரினும
கரமீனங் கொள்ள விடாமலிக் கன்னியைக் காத்துநன்று
யிருகற் கடகக்கை யாம்வேண்மயில்வெற் பிறையவனே. (௩௫௪)

### வைகிருள் விடுத்தல்.

காமத்தி லாடிய தேவர்மெய்ம் மாலை கலிக்கவட
வீமத்தி லாடி மகன்றேகை வெற்பி லிறையவரே
சேமத்தி லாக மனமிருந் தாலித் தெரிவைக்குநீர்
சாமத்தின் மாலையைச் சூட்டிப்பொன் வைகறை தான்செல்லுமே.

### அவன்சுரத் துய்த்தல்.

மாலி லரவம் புரியார் விடையில் விருபவர்பொன்
மேலி லரவம் புரிவார் மகன்மயில வெற்பனையாய்
பாலி லரவம் புலியுண்டு பாம்புண்டு பையநட
காலி லரவமில் வூரி லரவத்தைக் காட்டிடுமே. (௩௬௬)

### அசைவறிந் திருத்தல்.

நேத்திர மூன் றுடை யான்மக னென்ற னினைவில்வந்து
பாத்திர மாக்கொண்ட வேண்மயில் வெற்புறை பைங்கொடியே
காத்திரந் தேற விளைந்துநன் னீரிற் கலந்துனைத்தோர்
மாத்திரை செல்லிற் சுரமாறும் பின்னை வழிநலமே. (௩௬௭)

### உவந்தலர்சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல்.

பணைமுடி யாரன் பனைமுடி யார்வன் பனைமுடிப்பார்
குணைமுடிப் பார்கருஞ் செவ்வேண்மயில்வெற்பிற் கொம்பரன்னீர்
கணைமுடை யாரென நின்றேமிக் காட்டினிற் காரிகைநும்
மணமுடி யார்க்கத் திசைகொள்ள வந்த மகிழ்ச்சிநன்றே. (௩௬௮)

### கண்டோரயிர்த்தல்.

பண்ணு யிரங்கொண்டு தும்புரு நாரதர் பாடவிரு
பெண்ணோர் விரும்ப வெழுந்தருள் காட்சிப் பெருமையுள்ளான்
றண்ணூர் மயில வெற்பி லிந்த்ராணி யென்னிற்கண் டாணிமைக்குங்
கண்ணு யிரமில்லைத் தேவேந்த்ர னென்னக் கருதிவர்க்கே (௩௬௯)

### காதலின் விலக்கல்.

ஆறே பெரிதா றலைப்போர் கொடிய ரலைகடல்போ
லூறே வளவின் றனிச்சம்பொ ருதுள்ளங் காலுவட்கு
வீறேது மாயை மகனைவென் றோன்மயில் வெற்பண்ணலே
பேறேதெம்மூரலர் மாளிகை வைகுந்தம் பின்செல்கவே. (௩௭௦)

### தன்பதியணிமை சாற்றல்.

பகர்தேவி பட்டணம் விட்டுவந் தாற்றிருப் பாலைக்குடி [டோ
மிருசேது மார்க்கமென் றெண்ணலல் லாலெண்ணம் வேறுமுண்
புகலே சிறுவயல் விட்டாற்பெருவயல் பூம்பொழில்கண்
மிகவே தெரியுங்குன் றக்குடிக் கோவிலும் வேலையுமே. (௩௭௧)

### தலைவன், தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

அன்னை யெனும்பிணி யில்லாத காட்டி லருக்கிளியே
யுன்னிகர் கின்ற சரவணப் பொய்கை யுதுசுவர்க்கந்
தன்னிகர் கின்றசெவ் வேண்மயில் வெற்பிது தண்களப
மின்னிகர் பொன்னுலகைவெள்ளி யாக்கிய வீடிதுவே. (௩௭௨)

**உடன்போக்கு முற்றிற்று.**

—o—

## இருபத்திரண்டாவது—கற்பொடுபுணர்ந்த கேள்வை.

### பாங்கியை வினவல்.

பங்கெடுத் தாய்பே ருயிர்ப்பெடுத் தாயொர் பயிலெடுத்தாய்
கொங்கெடுத் தாயங்கு மிங்குஞ்சென் றுய்பவங் கொள்கடலில்
வங்கெடுத் தாண்டவன் சேந்தன் மயில்வரைக் குன்கிளிதான்
சிங்கெடுத் தேசெல்லுங் கோளை யுறுமெனிற் செப்பினியே. ()

### பாங்கி செவிலிக் குணர்த்தல்.

நன்றே தருமிந்த மாலையென் றுடதர நான்புகுந்தே
னன்றே பழைய வரைநினைந் தோவெனை யன்பிகந்தோ
சென்றா டிருப்பினன் காணேன் முருகன் செயலிதென்றே
நின்றேன் மயில்வரைக் கூகை யிரட்டு நெடுஞ்சுரமே. (௯௭௪)

### இளைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதல்.

சொல்விலங் கிட்டதல் லாளென் வளர்த்த துரைப்பிடிக்கு
வல்விலங் கொன்றுசம் பாதிக்கி லோம்விரை வாய்ப்புகுந்தாள்
புல்ல விளையும் பயிர்க்கிந்தப் போக்கு முளைத்ததென்றூ
செல்வஞ் செறிகின்ற குன்றக் குடியான் செயலிதுவே. (௯௭௫)

### தன்னறி வின்மை தன்னைநொந் துரைத்தல்.

இரவு தவிர்ப்பது நன்றேயென் றுளிந்த வேந்தலிற்போய்
வரவிளை யாட வருள்செயென் றுள்வேண் மயில்வரையார்
கரவி லொடுங்கவர் கள்ளரென் றுள்சொற் கருதிலன்யா
னுரமதிற் சாய்ந்தினிப் பாலை யுதவென்று மோதினனே. (௯௭௬)

### தெய்வம் வாழ்த்தல்.

பகரத்தி லேவ லடியென்றல் பண்ணை பகரும்விதை
மகிழ்கின்ற தாய்போல் வருமாறு செய்வி மயூரகிரி
முகிழ்நகை வள்ளி கணவர் தலைவரை முன்னிமனாந்
தொகுமலர் பாலை யிருகோங் கலர்த்திய தோகையையே. (௯௭௭)

### செவிலியறத்தோடு நிற்றல்.

பிடியானைக் கொம்பொரு நான்குபின் பாகிடப் பின்றொடர்ந்த
துடியானைக் கொம்புமு நான்கினின் றூனைத் துறந்துநமர்
படிமீது வேற்று மணநினைந் தானமயிற் பற்றுமுண்டோ
வடிவாளை வாழ்விக்க நாம் வேண்மயில் வெற்பினம் மாயிழைக்கே. ()

### பாங்கி தன்னொடு புலம்பல்.

ஆரப் பொருந்திய தின்றுய்க் குணைத்தனை யன்றெனக்கே
சேரச்சொற் றுயில்லை வேலன் மயூரச் சிலம்பிலெம்மை
யூரிற் பகைத்துடி பார்க்கவைத் தாயுன் னுறவினளைப்
பாரிற் பகைத்துடி பார்க்கவிட் டாயென்ன பாவமிதே. (௯௭௯)

### பாங்கியர் தம்மோடு புலம்பல்.

தேவையை மேற்கொண் டெழுந்தாலும் போம்பொருள் சேர்த
பாவைய ரேவேண் மயில்வெற்பி னென்ன பகர்வதியா[லுண்டோ
ணேவு நிகர்கண்ணி யைநோக்கி நீங்க ளிரங்கலென்னே
கோவை விரும்பிப்பின் பாலை யிகழ்தல் குணமல்லவே. (௯அ0)

### அயலார் தம்மோடு புலம்பல்.

இரவே யிருபூ மலர மதியை யெமக்கொளித்து
வரவே புரியும்வெய் யோனை யழைத்து மதிகொடுத்து
விரைவாய் நடந்தனள் வேலன் மயில்வரை மெல்லியலீ
ரரவே யிழந்த மணிபோல வாடி யயர்ந்தனமே. (௯அக)

### பயிலிடந் தம்மோடு புலம்பல்.

மாவே வடுக்கொள் பலாவே கனிகனி வண்டன்முல்லைக்
காவேகண் ணீர்சொரி யாறே யிரைசுனை கான்றமணப்
பூவே தலைகவிழ் மென்கொடி யேயனம் போய்நடுங்கு
தேவே யுறைமயில் வெற்பானை யானெனத் தேடிக்கொண்டே. ()

### நிமித்தம் போற்றல்.

ஒருங்கடி சிற்குவை தானஞ்செய் வாரொரு கோடி நற்றப்
பெருங்கடி போனு முருகன் மயூரப் பிறங்கலிலே
யருங்கடி யாமென்றன் காவலை நீத்தா ளணையச்செய்தாற்
கருங்கொடியேவரும்பொன்கொடியாற்றின்னுங்காய்க்கொடியே.

### சுரந்தணி வித்தல்.

நேசித்த பாதையி ராமீ சுரவழி நேரும்வல்லோர்
யோசித்த பாம்பனந் தங்காண லாம்வே யுகுத்தமுத்த
மாசித்த பூமகள் கொப்புள மாங்கதி ராந்தெய்வரீர்
பூசித்த வேண்மயில் வெற்பாரைக் காப்பது புண்ணியமே. (௯அச)

### தன்மகள் மென்மைத் தன்மைக் கிரங்கல்.

பன்னீரில் லாச்சந் தனம்பார்க்கில் வெப்பாம் பதயுகள
மென்மேனுவொர் நாளனத் தூவி யெனச்சிவப் பெய்தியவா
னன்னீர்கொள் வேண்மயில் வெற்பிற்சுனைமொண்டநல்லதண்ணீர்
வெந்நீரென் பாட்குக் குளிர்நீர்மை யானதென் வெஞ்சுரமே. ()

### இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கல்.

வேங்கைத் துறுகற் புலிப்பற ழென்று வெருவியையுர்
பாங்கர்வந் தீட்டி கொடுக்கு மிளமைப் பருவத்தினெ
ரீங்கிருள் யாமத்து வேண்மயில் வெற்பைத் துருவினளாங்
கோங்கரும் பாது தளவும்வி ளாது குறுமுகையே. (௯அ௫)

அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கல்.

பங்காளும் வள்ளியென் றுய்தேவ குஞ்சரி பால்விருப்பார்
மங்காத வாசக் கடம்பார் மயூர வரையினிலே
சங்கித மேளந் தணுரென்ற போதுள்ளந் தானஞ்சுவாள்
வெங்கா ருடலத்த நாகங்க ளோசிக்கின் மெய்ந்நடுக்கே. (௩௮௭)

கண்டோ ரிரக்கம்.

தாகத்தி னாற்சென்று பாங்கிய ராற்றிற் றலைப்படச்சூழ்
போகத்தி னார்சொல் விடியே முழங்கப் பொறுதநற்று
யாகத்தின் கண்மழை சோனைய தாக வகலுங்கொல்லோ
மேகத்தின்பான்மின் னும்போலச்செல்வேண்மயில்வெற்பிடத்தே.

ஆற்றாத் தாயைத் தேற்றல்.

வானத்திற் செல்வன் பரவையி னூடி வருவனிந்தக்
கானத்தை வெற்படைத் தருவில னேபண்டு காதிர்பட்டி
நான்வைத்த வேரை யிவர்மாறி வைக்கினுந் தான்கொணர்வன்
ஞானக் குமரன் மயில்வரை வேந்த னளனல்லவே. (௩௮௯)

ஆற்றிடை, முக்கோற் பகவரை வினாதல்.

படையவர் முன்செல்லப் பின்படைந் தாளொரு பாவையயி
லுடையவர் வேண்மயில் வெற்பகல் வாரினுண் டோகண்டது
நடையவ ரேகையின் முக்கோல்கொண் டுய்வா னடையவரே
குடையவ ரேயறக் கனி யமுது குடையவரே. (௩௯௦)

மிக்கோ, ரேதுக்காட்டல்.

பெண்ணாள் பிரிந்தாள் பிரிந்தா ளெனச்சொற் பிதற்றிவந்தார்
விண்ணாடு காட்டினில் வீணே யலைவதென் வேலெடுத்தோர்
மண்ணாடும் போற்றுங்குன் றக்குடி யாய்பரு வத்தொருவ
ருண்ணாத கேணி சுவைபெறு மோவிவ் வுலகத்திலே. (௩௯௪)

எயிற்றியோடு புலம்பல்.

மேகம் தேறிய வெண்பிறை போற்கொடு வேங்கைநக
மோகையிற் சூடு மெயினர்பெண் ணேமயி லோன்முருகன்
சோகமி லாத மயில்வரை மீதொரு தோகையுமோர்
நாகமுங் கூடி விளையாட லுண்டோ நவிலுவையே. (௩௯௨)

குரவோடு புலம்பல்.

மருவார் குழையணிந் தாய்பூங் கொடியிடை வாய்ந்தனைப்பூங்
குருவா யினைமுரு கோன்மயில் வெற்பிற் செழுங்குரவே
யிருகா னடையும் வளைக்கையுஞ் சொல்லுமில் லாவியப்பா
யொருபாவை காட்டியொர் பாவையைக் காட்டா துணர்வல்லவே.

சுவடுகண்டிரங்கல்.

திரண்ட குமரியைக் கைப்பற்றி ஞர்சுரத் தீவலஞ்செய்
தரந்தரு சேந்தன் மயில்வெற்பை நீங்கின ருற்றவர்கா
லிரண்டடி நாலடி யாகிய தேபெண் ணிரண்டடிதா
னரண்புகு மெட்டடி யாகிய தேசெய்ய லாவதென்னே. (நகூச)

இதுவுமது.

எங்குஞ்செந் தாமரை மேற்று மரையுற் றெதிர்கடம்பு
குங்குமஞ் சந்தங் கொழுந்து மணத்தாற் குளிர்ந்தனவாற்
றங்கு புறவடி மீதுசெங் கைகொண்டு தாங்கியபோ
தங்க ளிணையடி யீதுசெவ் வேண்மயி லார்வெற்பிலே. (நகூரு)

கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டல்.

உடம்புமுன் னாக வுயிர்பின் னுருவெடுத் துற்றதுபோ
லிடம்பெறுகொங்கையொருவேந்தன்பின்னடந்தேகலுண்டோ
குடம்பைதன் வீடெனப் புட்போற் குகன்மயிற் குன்றிடத்தே
நடந்தவர் போல் வரு வீர்நும் வரத்து நலந்தந்ததே. (நகூகூ)

அவர், புலம்ப றேற்றல்.

சுவர்ப்படு பந்தென மீடிமின் னேயவர் சுந்தரனார்
தவப்புதல் வன்முரு கேசன் மயில்வரை சார்ந்தவர்போ
லுவப்பின ராகி மருவ லரைமுடித் துற்றுதவிக்
கவற்சியில் பேரின்ப மேவ நகர்ப்புறங் கால்வைப்பரே. (நகூஎ)

புதல்வியைக் காணாது, கவலை கூர்தல்.

விண்ணாட்டு மங்கைய ரான் மாடி யாடியின் மெய்ம்மறைக்கு
மண்ணாட்டு மாதர் திகழ்வேண் மயில்வெற்பின் மற்றெங்கண்
கண்ணோர் குராவு மராவு மராவுங் கராவுமென [டேன்
துண்ணே ரிராவுங் கலையுங் கலையுமென் னுள்ளமுமே. (நகூஅ)

கற்பொடு புணர்ந்த கௌவை முற்றிற்று.

---

## இருபத்துமூன்றுவது—மீட்சி.

---

தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குணர்த்தல்.

மடமெனச் சென்றோர் மயில்தொடர்ந் தேனது வான்பறந்த
போதொரு மானைத் தொடர்ந்துசென் றேனது போனதுகாண்
வீதி செறிமயில் வெற்பார் செயலென்று மீண்டனன்யான்
போதல்செய் யாதது வானே யவர்சேண் பொருந்தினரே. ()

தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றல்.

ஐயா புரியுஞ் சரவணப் பொய்கையும் வாயில்செறி
கையா றிரண்டுடை யான்கோயிற் றோகைக் கனங்கிரியு
மய்யா னிமுருக ரும்விர வாகு வுடனிடும்பன்
மெய்யான சன்னிதி யும்பா ரிதுநம் வியனகரே. (சூ00)

தலைவிமுன் செல்வோர் தம்மொடு தன்வரல்,
பாங்கியர்க் குணர்த்தி விடுத்தல்.

பந்தடி போற்பா லிடையா டியகுழற் பணிபிணைப்போ
லுந்து மிருவினை யாற்போகர் தாய்ப்பா ருடம்பிணைப்போல்
வந்து திரும்பிய பாங்கியர்க் கேவேண் மயில்வரைமேற்
சந்தடி பார்த்து வரல்கூறும் மேதத் தலைவர்நனே. (சூ0க)

ஆங்கவர், பாங்கியர்க் குணர்த்தல்.

நல்லதண் ணீர்ள்ளி யுண்ணு தவரில்லை நன்மலரை
யெல்ல வருமுடிப் பாரத னுமிலன் னிரங்குதனீர்
கல்விகொள் வேண்மயில் வெற்பி லிருவருங் காடன்செட்டி
செல்வ மணிமண் டபப்படி பார்த்துத் திரும்பினரே. (சூ0உ)

ஆங்கவர் கேட்டு, நற்றாய்க் குணர்த்தல்.

அன்னை யெமையிங் நகரார் துணையற் றவரெனவே
சொன்ன பழிமொழி போயின வாற்சுரம் போமிருவர்
மன்னுதன் றக்குடி வேலை வணங்கி மருதுதுரை
தன்ன தரண்மனை யிற்புசித் தேவரல் சாற்றினரே. (சூ0ங)

நற்றாய் கேட்டவ, னுளங்கோள் வேலனை வினாதல்.

மயில்வரை வேலன் வருவரென் றோதி வருமுருகா
புயனு மொருமின்னுங் காட்டி னடந்த புதுமையுண்டே
யயலவர் காண வகமெய்து மோவயல் வீடெய்துமோ
செயல்பெற்ற மின்கைத் தருமோவின் றோவிது செப்புகவே. ()

மீட்சி முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது—தன்மனைவரைதல்.

பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்,
செவிலியை வினாதல்.

வராம லிருக்கினு மோர்வீட்டுள் ளார்பிறர் மாடத்திலே
யிராம லிருப்பர் குகன்மயில் வெற்பி லிதுவளமாந்
தராதுகொண் டார்பின் கொடாதுசென் றூர்வந்து சார்ந்திந்தலூர்
பரவ மணங்கொண் டிலர்கா வலரென்ற பான்மைநன்றே. ()

'செவிலிக்கிதனை,' வரைந்தமை யுணர்த்தல்.

சொன்மாலை கொண்டு புலவர்க்குச் சேந்தன் சைந்தோகைவெற்பி
னன்மாலை பைம்பொ னறுந்தூசு தண்டிகை நல்லுணவோ
டென்மாலை யீந்து தலைநா ணிகர்நா ணிலைசெய்துநம்
பொன்மாலைக் கேமணந் தந்தாரென் றேற்றார் புகன்றனரே. ()

வரைந்தமை செவிலி, நற்றாய்க் குணர்த்தல்.

அருணிதிப் பாலினு மேற்பா ரினுமறி யாமையினான்
மருது துரைபணி சேந்தன் மயூர வரைத்திருவே
யிருவரை யேந்தி யொருவரை யுட்கொண் டிருந்தவனோர்
வரைதலை மேற்கொண் டனனென்று வெஞ்சொல் வழங்கினரே.

உற்றாங்கிருவரும், தலைவியில் வந்துழி தலைவன் பாங்கிக்,
கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றல்.

குன்றக் குடிக்குமரேசன் பதத்தருள் கொண்டுநன்று
மன்றநடந்தது சோலையில் லாமமைன் மானையருண்
மின்றகு நுண்ணிடைக் கோது சனத்தை விளம்பவற்றோ
வொன்றியநீயெனுங் கொம்பில்லைத் தப்பென்பதொன்றில்லையே. ()

தானது முன்னே சாற்றிய துரைத்தல்.

வெப்புற்ற கார்வலம் பார்க்கின்ற நாடவிம் மெல்லியலைக்
கைப்பற்றி யேகல்கல் யாணமன் றேவின்று கைப்பற்றினு
றொப்பற் றவரென்று சொல்வதென் றேண்மயி லோங்கலிவ்வூ
ரெப்பக் கமுமுரைத் தாரெங்கள் போனுன்கை யேற்றவரே. ()

இதுவுமது.

நானுரைத் தேன்முன்ன மன்றித் தமிழ்கொண்டு நல்குவெகு
மானமுந் தோகை மலைக்குமரேசர்முன் வைத்தவன்ன
தானமு மஞ்சளும் வாசியும் யானையுந் தையனல்லார்
தேன்மொழி யுங்கண் ணுங் கைகாலு மூரெங்குஞ் செப்பினவே.

தன்மனை வரைதல் முற்றிற்று.



## இருபத்தைந்தாவது—உடன்போக்கிடையீடு.



நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத், தன்செல வுணர்த்தி விடுத்தல்.

அன்பினிற் காத்தவர்க் கேகாணிக் காசை யளித்தனன்பின்
வன்சொற் செவிலிக்குக் கூற்கா சளித்தேன் வருபவரே
துன்குர வற்கொரு காசளித் தேன்குகன் றோகைவெற்பி
லென்செல விப்படி யானதென் றோதிடு மேழையர்க்கே. ()

### தலைமகள், தன்செல வீன்றாட் குணர்த்தி விடுத்தல்.

மைக்குயில் கூவ மதன்வருஞ் சேந்தன் மயில்வரைமேற்
கைக்கிளிக் கன்னத்தை யூட்டச்சொல் லீர்கலைக் கேபிடிசேர்த்
திக்கணம் பச்சைப்புன் னீட்டச்சொல் லீரெங்க ளன்னையைப்பூங்
கொக்கைக் குயிலுக்குக் காட்டச்சொல் லீர்நடக் கும்பலரே. ()

### ஈன்றாட் கந்தணர் மொழிதல்.

ஒட்டித் திருட்டைவி சாரித்தி டாமலொருத்தரிடங்
கட்டிக் கொடுக்க நினைத்தத னாலிவள் காட்டொளித்தாள்
செட்டிப்பெயர்கொண்ட வேண்மயில் வெற்பினுன் செங்கைக்கிளி
யெட்டிப் பழந்தின்னு மோகொள்ளுங் கோவை யிகழ்ந்தினியே.

### ஈன்றாள், அறத்தொடு நிற்றலிற் றமர்பின் சேறலைத், தலைவி கண்டு தலைவற் குணர்த்தல்.

பந்தன கொங்கை யறத்தொடு நின்றிடும் பாவிசொல்லா
லெந்தை யிடத்தன்னை சொன்னாள்கொ லேந்த லகத்திருக்குஞ்
சந்தனஞ் சுற்றிய வத்தியு மாவுந் தழையபரசுங்
கந்தசு வாமி மயூர வரைசூழ் கடம்படர்ந்தே. (௪௧௪)

### தலைமக டன்னைத் தலைமகன் விடுத்தல்.

உருக்கு மணியைத் துவாரகை யான்கொண் டுடன்செல்லுநாட்
டிருக்கு மவளுக்கு முன்றேனைக் கட்டிய சேதிதன்றே
நெருக்குமுன் றன்னைக்குந் தந்தைக்குஞ் சேனைக்கு நேசமுன்னா
யிருக்குமன் றோகந்தன் மாயூர வெற்பினி லேந்திழையே. (௪௧௫)

### தமருடன் செல்பவ ளவன்புற நோக்கிக், கவன்றரற்றல்.

போர்புரிந் தாற்பழி யென்றூர் குகன்மயிற் பொன்வரைமே
லார்பிரிந் தாரிப் படிச்சேலை சுற்ற வணிகொடிசேர்த்
தூர்புரிந் தாரிணை வாழையுங் கட்டியுள் ளாரெனது
தேர்பிரிந் தாரினத் தேரே திரும்பு திரும்பினியே. (௪௧௬)

உடன் போக்கிடையீடு முற்றிற்று.

---

## இருபத்தாறாவது—வரைவு.

---

### சென்றோன் மீண்டுவந்து அந்தணரை (முன்னிடல்.)

கையிரண் டாறுடை யான்மயில் வெற்பிற் கவன்றதுகண்
டுய்தலை யெண்ணித் தமரொடும் பேசி யொருவர்தள்ளா
வையரை மேவிவந் தானுயிர் போல [illegible] 
மெய்யுறு நாலரை மேவ லிவற்கூறிக [illegible].

### சான்றோரை முன்னிடல்.

திக்கோ ருடன்புவி யோரு மமரருந் தேடத்தக்க
தக்கோருந் தேடும் விசாகன் மயில்வரைச் சாரலிலே
புக்கோ ருரைத்தசொற் றப்பா ருடனே புகுந்தனரான்
மிக்கோரை நோக்கியன் றேசெய்கு வார்மண மேலவரே. (௪௧௮)

### அருங்கலந் தருதல்.

சேலாகு மாயன் மருகன் மயூரச் சிலம்பிடத்தே
மேலாநம் மைய ரிறையோ னளித்த வியன்கனக
மாலார் சரப்பணி சொன்ன வளைமுத்து மாலைகொள்ளுங்
காலாழி கண்டன ரோராழி போலக் கலித்தனரே. (௪௧௯)

### வரைந்துழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்.

சங்கமுங் கைப்பற்றித் தீவலஞ் செய்த தகையுஞ்செங்கை
கங்கைப் புனல்வைத் ததுபாவுந் தேருமுன் கண்டனமே
மங்கல வேண்மயில் வெற்பின் மழுவில்லை மானுமில்லை
யிங்கிவ ரீசனன் றேமங்கை பாக மிசைந்தனரே. (௪௨௦)

வரைவு முற்றிற்று.

---

## இருபத்தேழாவது இல்வாழ்க்கை.

---

### தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

காவேந் தியகுழல் கண்ணுஞ்செங் கையுங் கதிர்நகையு
மாவேந்தர் பொன்னும் பெரியோரு மிவ்வண்ணம் வைத்ததின்றே
பாவேந்தர்க்கன்பன் குகன்றோகை வெற்புறை பாவையென்கைப்
பூவேந்து முன்கையன் றேவிந்த வண்ணம் புரிந்ததுவே. (௪௨௧)

### தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

கதிர்மதி போலென்றுங் கன்னி தொடர்சிங்கங் காணுமென்றும்
விதியினிற் சொற்றனிர் வீண்வார்த்தை யின்றி விளைத்தல்செய்தீ
ரெதிருற்று வேண்மயில் வெற்பி லிராமனென் றேயிசைத்த
மதுர மொழிநிலைத் தீர்மன்ன ரென்சொல்வளர்த்தனிரே. (௪௨௨)

### தலைவியை, வரையு நாளளவும் வருந்தா திருந்தமை, உரையா யென்றல்.

ஆர்வீட்டின் மன்றலென் றூர்மொழிந்தாய்பின் னறுபதுநா
ளோர்வீட் டிருந்தனை நீங்கா திருப்பதை யுன்னியநீ
கார்வீட் டிலாவுங் குகன்மயில் வெற்பர்பின் காட்டகண்டு
டார்வீட் டிறங்கினை யாவியெங் கேவைத்துப் பாதுகாத்தனையே. ()

பெருமகளுரைத்தல்.

பொருந்திட ழுண்டன்மை யுண்டு துணையுண்டு பொய்களுண்டு
விருந்துண் டியமுண்டு சங்குண்டு தேருண்டு வேட்கையென்று
மிருந்திடு தீயுண் டிவருண்டு நானுண் டெலாங்கொடுத்து
மருந்தெனுந் தோகை மனைமே லிருக்குஞ்சு வாமியுண்டே. ()

தலைவனைப் பாங்கி வரையுநா ளளவு,
நிலைபெற வாற்றிய நீர்மை வினாதல்.

கனவினு நீங்கில ளெம்மா னுணையெனத் காலத்துமுன்
மனமிசை நீங்கிலம் யாமுமி தாக மயின்முருகன்
றனிமயில் வெற்பி லிவள்பாவை நோக்கிச் சலிப்பதுண்டே
யனநடை யைப்பிரிந் தெவ்வண்ண நீதுய ராற்றியதே. (சஉ௫)

மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை, அன்புற வுணர்த்தல்.

காவும் விழைவும் வரவங் கொடையுங் கதித்தமயிற்
றேவு மயில்வெற்பு மாயின ரேயன்று தேடியுன்கால்
வாவுங் கிரியுஞ் சுரமும் புறவும் வருந்தசெய்தார்
பூவு மணமும் பிரிதலுண் டோபெறற் பூங்கொடியே. (சஉசு)

வாழ்க்கைநன் றறைதல்.

விண்பார்த்த தேக்கி விசும்பு தொழுமயில் வெற்புடையான்
பண்பார்த் தொளிக்குநசொன் மாதா புணர்வேள் பதம்பணிவோ
னண்பார்த்த மங்கை யறிவையென் சொல்வது நன்குணவிற்
கண்பார்த்து மற்றவன் கைபார்த்து நிறகுஞ்சொற் கண்டிலனே. ()

மணமனைச் சென்று வந்த செவிலி,
பொற்றொடி கற்பியனற்றாய்க் குணர்த்தல்.

இசைநதிடுங் காலை முருகன் மயிலவரைக மேகிவரும்
வசம்பெறு மானம் புரக்குஞ் சரவண வாவிகுடைந்
தசைந்த விருளூற் றறியாது சேருநண் பாதரிக்கும்
பசுங்கொடிக் காரோ கருங்கொடிச் செய்கை பயிற்றியதே. ()

நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தல்.

நம்மனை வாழ்க்கை யினுமவர் வாழ்க்கை நலங்கனிவா
கும்மனை யன்பிற் படுத்துஞ் செயல்கொடுக் குஞ்செயற்கெ
மம்மனைக் கல்லும் பகலுங் தாயிலில்லை யாறுபெற்ற
கம்மனைப் போலு நிலைபெற்ற தோகைக் கணங்கிரிக்கே. (சஉகூ)

அன்னவர் காத லறிவித்தல்

ஓதா திருந்திலர் வேந்தரக் காலு முறநிணைபபார்
தூதே துணையில்வந்தாலும் வருவர் துயர்தலின்றி
மாதேயித் தியாதி பிரிவினுஞ் சேர்ந்தன் மயில்வரைமான
வேதாந் தியர்மனம் போல்வே றொருதெய்வம் வேண்டிலளே. ()

இல்வாழ்க்கை முற்றிற்று.

## இருபத்தெட்டாவது—பரத்தையிற்பிரிவு.

காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்,
கேதுவி தாமிவ் விறைவிக் கென்றல்.

மணிமாட வீதி மயில்வரை வேளை வணங்கிலர்போற்
றுணியா தனதுணிந் தேகினர் மாவென்று சொல்லவுற்று
ரணியார்நறுங்கொங்கையாற்றுங்கொல்லோவன்பில்லாயிழையார்
பணிமே லிருந்தங் கருடனை யேவிட்ட பாவத்தையே. (௨௩௧)

தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கல்.

கார்ட்டைவி டாதுபின் ளுட்டைவி டாது கலந்தவுயிர்
கூட்டைவிட் டோடிற்றை யோவெனைப் போல்பவர் கூறிலுண்டோ
சூட்டு மயில்வரை யாரரு ளீதெனிற் சொல்வதென்னே
வீட்டில் விருப்பறுத் தாரோ பரத்தை விரும்பினரே. (௨௩௨)

ஈங்கிது வென்னெனப் பாங்கி வினுதல்.

தேன்காணும்பூம்பொழிற்செவ்வேண்மயில்வெற்பிற்சேயிழையுன்
மான்காணு மைக்கண்ணு மு கொங்கையுங் காண மலரணைநீ
தான்காணு மந்தப் புரம்பலர் காணச் சரிக்கிலிது
நான்காணத் தகாதோ சொல்ல சொல்க நறுநுதலே. (௨௩௩)

இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தல்.

கொண்டு கழித்தன வாலேனுங் குகன்மயிற் குன்றிடத்தே
வண்டு கழித்த மலர்களுண் டேயிந்த மானகரா
ருண்டு கழித்த கலமென்றெண் ணுரிறை யோர்பலருங்
கண்டு கழித்த குடங்தேடிச் சூளையைக் காத்தனரோ. (௨௩௪)

தலைவியைப் பாங்கி கழறல்.

ஆனாலும் பட்சியை வாவிதன் னாதடி யார்பதவி
மேனாளு மெய்த வருள்வோன் மயில்வெற்பர் வேண்டினர்பாற்
றேனாலுங் கன்னல்விட் டோலையுண் ணுங்கரித் தேசத்தினர்
போனாலும் போவதுண் டோமனத் தாசையும் போகமுமே. ()

தலைவி, செவ்வணி யணிந்து சேடியை விடுத்தல்.

குருட்டினி ரானைகண் டாலன்ன பன்மதக் கொள்கையுள்ளோர்
மருட்டினை நீக்கு முருகன் மயூர வரையையன்ன
டிருட்டினர் சென்றிடுஞ் சேரியிற் செல்கெனச் சேடிமின்னு
ரிருட்டினிற் செவ்வ லரிபலர் காண வெழுந்ததுவே. (௨௩௬)

அவ்வணி யுழையர்கண் டழுங்கிக் கூறல்.

பாய்காய்க்குந் தோளுடை மாயன் மருகன் பணிந்தவர்க்குத்
தாய்காய்க்கு மன்பன் மயில்வரை மேவிய தையனல்லார்
நோய்காய்க்கு மாசையி னாலே விடுத்தனர் நொய்யபிள்ளைக்
காய்காய்க்கும் பூவைக் கனிகாய்க்கக் காட்டல் கருத்தல்லவே. ()

பரத்தையர் கண்டு பழித்தல்.

சேவேற் றிடுங்கொடி யார்பணி யார்க்குத் திருக்கொடியார்
கோவேற்ற பிள்ளை குமரன் மயில்வரைக் கொம்பனையார்
காவேற்ற பூங்குழன் மேனு ணைறிந்திக் கடைத்தெருவிற்
பூவேற்ற தன்பருள் வானை மருவப் புரிந்ததுவே. (சஙஅ)

பரத்தைய, ருலகிய னோக்கி விடுத்தல்.

பரத்தையிச் சித்தவர் வீட்டையு றூரென்ற பாண்மைதப்பி
வரத்தை யுதவினம் வேண்மயில் வெற்பர் மகிழிறைவா
வுரத்த களிறு மலையூடு போய்த்தரு வுற்றொடித்துத்
திருத்தகு பூஞ்சுனை யாடியுந் தன்பிடி சேர்ந்திடுமே. (சஙக)

தலைவன், வரவுகண் டேந்து வாயில்கண் மொழிதல்.

காத்தெனைச்சிந்தையிலெண்ணியநான்கையுங்கைக்கொடுத்தோன்
தேத்தரு வாரு மயில்வரை யாரசிநதை சிரிதன்றோ
தூர்த்தனை நீத்தனர் பன்னிரு நாள்வரை துய்க்கவல்லி
பூத்தது பார்த்துவந தார்வழி நீங்கப் புறநகரே (சச0)

வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தல்.

வாய்க்காற் புனன்மறு வாய்மடை பாய்நது வரினுந்தலை
சாய்க்காது செந்நெ லதனால் வெகுநலந் தான்பெற்றதாற்
சேய்க்காசை யுள்ள மயில்வெற்பர் வநதனர் சென்றெதிர்வாய்
தாய்க்கா னதுபிள்ளைக் குண்டேமன் னர்க்குச் சகசமதே. (சசக)

முதிரா மென்முலை யெதிர்கொண்டு பணிதல்.

கண்ணுக்குங் கைக்கும் பகைவருமோசெங்கைகண்ணிற்பட்டால்
விண்ணுக்குப்பாதையெனும்வேண்மயில்வெற்பர் வேற்றுமையோ
பெண்ணுக்குப் பேயு மிரங்குமென் பாரிவர் பேரறிவா [றே.
மெண்ணுக்கென் னேசொல்வதின்பமொன்றேயுயிரென்பதொன்

புணர்ச்சியின் மகிழ்தல்.

நிரம்பப் பசித்தவர் சோறுண்டல் போல நிருபர்துய்த்தீர்
குரும்பை முலையுந்தண் ணீர்த்தாக முற்றவர் கொள்கைபெற்றாள்
விரும்பிய சேந்தன் மயில்வரை யாளொரு மிக்குப்பெற்றாள்
கரும்புகட் டாக வெறும்பு வருமென் கதைப்படியே. (சசங)

இதவும அடுத்தகவியும தலைவிகூற்று.

காமக்கிழ்த்தி, நீத்தமை பொறுதுநின்றுகிழ வோனைப் பழித்தல்.

அன்றிலன் றோரு முளர்பாரி னம்மன்ன ரட்டையன்றோ
ரென்றுசொல வாளு மொருததியன் றேலவ ளென்னின்மிக்கான
குன்றக் குடிக்குமீ ரசன் பதமலர் கூடிலர்போற்
கன்றி வெகுண்டுசொல் லாதது சொல்லுங் கருத்தெண்ணிலே ()

அவனோடு, பாங்கோடு பரத்தையைப் பழித்தல்.

அருளை விருமபி மறவாத வெண்ணை யகன்றுசென்றார்
பொருளை விருமபி மறபபார் விருமபப புகுதல்செய்தார்
முருகன் மயிலவரை யாரன பவாமிசை முறறுங்கொல்லோ
விருவரும பொய்யன் பினரன்றி யில்லை யியம்புதற்கே. (௪௪௫)

(காமக்கிழத்தி) மனைவியைப் பழித்தல்.

வந்தார் மறந்தனன் முன்செயல் யாவு மறிந்துமங்கே
பிந்தா ரதற்கும் பெருமூச செறிந்தனள் பேதையிவ
டந்தா ளவளதனைத விலங்கிடு வாரிற் றடைபுரியா
ளெந்தோ விவள்செய்கை வேண்மயில் வெற்பி லிருப்பவரோ ()

பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தல்.

வாராது வந்த மறிமானை நீக்கி மனையயலா
டாராத வானைக் கொருபிடி யாகுநளு சாதிமின்னாள்
பாரா ளவளொடும வாழ்தனம வாழ்க்கையின் பண்பையன்றோ
சீராரும் வேலன் முருகன் மயூரச சிலம்பிடத்தே. (௪௪௭)

(பரத்தையர்) தம்மையிகழ்தல்.

தீராத நெஞ்சுக்கு தெய்வந் துணையென்று செப்புமொழி
தாராள மாயின தெங்களுக்கோ கோவவர் தங்களுக்கோ
வாராரைச் சீறி வருவாரைத தேடி மதாதெழுந்தாய்
பாரா நனைக்கொங்கை யேகுகன் றோகைப பருப்பதத்தே. ()

(பரத்தையர்) கிழவோன் றன்னையும் பழித்தல்.

மின்றுகு நுண்ணிடை யார்குண மாறிடை வேசைகுண
மென்ற தவர்க்கு வராதே நடந்துகொ ளின்பமென்றோ
மன்றன் முருகன் மயில்வரை சென்று வருமிறைவா
வொன்று மறிவினர் மேமே நடந்தன வுன்புத்தியே. (௪௪௯)

(பரத்தையர்) தம்மை (த்தாமே) புகழ்தல்.

மின்னென்ன மாதர் பயிலுவ குகன்மயில் வெற்பவரே
பொன்னனை யாளுமப பாவையு நங்குலப் பூவையராம்
பன்னுவ தென்னவர் கற்பிற்கு வெஞ்சொற் பகர்தற்கன்றோ
மன்னு முலகொரு நாலைக் குறளென்று மாற்றியதே. (௪௫௦)

## வெள்ளணி யணிந்து விடுத்தல்.

மந்திமலர்ச் சோலை யுதிர்மலர் சோதி மதியுழுத்த
முதிர்வன போலு முருகன் மயில்வரை யொண்டொடியார்
கதுமென வெள்ளைத் துகிலுமுத் தாரமுங் காட்டிவெள்ளைப்
புதுமலர் சூடிப் பழமலர்ப் பேர்சொல்லிப் போந்தனரே. (௪௱௧)

## புள்ளணி, மாலைவே லண்ணல் வாயில் வேண்டல்.

ஆயிர கோடி யுடுவுதிர்ந் தாலென்ன வார்த்தகவி
பாய மலருதிரும் பூஞ்சோலைத் தோகைப் பருப்பதத்தார்
தாயினு மன்ப ரருளுண்டு மானருள் சற்றுமுண்டு
சேயின னென்றணி ரண்மைய ஞயினன் செப்புகவே. (௪௱௨)

## தலைவிநெய் யாடிய திருளை சாற்றல்.

தருவார்த்தை யின்றி மறுவார்த்தை பேசிற் றலையிலரைப்
பொருள்வார்த்தைக் காவி சுழுவா ரிகரென்று பொய்மறந்தீர்
மூருவாற் றிகழ்குகன் மாயூர வெற்பின் மடந்தைக்கென்சொற்
குருவார்த்தை யோபெற்ற பாலனெய் யாடிக் குளித்ததுண்டே. ()

## தலைவன் றன்மனத் துவகை கூர்தல்.

அனைக்குமுன் னைதந்தை யார்க்குமுன் னைபெற்ற வையனன்பர்
தனைக்குமுன் னைவருஞ் சேந்தன மயிலவரைத் தையனல்லாண்
மனைக்குமுன் னைபெற்ற மானகன் று நூக்கியென் றேமகிழ
மெனக்குமுன் னையிரு பாதத்துடன் தாங்கி யெதிர்கொள்வதே. ()

## தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்

நாசானு தாச ரெனதந்தை யானந்தழ தாழ்ந்துசிவ
பூசா விதிசெயுஞ் சேந்தன் மயிலவெற்பா பூங்கொடியுன்
பேசாத பிள்ளையைப் பேசவிக் கும்பிள்ளை பேரிடவுன்
ஞசார வாசனுற் றூறி யேனுன னருளுள்ளமே. (௪௱௫)

## தலைவி யுணர்ந்து தலைவனோடு புலத்தல்.

பூவென்ற சோலை புவிமே லுடுக்கணம் பூத்ததென
நீவென் றெழுகுகன் றேகைவெற் பீரன்பு வேண்டி வந்தீர்
மாவென்ற கண்ணார் முலைபபாற் மணப்பவ ரென்றிடினுங்
கோவென் றவரென்ன மோவிழி யாமை குறித்தனரே. (௪௱௬)

## பெரியோன், விடுத்துழிப் பாங்கி வாயில் மறுத்தல்.

விண்கா வுறைமந்தி மேனோக்கிப் பாய விரிந்தகனித்
தண்கா வளர்திகழ் வேலன் மயில்வரைத் தையனல்லாய்
மண்பா னடைகொண் டரையுடம் பாகி மதிமுடித்துப்
பெண்பா லிசைந்தவர் வந்தாரென் றோதுதல் பேதைமையே. ()

### பாணன் வாயில் மறுத்தல்.

இங்கே யிறையவர் வந்தார் புறத்தொழுக் கில்லையென்று
சிங்காரம் பேசினை வேலன் மயூரச் சிலம்பண்ணலா
ரங்கே யிருக்க வவளோ விவளென்னு மப்பதத்திற்
சங்கீதம் பாடினை யாமே பொய்ப் பாணர் தருமகன்றே. (௪௫௮)

### பாணன் கூற்று.

வல்லென்ற கொங்கைமின் னேகுகன் றோகை மயில்வெற்பிலே
கொல்லென் றயலவர் கூடின ரேயவர் கூடவப்பாற்
செல்லென்ற போதிடி யுற்றதொத் தேன்சினந் தேயெடுப்பேன்
கல்லென் றணைபடி யாதிருந் தேனருள் காண்பதென்றே. (௪௫௯)

### விறலி, வாயில் மறுத்தல்.

பண்ணுஞ் சுரமும் பயின்றிடுங் காலம் பயின்றனமு
னண்ணுஞ் சுரமு மொழியு மறந்தனர் நாளுக்குநாட்
கண்ணுமில் லோமிரு காதுமில் லோமிரு கையுமில்லோம்
பெண்ணுமில் லோம்விற லீகந்தன் றோகைப் பிறங்கலிலே. (௪௬௦)

### கூத்தர் வாயில் மறுத்தல்.

ஆடிய காலுஞ்சொற் பாடு மிடறுமுள் ளார்கண்மிக்கா
மூட றவிர்த்தவர்க் காவன மேகட லூறுதியென்றே
தேடு முருகன் மயில்வெற்பர்க் கோதுமின் செப்புமென்போற்
கூடு நகைகொண்டு மேலா டியபகழைக் கூத்தர்களே. (௪௬௧)

### விருந்தோடு வந்துழிப் பொறுத்ததுகண், டிறையோன் மகிழ்தல்.

செருந்தொன்று கூந்த லினியென்செய் வானன்பு சேரினமாம்
விருந்தொன்று வந்தது நெஞ்சே குகன்மயில் வெற்பிலது
பொருந்தென்று சொல்லு மினமே துனியெனும் புன்கணுக்கோர்
மருந்தென்று தேறினிச் செவ்வா யமுத மருந்தல்லவே. (௪௬௨)

### இறைமகள் விருந்துகண், டொளித்த வூடல்வெளிப்பட நோக்கிச், சீறே லென்றவள் சீறடி தொழல்.

பஞ்சணை மேலஞ்சிச் செல்கின்ற காலைப் பருத்தடக்கை
வெஞ்சின வேழத்தின் மேற்சிலம் பார்த்தன வேர்த்துவிம்மித்
துஞ்சினர் போலு மிளம்பிடி பஞ்சடி தொட்டவன்றே
கஞ்சமுத் தீன்றன செவ்வேண் மயூரக் கனங்கிரிக்கே. (௪௬௩)

### இஃது, தெங்கையர் காணி னன்றன் றென்றல்.

வேலை விரும்பினர் புன்றொழிற் செய்தல் விகிதமன்றே
மாலுடை யாரென வந்தனை தோகை மயிற்குமரன்
சோலை மயில்வெற்பின் மன்னவ னேசிறுத் தொண்டனென்னக்
காலை முடித்தனை யெங்கையர் காணிற் கலங்குவரே. (௪௬௪)

அங்கவர் யாரையு மறியே னென்றல்.

மிஞ்சுமென் றூல்வினைக் காரர் பதம்விழில் வெஞ்சினம்போய்
நெஞ்சு குழைவரென் பார்கண்டி லேன்பர னோர்குவரோ
பஞ்சணை மேற்படுப் பார்குகன் றேரகைப் பருப்பதத்தே
கஞ்சத்துத் தண்ணீர் கலிங்கத்துப பாய்ச்சல் கருணையன்றே. ()

காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

வளளல்ச மாலி யுடையண பாண்டியன் வாழச்செய்த
வெள்ளி மயிலி லெழுநதருள் வோன்மயில் வெற்பினிலோர்
கள்ளியுன் றுய்தலை மேற்கையு நின்மிசைக் கண்களுமாய்
மெள்ள நகைத்ததுங் கண்டேனுன் வீட்டிலென் மேல்வைப்பிலே.

தாமக் குழலியைப் பாங்கி தணித்தல்.

தேறுத செல்வ முருகன் மயில்வரை செலவனுன்பாற்
கூறு தனசொல்லிச செய்யா தனசெய்துங் கோபமென்னே
மாறுன் மகிழுந திருமகிழ்ந் தாளின்பம் வாய்ததபதி
னூறு யிரரன்றி யோர்பானெஞ சேறி யமாநதநமே. (௪௬௭)

தணியா ளாகத் தலைமக னூடல்

சிற்றுளி கற்பிளந் தாலனன பினசொற் சிறநதனவென்
பற்றுரை சேற்றிடைக் கமபதத்தை நேர்நததென் பாவமிதே
கற்றை யழற்சடை யானமகன் றேரகைக கனங்கிரிமே
லற்றைப் புணச்சுக மன்றேநம் விடுற வந்நநமே (௪௬௮)

அணிவளைப் பாங்கி யன்பிலை கொடியையென்,
றிணர்த்தார் மார்பனை யிகழ்தல்.

தலைநா ளிடைச்சின மெயகுவைத நீரயிற் சாமிமயின்
மலைமாதர் முந்தி வரிக்கிலன் பேது மலிநதுதின்றுற்
பலநாட் கரும்புங் கசக்கு முமையன்றிப் பற்றையில்லா
விலைமாத ரேனிலை யில்லாத மாதர் விரும்புகவே. (௪௬௯)

மகப்போறை கூர்ந்த வண்ண முரைத்தல்.

ஆகம வேத மடிதொழு தேத்துமை யாறுமுகன்
றேரகை மலையில் விளையாடும் பொன்மயில் சூற்கொண்டநாண்
மேகங் கறுத்தது மின்னுந் துடித்தது வேயபசந்த
பூக மலர்ந்தது தென்னையுங் காய்த்தது போர்மன்னனே. (௪௭0)

புரவலன் போந்து புதல்வனைக் காண்டல்,

சேனை பதிக்கும் விறல்வாகுக் கீந்துதன் செய்கையெல்லீ
மூனுத சங்கர லிங்கத் தபோநிதிக் காக்கியவே
டேனூர் மயில்வெற்ப ரஞ்சனம் போட்டிலர் செங்கையிலே
பானூறு முன்சொற் பொருளெழுத தார்பொன் பலகொடுத்தே. ()

முன்னூட் சிறப்புறு நீயுர மொர்த்துயிம் மெய்ம்பண்மையல்,

## புறங்காட்டல்.

ஆன்க ணெழுந்தடி யார்க்கு விடைதந் தருளுமெங்கள்
கோன்கண் மணியெனும் வேளுறை குன்றக் குடிமலைமேன்
மான்கண்ணி யேயின்பப் பாலு மமுதமும் வைத்துக்கொண்டு
தேன்குழ லிந்தனை காமப் பசியதிற் றீர்வதின்றே. (௱௭௨)

## காமக்கிழத்தி வாயில்வேண்டல்.

வாக்குங் கிருதாக் கினிஞாய நீங்கு மதிச்சிலைபோ
லாக்கு மனத்தைக் கதிர்ச்சிலை ஞாய மழகதன்றும்
பாக்கு மிளகு மலிகுகன் றோகைப் பருப்பதத்தாய்
தேக்கிலை நீயெனச் செப்வதென் போல்பவர் செய்வதுவே. (௱௭௩)

## பாங்கி வாயில் நேர்வித்தல்.

தீத்தட்டு கல்லென்பர் மன்னனை மேல்வரு தென்றல்கண்ட
பூத்தவஞ் சிக்கொடி யாமெஎ்பர் மாதரைப் போர்வயவர்
நீத்திடி லென்கண் டகபல ஞாயத்தை நேர்தனன்றுங்
காத்திகழ் தோகை மலைவேலன் வேலன்ன கட்குயிலே. (௱௭௪)

## ஆயிழை மைந்தனு மாற்று மையுமே, வாயி லாக வரவேதிர் கோடல்.

தேங்கமழ் சோலை மதுரையி லேபண்டு சென்றுசங்கந்
தாங்கிய சங்கை தவிர்த்தோன் மயில்வரைத் தாரண்ணலே
யீங்குனக் கென்றடை யாற்றுமை யும்பெற்ற வென்பிள்ளையு
மோங்கி லணைதழற போலென் வெறுப்பை முடித்தனவே. (௱௭௫)

## மணந்தவன் போயபின் வந்த பாங்கியோ, டிணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தல்

மறுமார்க்கஞ் செய்தவெஞ் சூரா தியர்க்கு மயிற்குழுத்தி
யுறுசாபஞ் செய்த முருகன் மயிலவரை யொண்டொடியே
தறுகர்ப் புலிக்குட்டி வீரநன் றேபரி தானுமின்றிச்
சிறுதே ருருட்டிப் பெருந்தே ரைப்பெண்மை சேர்த்தியதே. ()

## தலைவனைப் புகழ்தல்.

பூவிற் கொடுக்குந் தொழில்கொளப் போர்மெய்ப் புரவலர்க்குங்
காவற் செயலருள் வோர்மயில் வெற்புறை காரிகையே
பாவத்தை வாங்கித்தன் புண்ணியம் பாதி பகிர்ந்தளிக்குந்
தேவர்க்குக் கண்ணிமை யாதுகை நீங்கில சேக்கையினே. (௱௭௭)

## சிலைந்தற்பாங்கி, மனைவியைப் புகழ்தல்.

பெரிருந்தின ரென்றபொழுதேமுன் கொண்டபொறுமையெல்லா
மருந்து கலந்த விடம்போ லொழிந்தன மாதவர்க
டிருந்திய வேலன் மயூர வரையினிற் சேயிழையே
யருந்துதி யென்னி னிகரோ வதுவு மருந்திடியே. (௱௭௮)

### பாலனைப் பழித்தல்.

ஆதியி லூக்கிப் புசிப்பன யாவு மளித்தவன்பன்
பேத நினைத்திலன் சேந்தன் மயூரப் பிறங்கலிலே
தாதைதைக் யாடுந் தனக்குட னீபெறத் தக்கதன்றோ
வோதிய பாற்குடம் பிள்ளாய் விதியின் றுதவியதே. (௪எக)

பரத்தையிற் பிரிவு முற்றிற்று.

---

## இருபத்தோன்பதாவது—ஓதற்பிரிவு.

### தலைவன்பிரிவறிவுறுத்தல்.

கைம்மலர் வாய்மலர் கண்மலர் காண்மலர் மெய்ம்மலர்த்து
மெய்ம்மலி நாலும் பிறவுங் குகன்மயில் வெற்பிடத்தே
கைம்மலி வேற்கண்ணி சந்தேக மாற்ற மனநினைத்தோ
நெய்ம்மலி கூந்த லிளம்பிடிக் கேசென்று நீசொல்கவே. (௪அ0)

### பாங்கி தலைவிக்கதனையறிவுறுத்தல்.

உதவி புரியுந் தலையாய நட்ப ருடல்சிதைத்தார்
பதயுக ளத்திற் கேதிரான தொன்றைப் படுத்தல்செய்தா
ரிதமகி தஞ்செயு நண்பர் மனமறி யேன்முருகன்
மதிதவழ் சோலை மலைநா வலர்பலர் வந்தனரே. (௪அக)

### பிரிவுடன் படாமை.

தலையாய நட்ப ருடல்சிதைத் தாரென்ற சாடைநன்று
நிலையா கியநம் முடைநட்பி லாவதென் னேரிழையே
பலதேவர் போற்று முருகன் மயில்வெற்பிற் பண்ணறியுஞ்
சிலையா ருளைபண் ணிருதெய்வ மாகிச் செறிந்ததுவே. (௪அஉ)

### பிரிவுடன் படுத்தல்.

மனத்தின் படிவிடு லீலா சுகர்கதை மற்றறிவாய்
வினிக்கை யிசைபசுப் பேய்பாம்பு பாலன் வெறுப்பதுண்டோ
வினத்த விசைத்தெய்வ மேழி லிரண்டை யெழுநெறியார்
கனைத்துவண் டார்சுனை வேண்மயில் வெற்பிற்பண் கற்பவரே. ()

### பிரிவுடன் படுதல்.

தாரமு நல்லு கிளையும் புகுவார் தடையி னில்லார்
தீர ரகப்பொருள் வாசிப்ப தேநன்று சேந்தன்மயி
லேர்கொண் மலையி லலங்காரம் பாரா திருவருநம்
மூரிற் புறப்பொருண் மேற்கற் பியனெறி யுன்னுவமே. (௪அ௪)

## பிரிவுழிக் கலங்கல், (கார்ப்பருவம்.)

பிள்ளையுந் தந்தையும் வந்தா ரெமது பெருங்கவினைக்
கொள்ளைகொண் டாரிருந் தார்கடந் தாரினிக் கூறியென்னும்
புள்ளி மயிற்குகன் றோகை மலையின்முன் பொற்பழிந்தி
வெள்ளை முகிலுங் கறுத்தே யுருமி வெளிவந்ததே. (௪௮௫)

## பாங்கி வன்புறை.

வீறிற் பிரிந்தனர் போகிலர் மாதம் விளங்குமுப்பத்
தாறிற் கழிந்தன கண்டுங் கலங்க லறிவின்மையாந்
தேறற் சிகிவரை வேலனை யுள்ளார் திறமெனவே
தூறித் திரியுமிக் காருக்கென் னேவுண்மை சொல்லுவதே. ()

## தலைவி வன்பொறை.

ஓதற் ககன்றோ ரொழிந்திடை மீண்டன் புடன்கலந்து
போதற் கியையப் புலம்பப் பெருனம் புலம்ப லென்னுஞ்
சோதிக் குகன்மயில் வெற்பானை ரோர்ந்து சொலிற்றிரும்பி
வேதத்தினந்தத்தைப்பார்க்கினும்பார்க்குவன் வீண்பெண்மையே.

## தலைவன் வருவழிக் கலங்கல்.

வருடமொன் றாகி யொருவரு டத்தை மகிழ்ந்தளியே
னொருவ ருடச்செய லாலோர் வருடத்தை யோட்டுகின்றேன்
முருகன் மயில்வெற்பி லோர்வரு டத்தின் முயற்சிதருங்
கருமுகி லாண்டொன்றை யோராண்ட தாகக் கருதிலவே.(௪௮௮)

## வந்துழி மகிழ்ச்சி.

நான்சே ரெழுத்தொடு சொற்பொருள் யாப்பு நயக்குமணி
மீன்சேர்கண் ணணல்குஞ் சேந்தன் குகன்மயில் வெற்பகத்தே
வான்சேர் நெறியென்ப போய்மீ ளளவுமென் மானங்கொண்ட
கான்சேர் குழற்கு நிகரோ வுலகுள்ள கற்பவரே. (௪௮௯)

ஓதற்பிரிவு முற்றிற்று.

---

## முப்பதாவது—காவற்பிரிவு.

---

## தலைவன் பிரிவறிவுறுத்தல்.

ஒன்றாகி மூப்பத் திரண்டா மறத்திற் குறுகுறையு
நன்றாய தேசத்து நீதியு நாட்டிடை நாடமைதி
யென்றாய செல்வ முதலா னவுமவற் றெய்துகுற்ற
மன்றாக் கலுங்குகன் றோகைவெற் பாளபவர்க் காய்தலுண்டே.()

### பாங்கி தலைவிக்கறிவுறுத்தல்.

வேத முனிவரர் யாகக் குறைகளும் வேண்டுகின்றோர்க்
கோதிய தேயந் தியாகக் குறைகளு மூர்பலவின்
றீது பலவுந் தவிரக் குகன்மயிற் றிண்சிலம்பார்
காதன் மடக்கொடி யேகடந் தாரென்பர் கண்டவரே. (௪௯௧)

### தலைவி பிரிவுடன் படாமை.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற் றலைமையருக்
கென்குற்ற மென்ற குறளறி வார்குற்ற மிங்ககற்றார்
நன்குற்ற சேந்தன் மயில்வரை வேலவர் நாடுகொண்டாற்
பின்குற்ற முள்ளவர் காடுகொள் வாரினிப் பேசலென்னே. (௪௯௨)

### பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

சீவகன் றந்தை முயற்சியை நீத்த செயலிலன்றோ
பூவல யத்தைப் புரப்பது விண்டனன் பொற்கொடியே
தேவன் மயில்வெற்பிற் றன்வீடு காக்குந் திறமிலரூர்
காவல ரென்பதெ னென்றோத லல்ல கருத்தல்லவே. (௪௯௩)

### தலைவி பிரிவுடன் படுதல்.

பல்லார் பயன்றுய்ப்பத் தானே வருந்திப் பகிர்ந்தளித்த
னல்லாண் மகற்குக் கடனென்று நாலடி யார்நவின்றா
ரெல்லாரும் வாழும் பிரிவிற் கிரங்கலுண் டோதமிழின்
சொல்லார் பிரிவல்ல வேகந்தன் றோகைச் சுரும்பிடத்தே. (௪௯௪)

### தலைவனைப் பிரிவுழிக் கலங்கல் (கூதிர்.)

கூடு பதமுந் தலையு முடலுங் குவித்ததிர்ந்து
மேடைக டாவி விழிசாய்த் திறகு விரிக்குமயி
னூடர் குகன்மயில் வெற்பேறி யாங்க ணடுங்கவந்த
வாடை யெனும்புலி யாவிகொள் ளாமுனம் வந்திலரே. (௪௯௫)

### பாங்கி வன்புறை.

கார்வரிடை நோக்கி மயிலாடுஞ் சோலைக்கன் னூடர்மன்னன்
றேர்வாடை வந்ததுன் பாவாடைச் சோர்வினைத் தீர்க்கவின்றே
யார்வாடை யாலொழிந் தார்குகன் றோகை யணிவரைமுந்
நீர்வாடி வற்றுங்கொல் லோசிகி மைக்க னெருப்பினுக்கே. (௪௯௬)

### தலைவி வன்பொறை.

குறுந்துளி வாடையும் பல்லறை யோசைக் குளிருமயி
னறுங்கிரி வேளைப் பணியா தவரி னடுநடுக்கும்
வறும்புனம்போலுமுடலுங்கொண்டென் பொறைவைப்பினன்றோ
தெறும்படை வேல ரறப்புறங் காவல் செலுத்துவதே. (௪௯௭)

### தலைவன் வருவழிக் கலங்கல்.

வஞ்சிக் கொடிதலை சாய்ப்பதுண் டேவரும் வாடைகளே
யஞ்சினு மாடை பறிப்பிர்க ளோகள்ள ரானவர்போன்
மஞ்சு தணிமயில் வெற்புறை வேளை வணங்கினர்போற்
கொஞ்சி வணங்கி யொதுங்கித் துவண்டென்று கூடுவதே. (௪௯௮)

### வந்துழி மகிழ்ச்சி.

உரைப்பிர் தழற்படு பூம்பாவை போல்பவ ருக்கின்றுநா
மரப்பாவை போல வருதலை யென்றனம் வந்துசொல்லார்
கருப்பாண்மை தீர்த்த முருகன் மயில்வெற்பிற் கண்ணெனவே
யிருப்பாரைக் காணப் படாரே மகிழ்ச்சி யிராதவரே. (௪௯௯)

காவற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்தொன்றாவது—தூதிற்பிரிவு.

### இறைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

இருவ ரெதிர்ந்தனர் யாதினு மொப்புமையேற்றவர்நந்
திருவ ரதுநிற்க நம்மினத் தாரெனுந் தேற்றத்தினு
லொருவரிற் சேரப் படாது குகன்மயி லோங்கலன்னீர்
பொருதக ரத்துணை யீரெழுத் தாகப் புரிந்தனமே. (௫00)

### பாங்கி தலைவிக் கஃதறி வுறுத்தல்.

உய்த்த கயங்களொன் றேடொன்று தாக்கி யுலைதல்கண்டு
கத்தி யுருவி நடந்தார்பல் வேந்தர் கடம்பணிவோன்
முத்தி தருமயில் வெற்பினி னம்மிறை முன்னடந்தார்
மத்தகஞ் சாய்க்க விலக்கின ரென்றனர் வந்தவரே. (௫0க)

### தலைவி பிரிவுடன்படாமை.

பன்னாளும் விட்டுப் பிரியா திருந்தமை பார்த்துமையோ
முன்னே பிரிந்தனர் பின்னே பிரிந்தார் முருகனன்ப
ரென்னாளுந் தோகை மலையிற் பிரிவே யிசைத்தனையேற்
சொன்னாலுஞ் சொல்லா விடினுநன் றேயிந்தச் சொல்லெனக்கே.

### தலைவியைப் பாங்கி பிரிவுடன்படுத்தல்.

தூதா னவர்நல்ல பாக்கினைச் சோற்றினைத் துய்க்கவுநா
மாதே வருந்த விதியோ முருகன் மயூரவெற்பின்
மீதே நடக்கொரு தூதில்லை யோசெயல் வேறிலையோ
பேதாய்செங் கையொடு காலில்லை யோவிப் பெருநிலத்தே. ()

தலைவி பிரிவுடன் படுதல்.

ஆண்டிருந் தான்மணை மின்னுஞ்செய் வார்திங்க ளாறுருகதான்
மூண்டமு தங்கொணர்ந் தேயளிப் பார்மதி மூன்றிருந்தால்
வேண்டு வுனைகையி னூட்ட வேண்டுஞ்செவ் வேண்முருக
னீண்ட மயில்வெற்பிற் றிங்களொன் றேனுண்டு நேர்குவனே. ()

தலைவனைத்தலைவி பிரிவுழிக்கலங்கல் (முன்பனி.)

அன்ப னிவனென் றனையக லான்பிரி யானென்றனை
யின்ப னிதயமெட் டேநாளென் றேகினை யெங்கள்குகன்
பொன்பணிக் கின்ற மயில்வரை மீதிற் புகன்மறையோர்
முன்பனிக் கால மகனுமென் றுரம் மொழிநிசமே. (௩௦௫)

பாங்கி வன்புறை.

கைச்சமு தாடு கொடுத்த திரண்டிற்குங் காணென்றது
மிச்சமர் நீக்கப் படாதோ வெனவுனக் கெய்தியதும்
பச்சை மயில்வரைச் சேந்தன்றைப் பூசப் பயிற்சியினு
லிச்சை பெறுமுன் பனிக்காலமென்பது மெண்ணுவரே. (௩௦௬)

தலைவி வன்பொறை

வீடுக டோறும் விருந்துண் டிருவரை வேண்டியுற்றார்
காடுக டோறுஞ் சிவரூப மாவதுங் காணுகிலா
ராடல் புரிகுகன் மாயூர வெற்பி னவர்மெத்தவோ
நீடு மொருத்தி யுயிர்மெத்த வோபுகழ் நேர்தனன்றே. (௩௦௭)

தூதுஎதுவாகச் சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்,
புலந்து புலம்பல்.

ஒழிந்தார் சமர்விருந் துண்டா ரிலைமுன் னுரைத்தவெல்லாங்
கழிந்தா ரவரென்னுங் கத்திலையை நோக்குங் கடம்பணிவோன்
வழிந்தோடுதேறன்மயில்வெற்பையெண்ணுங்கண்மாரியென்னுஞ்
சுழிந்தோடு வாரியிற் றோணியை நேருஞ் சுகக்கிளியே. (௩௦௮)

இறைவன் வருவழிக் கலங்கல்.

போதந் தனங்கல்வி போமாதர் மேன்மனம் பூணிலிந்தத்
தூது•புகாவிடிற் சுற்ற மிறைத்தன்மை சோருமன்றோ
நாதன் முருகன் மயில்வரை வாவி நளினங்களே
யோதி னளினங்க ளோயல்ல வேகரிந் துற்றதென்னே. (௩௦௯)

வந்துழி மகிழ்ச்சி (கண்டோர்கூற்று.)

வாட்பது மங்கலை மானென்னுங் கண்ணி வரல்குறித்துக்
கேட்பது சின்னமென் றுனு மகிழ்ந்தனள் கிட்டுகின்றோன்
மீட்ப துயிலரையென் றுனு மகிழ்ந்தனன் மெய்தழுவிச்
சேட்படர் சோலை முருகன் மயூரச் சிலம்பிடத்தே. (௩௧௦)

தூதிற் பிரிவு முற்றிற்று.

## முப்பத்திரண்டாவது—துணைவயிற்பிரிவு.

### தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

வீரகண் டாமணிக் குப்புலித் தோலணை வேண்டுமென்னக்
காரக லாதமின் வேலன் மயில்வரைக் காரிகையாட்
கீர நறும்புன லிட்டோர் குருத்திற் கிடத்தவிழித்
தாரென்ன மன்னென்னப் போற்றி யிறந்தவ ராரென்னுமே. ()

### பாங்கி தலைவிக்குப் பிரிவறி வுறுத்தல்.

நேற்றுப் பிழைத்தமை கண்டாருண் போலு நெடியவெள்ளைக்
கீற்றுப் பிறைமருப் பானை யலங்கரிக் கின்றனர்போ
மாற்றுக் குதிரை பலவாறு சேனை மலிந்தவொற்றர்
கூற்றுக் கொருவரு மானார் குகன்மயிற் குன்றிடத்தே. (௲௧௨)

### தலைவி பிரிவுடன் படாமை.

நாடு நமதன்று நஞ்செல வன்னவர் நல்கலின்று
பாடு படுதன்மண் ணுக்கும்பெண் ணுக்குமென் பாருலகோர்
தேடு குகன்மயில் வெற்பர் துணைமேற் செலவையெண்ணு
ரூடலை நீக்கிலன் றேபக லோரை யுறுவதுவே. (௲௧௩)

### பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

நட்டவர்க் கும்மடுத் தோர்க்குஞ் சகாய நடத்தினர்க்கும்
விட்டவர்க் குங்குறை யுண்டாகிற் செல்வது வேந்தர்செய்கை
யட்ட வயிற்குகன் றேகைவெற் பாய்கிளை யார்சிலையிற்
பட்டனர் பின்மறுப் பாரா ரனுப்புவர் பாவையரே. (௲௧௪)

### பிரிவுடன் படுதல்.

தொடைகொடு வாள்கைக் கொடுநீ றுதவுநற் சொற்கொடுகட்
கடைகொடு வாசச் சுருக்கொடென் றுணின்ற காரிகைநீ
விடைகொடு போதி மயில்வரை வேலவர் மீட்பரிவள்
கொடுகொடு வென்ன வெடுவெடு வென்றனை கொண்டனையே. ()

### தலைவன் பிரிவுழித் தலைவி கலங்கல் (பின்பனி.)

ஐந்து வகைச்சுற்ற மைங்குழு வோரெட் டமைதியுள்ளோர்
முந்தினர் கந்தன் மயில்வெற்ப ராலரண் முற்றினரா
மந்த நகருஞ் சிவக்குமுன் னேவெளுப் பானபுகை
யிந்த நகரம் வளைத்தலிற் பின்பனி யெய்தியதே. (௲௧௬)

### பாங்கி வன்புறை.

அரண்முற் றினரென் பதனால் விடிய லமர்பனியால்
வெருவுற் றனைகுகன் மாயூர வெற்பர் விரலறியாய்
வருதற் குரிமையி லேனியுஞ் சிப்புங்கை மாற்றினராம்
பருதியிற் றேன்றவு ரேற்செய்யு மோபின் பனிதுயரே. (௲௧௭)

தலைவி வன்போறை.

உலகிய னோக்கி யிறைவர்க் கிரண்டிடை யூறாறுமென்
றலர்முலை மாதரு மெம்மனை மேவ வனுப்பினரே
யிலகயில் வேலன் மயில்வெற்பிற் றேவ ரிருவருக்கு
நிலவு விமானங் கொணர்வார் பொறுத்தற்கெ னேரிழையே. ()

துணை ஏதுவாகச், சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்,

புலந்து பாசறைப் புலம்பல்.

குலமட மாதரிப் பாசறை மேல்வரல் கொள்கையன்றே
நிலைமை பலபட நேர்வர் பலர்சிலர் நேர்ந்திலரே
யலர்மலி சோலை மயில்வெற்பில் வேலனன் பாலளித்த
தலைமைத் தனித்துறை யேவரல் சென்று தனித்துறையே. (௩௧௯)

தலைவன் வருவழிக் கலங்கல்.

புகைகண் டடனே யதிர்தர யார்க்கும் புறங்கொடுத்த
மிகைகண்டு வாழ்த்துங்கொல் லோமங்கையூடி.வெகுளுங்கொலோ
பகைதணித் தற்குச்சென் றேனக லாத பகைமிகுந்தே
னகல்வதென் னஞ்சுக மேயிர வொன்றெனக் கஞ்சுகமே. ()

வந்துழி மகிழ்ச்சி.

எண்ணான் கிலக்கண முள்ளவ ரேயெரி யூட்டுமவ்வூர்ப்
பெண்ணாரென் போல்பவர்க்கவ்வாறுநன்றென்ற பேதைநெஞ்சந்
தண்ணகச் சேந்தன் மயில்வெற்பி லேவந்து சார்தனன்றாம்
விண்ணோர் பணிப்பகை காமாக் கினிபற்றி வெந்ததுவே. (௩௨௧)

துணைவயிற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றாவது—பொருள்வயிற்பிரிவு.



தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

அக்கினிட் டோம மிறைசூயஞ் சொல்லய மேதமுதற்
றொக்கபல் வேள்வியு நந்தம் புகழுந் துலங்குதற்கே
தக்கதுன் றக்குடி வேளருட் கொண்டு தருமமில்லா
மக்கள் பலர்கொள் பொருள்கூட்டல் வேதம் வகுத்ததுவே. ()

பாங்கி தலைவிக் கதனைப் பகர்தல்.

தருவேங்கை யாகிக் குறப்பிடி மேவும்வி சாகன்மிக்க
மருவோங்கு சோலை மயில்வரை நாடர் மகிழ்மயினீ
திருவோங்கப் பெற்ற சிறுவேங்கைக்கேமணஞ்செய்யவெண்ணிப்
பெருவேங்கை தேடி வருவேங்கை போமென்று பேசினரே. ()

தலைவி பிரிவுடன்படாமை.

வேண்டும் விருந்திட் டிறுதிகள் கூறிய வேண்மருது
பாண்டியன் பக்க மிருக்கக் குறைகள் பணத்திலுண்டோ
தாண்டு மயிற்பரி யான்றேரைகை வெற்புந் தமிழ்மதுரை
யாண்டவன் றேசமன் றேவட மேரு வகன்றிலதே. (௱உச)

பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

கொடுக்குந் தொழிலைக் கொடாதோன் கொடுக்கப் புகின்மதுரை
யடுக்க லொருவனம் வீரம யேந்திர மாகியநா
லிடத்திற் பொழிந்த மழையேனு நேர்கில விம்மணத்திற்
றடைப்படு மோகொடை வேலன் மயூரப்பைஞ் சாரலிலே. ()

தலைவி பிரிவுடன்படுதல்.

மேல்வாரப் பொன்னையென் மேல்வாரம் வைத்தில்லின் மேவச்
பாலார் பிறர்பொன்னைக் கோயிலுந் தானமும் பற்றநல்கி [செய்து
வேலார் மயின்மணப் பாங்கற்குந் தம்பிக்கு மிக்கமணங்
கோலா கலத்திற்செய் வேண்டு நிதியங் கொணர்ந்தினியே. (௱உ௬)

தலைவன் இல்லத் தழுங்கல்.

சோற்று முகத்தி னடையினு மார்பினுஞ் சோர்வுகண்டே
னீற்றுமுத் திற்கு நிகராது நல்கு நிதியமென்றாள்
போற்றிய சண்முக வாவி மருதா புரியெனவே
சாற்று குகன்மயில் வெற்பை விடிலின்பந் தானில்லையே (௱உ௭)

இடைச்சுரத் தழுங்கல்.

வேதிய னீசுர வையன் ப்ரதிட்டை விசுவலிங்க
நாத னமரு முருகன் குகன்மயி லகத்தினர்
நீதியி தன்றநெஞ் சேநடக் காட்டி னெறிதப்பல்போன்
மாதை நினைந்தும் பொருளை நினைந்து மயங்கினையே. (௱உ௮)

தலைவன் பிரிவுழித் தலைவி கலங்கல் (இளவேனில்)

ஆவுங் கலையு மதயானை யுங்கொள்ளை யாடுமெங்குந்
தாவும் பரியு மணிக்குப் பலும்பல சாளிகையு
மேவும் படிவந்த வால்வேண் மயில்வெற் பிறையிருந்தார்
கூவுங் குயிலைக் குரனெரித் தாரன்று கொன்றிலரே. (௱உ௯)

பாங்கி வன்புறை.

கஞ்சம் புகுந்துமுன் வல்லத்தி லேகையைக் காட்டுகின்றார்
வஞ்சிக் கொடிமயி லேகலிங் கங்கொள்ளை வாய்த்தனராங்
கொஞ்சுகல் யாண மிகத்தேடிக் கைவசங் கொண்டுசென்று
மிஞ்சும் பணமயில் வெற்பாருக் கென்றுமுன் விண்டனரே.

### தலைவி வன்பொறை.

புகவந்த பொன்னிற் பொறைசிறி தென்பள் புகழுமுன்றி
னகம்வந்து சேர்குவ தாறுறென் றோதுவ ளாறுமுகன்
குகன்வடி வேலன் மயில்வெற்பர் கொய்பு குறித்தனர்நீ
சகிசகி யென்பள் சகியே யிவளவஞ் சகியல்லவே. (௫௩௧)

### தலைவன் வருவழிப், பாகன் றன்னொடு கூறல்.

கன்றிய காமத்தி னல்வரு மன்னற்குக் காதனள
னன்று கொடிஞ்சியந் தேர்விடக் கற்ற தறிந்தனையோ
வென்றி முருகன் மயில்வெற்பிற் றெவ்வரை வீட்டினன்கூட்
டொன்றில பாதி யுடைவாள் செலுத்திச்செல் லுன்மனைக்கே.
(௫௩௨)

### வருவழிக் கலங்கல்.

தேடச்சென் றேம்பொருள் சென்றன மோசென்று சென்றுவெல்
கூடச்சென் றானன்றி நின்றானி லையெதிர் கூக்குயிலை [லாங்
பாடச்சென் றோர்துயர் தீர்போர் மயில்வெற்பிற் பாவைவிளை
யாடச்சென் றான்றொல் வனமோ கொல் கண்ணொதி ராயினதே.
(௫௩௩)

### வந்துழி மகிழ்ச்சி.

பொன்மயி லுற்றது பஞ்ச வனக்கிளி புக்கதுவெள்
ளன்ன நடந்தது பூவை யெதிர்ந்த தருள்விரும்புஞ்
சின்னஞ் சிறுகுயி னொண்கொண் டதுபெற்ற சிவகஞ்செவ்வேண்
மன்னு மயில்வெற்பிற் கல்யாண மாக மகிழ்ந்தனரே (௫௩௪)

### தலைவிமுன் தலைவன் கார்ப்பருவங் கண்டு மகிழ்தல்.

வருமுனென் னைமந்த்ர வாளாய் வரல்கண்டு மற்றவன்னைத
தருகின்ற வாவென வாகுநின் கண்ணெனச் சாற்றுகின்ற
பரவையுண் மேக முருகன் மயில்வெற்பிற் பாவலர்க்குத்
துறைமரு தேந்தரன் றரல்போற்பொன் மாரி சொரிகின்றதே.
(௫௩௫)

### நாவலர்வாழ்த்து.

வாழி மயில்வரை வள்ளிதெய்வானை மயில்கண்மயில்
வாழி பொருமயில் வாழிகை மேற்கொடி வாழிபதம்
வாழி யருள்சண் முகம்பன் னிருசெங்கை வாழிசெவ்வேள்
வாழி தலத்தொடு தானீகர் வாழிய வாழியவே. (௫௩௬)

**மயூரகிரிக்கோவை முற்றிற்று.**

# மயூரகிரிக்கோவை யரும்பதவுரை

---

## காப்பு.

அன்பிலார்க்குப் பிந்தாவளம் உகச்செய்யும் ஒரு தந்தாவளமுக வன்றாள்தாம் கோவை சொல்லவுதவும் எனக்கொண்டு கூட்டுக.

பிந்தாவளம் - குறையாதசெல்வம். உக - கெட. தந்தாவளம் - யானை. விக்கினேசுரர் என்ற பெயருக்குத் தன்னையர்ச்சியாதவர்க்கு விக்கினத்தைச் செய்பவர் என்பதே முற்பட்டபொருளாகலான் அதனைத் தத்தை முற்படக் கூறினரென்க.

---

(க) பிடி - நடையாற் பெண்யானை, இடையாற் சிங்கம் [illegible] புலி. முலையாற் களிறு, கண்களான் மான் [illegible] ஒரு மயில் பிடி முதலாகிய மிருகங்களைப் பகை [illegible] தென்பது மற்றொருபொருள்.

(உ) தகர் - ஆட்டுக்கடா. தாய் தந்தை - தாயுக [illegible] பிமயமலை. சந்திரோதயப்பகை என்றது [illegible], வெண்டாமரை கலை. மயிற்பகை என்றது நாகருலகத்தை. [illegible] - மயேந்திரபுரி. கொண்டது - கடனீர். அதாகக்கொண்ட தேவருலகெனினுமமையும்.

(௩) திரை - திருப்பாற்கடல். செம்மலை என்றது மேருமலையை. நாண்துறை - வாசுகியினுலகமாகிய பாதலம். வெண்பிறை என்றது நெற்றியை. முத்து என்றது வெயர்வையை.

(௪) சுரர் - தேவர். மறையவர் - எதிர்மறைப்புள்ள வசுரர். நஞ்சுந்தரர் - நாகர். சுரும்பு - மந்தரமலை. உரர் - ஞானிகள். அல்லார் - அஞ்ஞானிகள். பெறும்பேறு - புண்ணிய பாவங்கள். இவை முறையே வெண்மை, கருமைக்குவமை. இருநோக்கிவளுண்கணுள்ள தொரு நோக்கு நோய் நோக்கொன்றன்னோய் மருந்து. என்னுந் திருக்குறள் இங்கு நோக்கத்தக்கது.

(ரு) பொன் தங்கத்தாலும், இரும்பு சம்மட்டி முதலிய கருவிகளாலும், நவமணிகள் வயிரவூசிகளாலும் செம்மையாமாறுபோல இப்பெண் போல்வாளுந்தானே செம்மைப்படவேண்டுமெல்லாமல் மணிமருந்தாதிகளால் ஆவதில்லை என்றவாறு. மருந்திற்றீராது மணியினுகா. தரும் தவமுயற்சியினகறலுமரிதே என்றார் பிறரும். வயிரவூசியு மயன்விலை யிரும்பும், செயிரறு பொன்னைச் செம்மைசெய்யாணியும். தமக்கமை கரு

தின் விளக்கம். கன்னம் - காது. சொன்ன கடம் - பொன் மயமாகிய கும்பராசி. நல்லோரை - சிறந்த விராசிகளை ; பெரியோர்களை. கடவுள் வடிவத்திற் சீவன், ஈசுரன், உலகம், எனப்பட்ட இச்சித்திரங்கள் தீட்டியிருத்தலை ஞானிகளுக்குக் கற்பிதமென்று காட்டும் தந்திரமென்றவாறு.

(கஉ) வாசி - குதிரை. பதம் - வாயூரடம். தகரார் - ஆட்டுக்கடாவையுடையவர் ; தகரவித்தையுபாசனைக்குரியவர். அதாவது சிதாகாசவுபாசனை. தகரம் - பிரணவாகாசம்.

(கங) வருவார் - புதிதாய் வந்தவர். யாதும் என்னும் உம்மை யாவர் நீயுரவ்வூரிலுள்ளா யென்னைப்பாதுகாக்குங் கடமையுமுடையாயென்பது பெறப்பட்டது. பூங்கருவார் புனக்கொடியார் இடஞ்செல்வது கூறுத்திடற்குக் கருத்தென்பர். எனக்கொண்டு கூட்டுக. கொடியார் என்றது குருக்கத்திக்கொடியை. என்பர் என்றது உலகத்தவரை. நான்காமடிப் பிற்கொடி என்றது அண்மைவிளி. ஊர் இடம் - யான்றங்குமிடம். இது வினைத்தொகை.

(கச) கரியகொடி - கருமையாகிய குருக்கத்திக்கொடி : கருங்காக்கை. இடம்போதல் - இடத்திற்செல்லுவது ; வலது பாகத்திலிருந்து இடது பாகத்திற்போவது. அமுதப்பெருங்குடம் - முலைகள். நஞ்சர் - விழிகள்.

(கரு) சூடு அல்மதனன் - சிவபிரானுதல்விழியாற் சுடுதலில்லாத மன்மதன். கரும்பு - தலைவி, கரும்புவில். நாண் - நாணமாகிய குணம். நாணி. தோம் - குற்றம். ஆடல் - வெற்றி. கயல் - தலைவிகண். மீனக்கொடி. மதியார்மரபு - அறிவுடையார் வழித்தோன்றிய தலைவன் மரபு ; பாண்டியர் மரபு. கூடல் - மதுரை, சேர்க்கை. குமரி - கன்னிகை, கன்னியாகுமரி. சேர்ப்பன் - கடற்றுறையையுடையவன். அலைமுற்றன்மையுடையவன். நீடல் - கால நீடித்தல். விதி - ஊழ்.

(கசு) பொன் நாண் திருக்கும் இறைவர் - இலக்குமியினுடைய மங்கல நாணையுமாறுபடச் செய்யுந்தலைவர் என்பது மற்றொருபொருள். முறுக்கு - பிணக்கு. கல் - அகலிகையாகிய கல். சிகண்டிமலை - மயிலையுடைய மேருவில்லிற் பூட்டிய வாசுகியாகிய நாணையுடையவனொருவனை முன்னுயிரினுஞ் சிறந்த எனது நாணைப்பொழுது பயனின்றாக்கிற்று என்றாள் என்க. அம் - சாரியை.

(கஎ) சிகண்டியும் - வேலும். என்றது தலைவிசாயலையும், கண்ணையும் என்க. வறிது - சிறிது. குமாரக்கடவுளுடைய மயிலையும், வேலாயுதத்தையும் நினைக்கச் செய்தீரென்பது கருத்து.

(கஅ) சேவல். இடையில்லது - சேல் ; முதன் மாத்திரை குறைந்தது - செல் ; எனவே, சேவல், சேல், செல், என்னுமிம்மூன்றனுள். செல்லைக்காவல்புரிந்து, சேலையும், சேவலையுங் கொடிகளிற் சேர்த்துக் கொண்ட கந்தன் என எதிர் நிரனிறைப் பொருளாகக் கொள்க. குமாரக்கடவுளை யுக்கிரப் பெருவழுதியாகவவதரித்த பாண்டியனெனக் கூறினர். செல் -

# மயூரகிரிக்கோவை யரும்பதவுரை.

மேகம். சேல் - ஒரு மீன். பொற்கொடிபவளத்தையு முத்தையுமீன்ற தென்பதுமற்றொரு பொருள்.

(௧௯) பூட்டிய நாண்டார் - சூட்டிய வடத்தோடு கூடிய சதங்கை; வீரக்கழல். கழல் என்பதற்கிப்பொருள்படக் காலணியணி வா-ரென்றார் சிவஞான போதச் சிற்றுரையிலும். தாரு - பஞ்சதருக்கள். பொற்பங்கயம் - பதுமநிதி. கார் என்றது இங்குப் பொன்னைச்சொரி யும் புட்கலாவர்த்த மென்னுமேகத்தை.

(௨௦) குக்குடத்துசன் - கோழிக்கொடியையுடையவன். நாலாம் நிலை என்றது அதரத்தை - உச்சி முதலாக உள்ளங்கால் வரையுள்ள சில இடங்களை அர்த்தற்குறிப்பாகக் கூறலால் நாலாநிலையென்றார். உச்சி-முதனிலை. நெற்றி - இரண்டாநிலை. கண் - மூன்றாநிலை. அதரம் - நாலாநிலை. ஏனைய இடங்களைக்கொக்கோகத்திற்காண்க.

அதரம் - அலை. பவம் - பிறப்பு. அமுதுண்டவர் நபர்பவத்தினறு பாத்திரமெயாவார் எனக்கொண்டுகூட்டுக.

(௨௧) தோகைதனில், வடமேருகில், பதிதனில், கால் வைத்தவர் என்பது மயிலிலுந்தேரிலும் பாதங்களை வைத்தவர் என்றும் வடமேருக்கில் வாயுவைத்திக்குப்பாலகராக வைத்தவரென்றுங்கொள்க. மூவர் - திரிமூர்த்திகள். பகிருடல் - பாதிமெய்.

(௨௨) மற்றோர் என்றது ஏனையகிரகங்களை. மானத்திரவியங்கொ ண்டார் என்றது நிலவரை. நெறி - சந்திரவமணம். கானம் - காடு. பசல் - பாம்பு. மால் - இன்பமயக்கம். கானத்தில் ஒத்த காமவின்பத் தையாத்திலை வாய்த்ததுபோலவுலகத்திற் பிறவாடவர்கள் என்னை மெயா றித்து மற்றப்பெண்களுக்கிவ்வாறு அளித்திலர் என்றபடி.

(௨௩) வாகுவில்காலிட்டபானுவும் - தோளில் விலகிய ஒளியையும், ஒளிகுன்றிய தோள் என்பது கருத்து. விண் என்றது மேகம்போலுங் கூந்தலை. சரோருகம் என்றது தாமரைபோலும் பாதங்களை. அன்னம் என்றது அம்சதொனியையுடைய சிலம்புகளை. ஒதுங்கல் - விலகுதல். பாலிட்ட சொல்லியர் - பாங்கியர். மயூரப்பருப்பதத்தார் வேலிட்டமா என்றது சூரனுகியமாமரத்தை. மாம்பிஞ்சு - கண். தோள் ஒளிகுன்றி யதையும், கூந்தல் கொலைந்திருப்பதையும், சிலம்பு விலகிக்கிடப்பதையும், சகிபத்திற் பாங்கியர் செய்யுமாரவாரத்தையும், மையழிந்து சிவந்த கண் களையும், நழுவிய வாபரணங்களையும் வெற்பவர் கண்டாரில்லை என்று நாணினள் என்க.

(௨௪) காலிற்பணியுஞ் சிலம்பு - பாதங்களிற்பாடிய வணிந்துள்ள தாயுமம். நெளிந்து இறல் - வளைந்தொடிதல். பால் - இடையின் பக்கம். முருக்குமணி - ஒருஆபரணம். இதில் முதலடியில். வாயுதேவனுல் ஆதி சேடனுடல் நெளிய மேருமலைச் சிகரம் வளைந்தொடிதலைக் கண்ட துண்டோ எனவும், 2-ல் பான்மேற் பொருந்திய வாடையொதுங்கா மையைப்பார்த்தீர் எனவும். 4-ல் கிருஷ்ணனுன் மகிழு முருக்குமணிக்கு மாசில்லை எனவும், தோன்றுமாறுணர்க. மாசுஎன்பதை மாசெனக்கே

எனப்பின்னும் கூட்டி. புனக்கணிந்தவணிகளான் மாசுவரின் அம்மாசு எனக்கே என்றான் என்பது கருத்தாகக்கொள்க.

(உரு) மயிலீர், குயிலீர் என்பன விளிகள்; அயில் ஈர் எனப்பிரிக்க. இராவும் என்னும் உம்மையாற் பகலும் என்பதுபோதரும்.

(உசு) சுனை - மலைமடு. தினை - சிறுமை. சரவணச்சோதி - சரவணப் பொய்கையையுடைய குமாரக்கடவுள். சரவணப்பொய்கையிலவதரித்தவரா கிய கடவுளெனினுமமையும்.

(உஎ) கொண்கன் - நாயகன். நதிபதி - கடல். முருகன் தாதை அம்மான் என்பது தக்கனை, மகம் - யாகம்.

(உஅ) மட்டு - வாசனை. திட்டாந்தம் - உதாரணம். சந்திராங்கச்சிலம்பனில் - மயூரகிரியிலமர்ந்திருக்குங் குமாரக்கடவுளைப்போல. கள் தாழ்ந்த பூங்குழலார் மணங்காண அக்கருத்திற்கு ஆன்று எனப்பிரிக்க. இராமனைப் போல வேறே கலியாணஞ்செய்வதில்லை என்றபடி. உள்தாங்கல் - மனைவிமை. பிறப்பொன்றினும் - ஒருபிறப்பினுமென்க. காணுதல் - கண்டுசெய்தல்.

(உகூ) கலை தேர் மயில் ஊர் எருத்தினில் - கலைகளையுணர்ந்த இந்திரனாகிய மயிலினுடைய அழகிய பிடரியில். கொண்டு - ஏறிக்கொண்டு. கடையிலும் - யுகாந்தத்திலும். வாழ்நிலை - வாழ்நிலைமையை. ஓதும் செட்டி - உபதேசிக்குஞ்செட்டி நாமங்கொண்டவர். வஸ்திரப்பொதியை யொரு மயிலைக் காளைமாட்டிலேற்றிக்கொண்டு விற்றலன்றிக் கடையிலிருந்து வியாபாரம் பண்ணுஞ்செட்டி என்பது மற்றொருபொருள். முன் விலையலெடுத்து விற்றதெனினுமமையும்.

(௩0) மதியோன் கதிரோன - நியமித்தகாலந் தவறாமலுதயமாகுஞ் சந்திர சூரியர்போல. தோன்றலராமெனின் - தலைவர் வாராராயின்; விதியோ - ஊழ்வினையோ? பிறப்பினை ஆதி ஒப்போ - நன்கு புலப்படவில்லை. விரகநதிபதியோ - ஆசைக்கடலோ? கொடுவரியோ - கொடிய வண்டோ? அன்னமோ - அன்னப்பறவையோ? பாவையரோ - பாங்கியர்களோ? துதியோ - புலம்பலாகிய தோத்திரங்களோ? பழிகொள்வது யாதோ? என்க. தலைவர்வருவதற்குக் காலதாமதமாதலாற்றலைவியிரங்குபடின் விதி, ஆசை; தூதுசெல்லுதற்குரிய வண்டு, அன்னம், பாங்கியர். புலம்பல், இவைகளைக்காரணமாகக் கூறுவளோர் என்றவாறு. மதிகதிர் நியமித்த காலந்தவறாது திக்குமென்பதைத்திங்களொடு ஞாயிறன்னவாய்மையும் என நன்னூற் பாயிரவுரையிற் கூறுமாறுகாண்க.

(௩க) பணித்தாம்பு அசைக்குமலை - வாசுகியாகிய நாண்பூட்டிய மேருமலை. பாண்டியன் என்றது உக்கிரப்பெருவழுதியை. கணித்தார் - வேங்கைமலர்மாலை. மணித்தார் - முத்துமாலை. வயிரம் - வைச்சிரமணி. அணித்து - சமீபம்.

(௩உ) ஆறறியந்தணர்என்றது ஆறங்கங்களையுமுணர்ந்த முனிவராகிய பார்ப்பார். மாறவுரைத்து - மாறுபாடாகச்சொல்லி. ஆறங்கமாவன - கலித்தொகைக் கடவுள் வாழ்த்துரையிற்காண்க. ஆறு-ஆகுபெயர். அந்த

னார் - வேதாந்தத்தை யணவுவார். அழகிய தண்ணளியையுடையாரென்றுங்கூறுவீர். மறைப்பொருளுரைத்தகதை திருவிளையாடற்புராணம் வேதத்திற்குப் பொருளருளிச்செய்த படலத்திற் காண்க.

(௩௩) சிசு - பிள்ளைகளுக்கு நேர்ந்த. ரவசாகரரோகப்பெரும்பவம் - ஆரவாரத்தையுடைய கடல்போன்ற வியாதியோடு நீசப்பிறப்பும் போக. அர்ச்சித்த சுப்பியோன் - அர்ச்சனைபுரிந்த வதிஷ்டமுனிவர். இவ்வரலாறு தலபுராணத்துட்காண்க. அரன் அரிநம்புசுரர் - அரனையும் அரியையும் கதியாகக்கொண்டதேவர்கள் அசுரரையும், சேடனையும், நஞ்சையும், விரும்பி இப்பூமியிலுள்ள வித்தலைவியாகிய வமுதத்தை விரும்பினரில்லை என்றபடி. சுரபி - காமதேனு.

(௩௪) மேலார் - மேன்மக்கள், கண்கள். கீழார்-கீழ்மக்கள். கால்கள். வெள்வளையான் பாலாருமென்பதற்கு வெண்மையாகிய சங்கத்தைக் கையிற்கொண்ட கிருஷ்ணன் பக்கத்தேதங்கிய என்க. துவாபரயுகத்திற் சாம்பவதிக்குப் புத்திரப்பேறு கருதித் தலவாசம் பண்ணியிருந்தமையாற் கொள்க. வரலாறு தலபுராணத்தாலறிக. வலவன் - தேர்ப்பாகன். மால் - கருமை. கமம் - நிறைவு. வேல் என்றது கண்களை. தளிர் என்றது பாதங்களை. கலவிக்காலத்தின்மையழ்தல் சிவப்புறுதல் முதலான துன்புறுத்தப்பட்ட கண்கள், திரும்பிப்பார்த்தலாற்றனக்குண்டாகும் வருத்தத்தை நீக்கலும், வருடுதன் முதலான வுபசாரங்கள் செய்யப்பெற்ற பாதங்கள் பிரிந்து நடத்தலாற்றனக்குத் துன்புறுத்தலுங் கருதிக் கீழாருறவிற்கு மேலார் பகைநன்று என்றான் என்க.

(௩௫) வையம் - தேர். மையம் - நடு. ஆயம்-மாதர்கூட்டம். கதிருதயம் - பாலசூரியோதயம். மான் என்பது தலைவியை.

(௩௬) ஏந்திழைவேல் என்றது தலைவி கண்களை. ஒருத்தி - உயிர்ப்பாங்கி. தீர்விண்ணுறைமதி - குறைவுநீங்கிய பூரணசந்திரன். தாமரை மெய்த்துயர்வேண்டின என்பது மாலைப்பொழுது வந்ததென்றபடி. மெய்த்துயர் - மெய்வாட்டமாகிய துயரென்க.

(௩௭) கால் அம்கை - காலாலும், அழகிய கையாலும். கல்சாபம் வாங்கும் கடவுளர்க்கு - அகலிகை சாபத்தை வாங்கிய விஷ்ணுவிக்கும், பெருமலையை வில்லாக வளைத்த சிவபெருமானுக்கும். பாலன், மருகன் என்பதை எதிர்நிரனிறையாகக்கொள்க. சாமளம் - பச்சை. மன்னவர் வெற்படை கண்ணாகிய வேலினிடத்தும் அம்பினிடத்துமிருந்து கூர்மையைக்கொண்டது என்க. வாங்கலே வளைத்தல் கொள்ளல் என்பது நோக்கண்டு.

(௩௮) பேதையென்றது - தலைவியை. கண்கூற்றின் - கண்ணாகிய யமனோடு. பெற்றவர்பேறு - பெற்றோர் பயன். ஆணின்மேவுக - ஆணைப் பெற்றோர் பெறும்பயன்போலப்பெறுக. கஞ்சன் - பிரமன். சின் - கையாள். சிலம்பவர்க்கு - சிலம்பில் வாழ்வார்க்கு. விண்கூற்று - மேலுலகத்திலுள்ள தேவர்க்கு. அவர்கள் என்றது பெற்றோரை.

# மயூரகிரிக்கோவை யரும்பதவுரை.

(௩௯) பைந்தாமரை-சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபிரானை. பணி சேய் - பணியச்செய்தசேய். பருமம் - மேகலைவகையிலொன்று. பருமவல்குல் என்றது பருத்தவல்குலையுடைய தலைவியை, பைந்தாமரை என்றது தலைவிகண்களை. மாதவி - குருக்கத்தி. வைந்தாமரைக்கணை - கூர்மையாகிய தாமரைமலரம்பு. பின்கூடும் என்றது எய்புங்காலத்திற் பின்புறந்தம்மிடத்திலைவைத்து. மாற்றலர் என்றது - மன்மதனை. தாமம்-மாலை.

(௪0) மனத்தார் இருளில் விழியாரிமைக்கிலொருமாறுமென்று நனைவையழியார் எனக்கொண்டு கூட்டுக.

(௪௧) புலியை - தலைவியிடையை. அணத்தை - நடையை. வலை - அலைவெயர்த்து. மானை - கண்களை. கலி - சிறுமை. புலி - சிங்கம். அது இடைக்குவமை. புலி சிங்கமுழுவை சார்த்தூலம் என்பது பிங்கலந்தை காண்க.

(௪௨) விரை - மணம். சுரும்பு - மூலை. பொன்வரை - மேருமலை.

(௪௩) காளைக்காளை என்றது திருக்கானப்பேரூரிலமர்ந்திருக்குங் காளையப்பனாகிய சிவபெருமானை. ஒரு கொம்புதங்கிசீயன் என்றது திருமாலாகிய வராகக்கோட்டைக் கவர்ந்து கொடுத்தனை. ஏழ்சானம் - எழு சுரங்களோடு கூடிய விசை. கொம்பு கொடுத்த செலாற்றைப் பின் எனபான பாட்டுக்களானு மறிக.

(௪௪) கள்ளம் - வஞ்சம். புள் என்றது கலவிசெய்யுங்காலத்திற் கண்டத்திலிருந்தெழுப்பும் அரி குயில் மஞ்ஞை புறா கூட்டம் புறா காடை கோழிக்குரல்களை. ஊர்ப்பள்ளம் - ஊராகிய பள்ளம். ஊர் - மயூர ந்திபுரி. வாரி - கடல்.

(௪௫) வன்புறைப் பேச்சு - வற்புறுத்திச் சொல்லிய சொல். கனி - மாங்கனி. இறப்பு ஒன்றிலும் - இறப்பெய்திலும்.

(௪௬) தக்கு - தாழ்ந்த சுதி. எச்சு - உயர்ந்த சுதி. மன்று - சபை ஆறு எனும் வாயில் என்றது பாணன் முதலிய வாயில்களில் ஆறுவகை வாயிலாகிய பாங்கனை. இ. வி. அகத்திணை சூ. 64. காண்க.

(௪௭) மாலிகை மூன்று ஆவன கடம்பு, வெட்சி, வேங்கை. மிசை - மேல். தாபதர் - விஸ்வாமித்திரர் முதலியோர் அயனார் மகன் - வசிட்டன். அவன் என்றது குமாரக்கடவுளை. பதம் - பாதம். தாடி - தாடிப்பு, அது விளைக்குறிப்பு. தாபதர்க்கருள் செய்ததையோ? அயனார் மகர்க்கு அவன் சொல்லியதைப்போ? அவன் பதத்தைச் சாரப்பெற்றது டிப்போ எண்ணி வந்தது என்னை? என்றவாறு. இவ்வரலாறுகள் தலபுராணத்திற்காண்க. எண்ணிய - எண்ணி.

(௪௮) வேட்டம் - வேட்டை. குகன் மாரன் - இலக்குமி. எய்த்தது - எய்த்ததாகிய மான். இது வினையாலணையும்பெயர். போன்ம் - போலும் என்பது போன்ம் என நின்றது. மான் - மான்போல் வாளாகிய தலைவி. இது உவமையாகுபெயர்.

(சகூ) நூல்மலையைத்தாங்கும். அரவினந்தம்பகைதம்பகையை மாற்றும், சிலை நேமியைத்தாங்கும், கலை வெம்புலிப் போரைத்தாங்கும், என்க. சிலை - வில், கல். நேமி - சக்கராயுதம். சீயம் - சிங்கம். கனம் - மேகம். விடர் - காமுகர்.

(ருO) வளை கூறச்செய்தது வள்ளிநாயகி. கூறு கொண்டது-பார்வதி. உரத்திலுதித்தது - இலக்குமி. நாச்சென்றது - சரஸ்வதி. கூறு - பாதி. உரம் - மார்பு. பெண்மை - பெண்டன்மை.

(ருக) வாண்மை - வாள்வலி. வின்மை - வில்வலி. மூரல் - சிரிப்பு. சேண்மை - தூரம். பிறர் என்றது அடுத்தவரை. அண்மை - சமீபம். சிந்தை நடு காண்மை - மனத்தினடுவிற் காணுந்தன்மை.

(ருஉ) வம்பு - இரவுக்கை. நம்பிடு அத்தேவரை என்று பிரிக்க.

(ருந) விண்ட - விரிந்த. பூங்குழல்மான் - வள்ளிநாயகி. வேங்கை - வேங்கை மரம். மானைக்கவர வேங்கை வடிவெடுத்தோன் என்பது மற்றொரு பொருள்.

(ருச) அல்லவை-பாவங்கள். முத்தானம் என்றது வாக்குத்தத்தம், மனோதத்தம், தாராதத்தம் என்பவைகளை. அறப்புறம் - அறச்சாலை. நல்லவர் - பெரியோர், கேட்டைவீரர். சிங்கம் - சிங்காதனம். சிம்மம். நண்ணிலை - அடையப்பெற்றிலை. மான் - தலைவி, மான்.

(ருரு) காகங்கவிழ்த்தநீர் - காவேரி; சோணாடு. தின்றகைக்குழந்தையாகம் கரையிற் கராத்தந்தது என்றது அவிநாசித்தடாகக்கரையிற் சுந்தரமூர்த்தி நாயனார் வரவழைத்ததை. சேரநாடு. விண்டுநின்றனது-வைகைநதியிற் பாண்டியன் சந்தியாவந்தனம் பண்ணுமர்க்கிய நீரில் திருமால் மச்சாவதாரமாக வந்த வரலாறு பாகவதத்தாலறிக.

(ருசா) மாமன் - திருமால். மஞ்சு எறுமயில் வாகனம் என்றது மேக வாகனத்தி லேறுமிந்திரனாகிய மயிலை. முருகநாமன் - உக்கிரகுமார பாண்டியன். அயில் - வேல். செயம்பெற்றநாடு - பாண்டிவளநாடு.

(ருஎ) எந்தை என்றது - குமாரக்கடவுளை. கையாயுதம் - வேல். பரி - மயில். வீடு - மலை. வற்றாச்சிந்தை - அறிவிற்குறையாத மனம்.

(ருஅ) நாலெனுஞ் சாதியில் - பதுமினிமுதலிய நால்வகைச்சாதிப் பெண்களில். சண்பகமேனி - சண்பகமலர்போலும் வடிவுடையவள். முதற்சாதிப்பெண் என்றபடி. சக்கரம் - மோதிரம், சக்கராயுதம். சங்கு - வளையல், பாஞ்சசன்னியம், கோல் - அம்பு. கொப்பு - ஒரு ஆபரணம். குழைமேற்கொப்பு ஒன்றியிருக்கும் என்பது மற்றொரு பொருள். குழை - தழை. கொப்பு - கிளை.

(ருகூ) தானவருக்குச் சங்காரகாலனை யெனக்கூட்டுக. உங்கலும் - அதட்டல். சொர்க்கம் - மூலை, தேவருலகு. சேண்நெறி - தூரவழி, ஆகாய மார்க்கம். ஆரம் - சந்தனம், சிலம்பு - மலை. இங்குக்காணற்கு ஊன் என்க. என் என்றது யாதுதடை என்றபடி.

## மயூரகிரிக்கோவை யரும்பதவுரை.

(௬௦) எல்-சூரியன். மதியை விரும்பாத குமுதமும், மல்லைவிரும் பாத வண்டும் உண்டோஎன நிரனிரையாகக்கொள்க. ஓங்கல் - மலை. மலி - வளம்.

(௬௧) இந்திரஞாலவையம் போனசேனை என்றது சூரனுடையயிந் திரஞாலத்தேர் கவர்ந்து செல்லப்பட்ட சேனைகளை. எஃகு - வேல். திருக்குளம் - மருதாபுரிஎன்னுந்தடாகம்.

(௬௨) தாருகவெற்பும், அலையும். எனப்பிரிக்க. அலை - கடல். சூர்- சூரன். இதழம்போருகம் - அதரதாமரை. எம் இறைக்கு ஓர்கணம் ஒருக மாக்கி எனக்கூட்டுக. இதழ்களையுடைய கமலாசனத்தில் விளங்கும் பிர மானந்தத்தைத் தரவந்தவர் என்பது மற்றொரு பொருள். பிரமனுக்கு ஓர்யுகம் கணமாதலறிக.

(௬௩) கண்நஞ்சினுற் செலக்காலஞ்சும் எனக்கூட்டுக. கால்-பாதம், யமன். காத்தல் முதல் பால் அஞ்சு என்றது பஞ்ச கிருத்தியங்களை. முத் தம் நாலஞ்சும் ஒன்றும் நகை என்றுபார்ப்பர் என்றது. இருபதுவகை முத்தங்களையும் பொருந்திய பல்வரிசை யென்று வெற்பர் பார்ப்பர் என் றபடி.

(௬௪) கருவேலை-பிறவிக்கடல், கரையேற்றி - கரையிலேற்றினவன் ஊழ் - முடிவு. காலன் - யமன். வருவேலை - வருஞ்சமயம். வயும் - வெற்றி. ஒருவேலை - ஒருவேலுக்கு. வடு - ஊறுபாடு, மான் - தலைவி. இருவேலைஎன்றது - இரண்டுகண்களாகியவேலை. குழைதந்தது - குழைந் தது. ஒருவேலுக்குச்சூரனுரு வடுவுற்றது இரண்டு வேலுற்று நம்நிறை யுருக்குழைதந்தது. என்பது மற்றொரு பொருள். வடு - பிஞ்சு. குழை இலை.

(௬௫) கோடணை-ஆரவாரம். குஞ்சரி - தெய்வயானை. நின்னூர் என் றது தலைவியை. கூடல் - சேர்க்கை. ஆனைக்கொம்பு - முலைகள். வாள்- கண்கள். வாய்மருந்து - தலைவிவாயமுது. யானைக்கொம்பால் வந்தகாய மும், வாள்தந்தகாயமும். வாயிலிடுமருந்தன்றியாறுது என்பதுமற்றொரு பொருள்.

(௬௬) தொட்டிற் சிறையுற்று என்றது தொட்டிலிடத்திற் கிடக்கு மிளமைப்பருவமென்றபடி. குயவர்சொல் - குருமொழி. சிட்டு - ஒரு குருவி. அது அடிக்கடி கலவி செய்வது. மெய்வாழையின் குளிர்விக்கும்- தேகத்தை வாழைமரத்தைப்போலக் குளிரச்செய்வாள். கொங்கைவட் டில் - கொங்கையாகிய சொக்கட்டான் காயில். கொங்கையாகியகிண்ண மெனினுமமையும். குறி - நகக்குறி. வட்டிற்குறி பார்த்து மகிழ்வாளென் பாருமுளர்.

(௬௭) கலைமான்-கலைகளைக்கற்ற தலைவன், கலையாகியமான். மறத் தியெனும் உருவி - குறத்தியாகிய வழகிய வள்ளிநாயகி. அருவித்தினை - தினைத்தாளையுடைய புனம். பொன்மறிமான் - தலைவி, பெண்மான். துருவி - தேடி. கலைமானையுன்னிவிளையாடல் துருவிக்கண்டேன் என முடிக்க.

(௬௮) பால் - வாலெயிறூறிய நீர். பழம் - வாயாகிய கோவைப் பழம். கமலம் - முகம். பாக்கிலை - கமுகின்ரேகைபோலுங்கூந்தல், ஏலம் - மயிர்ச்சாந்து. இளநீர் - முலைகள். இரண்டகலும்நாலும் இரண்டு. பாலையும் பழத்தையும் தட்டிலே வைத்துத்தாங்கிக்கொண்டு பாக்கு, வெற்றிலை, ஏலம் இவைகளையுங்கொண்டு இளநீரிரண்டுடன் தோன்றுங் கொல் என்பது மற்றொருபொருள். இளநீர் இரண்டு என்றதை மேல் கூடடம் செய்யுளாலுமறிக. அகல் என்பதற்கு அகலுதல் என்றும். தட்டமாகிய பாத்திரமென்றும் பொருள்கொள்க.

(௬௯) குவளைத்தரளம் என்றது கண்ணீர். முகிழ்நகை - புன்னகை. கொலை - தினைப்புனம். கொல்லை - கொலையென இடைகுறைந்து நின்றது. மனநிலைமேலருவி - மனத்திலுருபியாய்க்காணப் படுந்தலைவி. மாதவி - குருக்கத்தி.

(௭0) முயல்கள் களித்தேனையுடைய வயல்களிலும்; கலவியில் முயலும்பிணைமான் குளங்களிலும் நிறையும் எனநிரனிறையாகக்கொள்க. பிணைமானென்றது மகளிரை.

(௭௧) ஆயம் உள்ளார்க்கு என்பதற்கு சூதாடலுடையவர்க்கு என்றும், சூதாடலை நினையாதவர்க்கு என்றும் பொருள்கொண்டு, சூதாடலுடையவர்க்கு மாயக்கட்டையும், சூதாடலைநினையாதவர்க்கு அருண்முடிப்பையும் அருள்வது ஞாயமென்றே கொண்டவர் என்க. மாயக்கட்டு - மாயாபந்தம். அருள்முடிப்பு - அருளாகிய பொருள்முடிப்பு நேயம் - அன்பு. பயம் - நீர். உதரம் - வயிறு. ஏய - இணையாக. எழிலி - மேகம். மேகம் அன்பு பெருமலைச்சங்கொண்டு ஆகாயத்திற்புக்கதென்பது மற்றொரு பொருள்.

(௭௨) ஒருமையில் - தனித்து. நோன் மாலும். புணை - தெப்பம்.

(௭௩) விழிக்கு ஆவிபோலும் முருகன். கொடிக்கால் - துவசத்தம்பம். சாரி - உலாப்போதல். மாண்கூடும்பேடு - மாட்சிமையாகக்கந்தனைக்கலந்த வள்ளிநாயகி. துறை - நீர்த்துறை. கால்நடையில் - பாதசாரியாய். இதுதிணை மயக்கம். கொடிக்கால் என்றும். ஆண்கூடும் பேடை என்றுங்கொள்வது மற்றொருபொருள்.

(௭௪) கனம் - மேகம். ஓதி - கூந்தல். கடி - வாசனை. பெரிய தனத்தார் என்றது முலைகளை. வம்பு - வாசனை. எவ்வனம் - யௌவனம். மயல் - காமமயக்கம். மன் அத்தார் வெறி - முன் சூட்டிவிட்ட மாலையாலுண்டான மணம், என் இனம் என்றது எனது பாங்கியர்கூட்டமென்றபடி. கிளி - தலைவி. பாரமுள்ள (பெரிய) பூனைக்குக்கடித்தற்றொழில் உண்டாகும்; பெரும்பணக்காரர்களுக்கு வழக்குகளுண்டு. எந்தக்காட்டிலும் பசாசுகள் சேர்ந்திருக்கும், கிளிக்குப்பெரிய இறகுகள் பொருந்திய. என்னை என்பன வேறு பொருள். ஓதி - பூனை. கடி - கடித்தற்றொழில். மயல் - பசாசு. வாசம் - இறகு.

(௭௫) விழல் - பயனற்ற வார்புல், பிறஅன்பு - அன்னியதெய்வ பக்தி. நேரசர் - பகைவர். குழல் - கூந்தல், வேய்ங்குழல். குறிஞ்சி

குறிஞ்சிமலர், ஒருபண். சேந்து - சிவந்து. அழல் உக்கனையதளிர் - தழலிலிட்டதளிர். நேரலர்போல் விழிசேந்து வாடியதென் என முடிக்க. விழலுக்கு முத்தொலையிட்டிறைத்தே னென்விதிவசமே யென்றார் பிறரும்.

(எசு) அகம்வேண்டினர் - வீட்டில் விரும்பியிருக்கும் பெண்கள்; பனைக்குறைகொள்கை - பனந்துண்டத்தையுவமானமாகக் கொண்டகையிலணிந்த; வளைவிள்வரோ - வளையல்களை நீக்குவாரோ. வீடுகேட்டவிரும்பினவர் பனந்துண்டத்தாற் கொள்ளத்தக்க கைகளையும், வளைகளையும் விரும்புவதன்றி நீக்கமாட்டாரென்பது மற்றொருபொருள். தேம்பொழி பூமனைக்குறைமான் என்றது இலக்குமிபோல் வாளென்றபடி. விழி நன்மை கொள்ளாத மயக்கம் என்றோ என்றது கண்கள் நல்ல அஞ்சனந்தீட்டப்பெறாதமையல்யாது என்றபடி.

(எஎ) அம்பு - அர்த்தசந்திரபாணம். மயில்வரைநாதன்றொடர்ந்த பன்றி என்றது திருமாலாகியவராகத்தை. மருப்பு - கொம்பு. கரீரம் - அகத்திப்பூ. பொற்றநகை - பொலிவுடையபுன்னகை.

(எஅ) இறைமகன் மாதுலன் என்றது பிரமகுமாரனுந்தனக்கு மாமனுமாகிய தக்கன் என்றபடி. உபதேசி-பிரகஸ்பதி. கொடுமொழி - சாபமொழி. அரன்கிட்டி என்றது சிவபெருமான்கண்ணாகிய சூரியனை. ஒருநாள் என்றது அமாவாசைதினத்தை. குடிலம் - சடை. நாணமில்லாத வஞ்சனையையுடையமதி என்பது மற்றொருபொருள். குடிலம் - வஞ்சகம்.

(எகூ) கழங்கு - கழற்சிக்காய். மூரல்-சோறு. புன்கண் - துன்பம். சேதனம்செய்த - வெட்டியழித்த. அனம் - அன்னப்பறவை. பூவை - நாகணவாய்ப்புள்.

(அ0) மடமாதுசெய்கைதன்செயல் அல்ல. இளநீர் - முலைகள். இளநீர். கச்சுறுவது என்றது தனங்களிலுள்ள தலைவன் கைந்நகக்குறியை ரவிக்கையான் மறைப்பதை. இளநீர்கசக்குமோ வென்பது மற்றொருபொருள். இதழ்கொண்ட பங்கயம் ஆம்பல் இளங்காவியலராது என்றது இதழ்களையுடைய தாமரைமலரிலே ஆம்பன்மலரும், காவிமலரும் மலராமாட்டாவே என்றையுற்றாள் என்றவாறு. எனவே இவள்முகதாமரையிலுள்ள வாயாம்பலிற் றம்பூலந்தரித்தலாற்பற்காவியலர்ந்திருக்கிறதென் றறிந்தபடி. மேல் ககூ0, ககூசு-ம் துறைகளானுமிக்கருத்துக்களையறிக.

(அக) வேட்டம் - வேட்டை. ஓதிமம் - அன்னம். தத்தை - கிளி. மயில் என்றது தலைவியை. செல்லும் - செல்லுகிறாள். மருவார்புரம் காடாயிருத்தலாலதனையுவமை கூறினார். மருவார் - பகைவர். புரம் - நகரம்.

(அஉ) எழுவகையாவன; நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, சுருக்கம். செய்வினைமறைப்பு, அயர்ந்தியருநெறிப்போதல். ஒருழைப்பயிர்சியென்பனவாம். பொன்மான்மகள் - வள்ளிநாயகி. கூந்தல்வளாவில்லை, முலைகள் பெருத்துத்தோன்றவில்லை பேறிவற்றது என்க. முதுக்குறைந்தனளே, முதுக்குறைந்தனளே மலையனொள் வேற்கண்ணள். முலையும் வாராமுதுக்குறைந்தனளே. என்றார் பிறரும்.

(அஈ) கோடி - வஸ்திரம். தனத்தார் என்றது முலைகளை. பல்வடு-படதழும்பு கைவேல்புரி - கைவேலும்விரும்பும். கோக்கள் - கண்கள். வில்மை - ஒளியுள்ள வீஞ்சனம். எடிக்கு - எடியெனப்படுவோளாகிய வெனக்கு. கோடியளவுள்ள பணக்காரர்களும் பலகுற்றங்களைக்கொண் டிருக்கிறார்கள் கைவேலை விரும்புமரசர்களும் வில்வலிமை யழிந்ததுண்டு என்பது மற்றொருபொருள்.

(அச) மலர்த்தடம் - சரவணப்பொய்கை. தடத்தெய்தும் வேள் என்க. கத்தி - வாள், எழுத்தாணிக்கத்தி. ஓர் மன்னர்தலைகொய்து - ஒரு அரசர் தலையைவெட்டி, ஒரு அரசரானவர் ஓலைத்தலையை நருக்கி, இசைந்த திருமுகம் - பொருந்தியவழகுடையமுகம், எழுதிய வோலைச்சுருள். நென்னல் - நேற்று. மணம் - புணர்ச்சி, கல்யாணம்.

(அரு) கொம்பு அரும் தும்பி - தந்தங்களையுடைய யானை, மரக்கிளையிலுள்ளவண்டு. ஒருவன்றனுவைக்குழைத்தது - ஒருவனுடலை மிதித்துக் குழப்பியது, ஒருவலியவில்லை வளைத்தது. அம்பு - பஞ்சபாணம், ஐம்பொறியாகியவாளி. உருவின்மதன் - அழகில்மன்மதன். வடிவமில்லாத மன்மதன்.

(அசு) குறிஞ்சி - குறிஞ்சிப்பூ, குறிஞ்சி நிலத்தார். வேய்ந்து - சூடி, சூழ்ந்துறைபடி. கய்கு - கருந்தினைப்புனம். பருந்து. அம்பல் - அதரம், யானை. வேல் - கண். வேலாயுதம். சிவப்பு - செந்நிறம், இரத்தக்கறை. அனீகம் - சேனை. சூர் - சூரன். அடு - வெற்றி. துகளாக்கிவேள் - தூளாக்கின வருகிய வேள்.

(அஅ) வேள் - மன்மதன். இடைக்குவமானம். மருங்கு - இடை. தாறு - செடி.

(அகூ) உடை - உடுக்கை. ஒப்பனை - அலங்காரம். உடைமுதற்குண மிறுதியாகியயாவுமொன்றுபோலவே யிருக்கின்றன. இருவருக்கு முயிரு மொன்றென்பதைத் தலைவி விழிகாட்டாநின்றதுமனமே நீ போவாயாக. நயந்து கொள்ளாதவருக்கு என்ன காரியம் நடக்கும். என்றவாறு.

(கூ0) மால் - காமமயக்கம். திருமால்.

(கூக) கார் - மேகம், இது கூந்தல். இருமதி - இரண்டு சந்திரன். இவை முகமும், நுதலும். கயல் - மீன், இதுகண். குமிழ்ப்பட்டி - குமிழப் பூச்சுருள், இது மூக்கு. முத்தூர் - முத்துக்கள் தங்குமிடம், இது வாய். பார் - காண்பாய். ஊருக்கு - ஊர்க்கு, துடைக்கு. பச்சைமயிலார் - குமாரக்கடவுள், தலைவி. குன்றக்குடி என்றது ஊரையும், தலைவிமுலைகளையுமென்க. இதில் - காரைக்குடி, இருமதி, ஏரூர், குமிழ்ப்பட்டி, முத்தூர், பாரூர், ஆரூர், குன்றக்குடி, என்னுமூர்ப்பேர்கள் வந்தமை காண்க.

(கூஉ) அயன் - பிரமன். ஐந்தில் ஒன்று - காது. அலம் வந்திடாமல் - சுழற்சியடையாமல். குழை - குண்டலம். கொப்பு - சல்லிடைச் கொப்பு; அது காதையடைக்குந் தகையது. தன் வினாவிற்கு விடைபகராமையால் பிரமன் செவிப்புலன் வைத்திலனேவென்றும், குழையுங் கொப்பும் காதையடைத்திருப்பதாற் கம்மாளன் கொண்ட பலனென்

னவோ வென்றுங் கூறினுனென்க. பூங்கொடி யென்று சுழலாமல் இலை களையும் கிளைகளையுமியைய வைத்த பிரமன் என்பது மற்றொரு பொருள். கம்மாளன் - கம்மியன், பிரமன். என்னவோ என மூலத்தைத் திருத்துக.

(௯௩) சுனை - அல்குல் கமலம் - முகம். கொடி - இடை. தாம ரைத்தண்டு. பேதைமை - அறியாமை தெரிக்கேம் - தெரிந்திலேம். தன் வினை பிறவினையாக நின்றது.

(௯௪) முத்தம் - பல். ஆம்பல் - வாய். சுமுகமதி என்றது விளி. அழகிய முகத்தையுடையவளே என்பது பொருள். தூவித்தத்தை - சிறை களையுடைய கிளிகள். வாய் பகல் - வாய் நடுவில் வாய் அத்தம் - வாய்ந்த வழி, வாக்காகிய பொருள். இத்தத்தை - இந்த வாபத்தை.

(௯௫) வெற்படைக்கு ஒடியீர் - வேல்வலியிற் சிறந்தவரே. குறிஞ் சிச்சடைக்கொடி - வள்ளி நாயகி. இடைக்கொடி - இடையாகியகொடி, இடைப்பெண்.

(௯௬) தோகை - மயில்போலுந்தலைவி. மயில். கண்ணி - மாலை. பறவைபிடிக்குங்கண்ணி. அயில் - வேல்.

(௯௭) தாவில் மயில் - தங்குமிடத்திலுள்ள மயில், குற்றமில்லாத தலைவி. கண்ணி - மாலை, மயிர்முடிக்கண்ணி. கொடிக்காலிடம் - குருக் கத்திப்பந்தரடியிடம். நீர்கொண்டகண்ணி - நீர் உட்கொண்டவழகுடைய கண்களையுடையாள். வெற்றிலைத்தோட்டத்தில் நீர் சூழ்ந்த பாத்தியைக் கண்டேன்.என்றும் முன் மயிலுக்குக் கண்ணியைத் தலையிற்கண்டேனென் பதற்கியைய நீர் வைத்த கண்ணியைக் காக்கைக்காலிற் கண்டேன் என்றும் பொருள்கள் தோன்றுமாறுணர்க. இங்குக்கொடிக் கால் - வெற் றிலைத்தோட்டம், காக்கைக்கால்.

(௯௮) தையற்படாதகலை - கலைஞானங்கள், பயிர் - பைங்கூழ். செல் ஒளிகுழை - மேகம்போலும்பசியதழை. ஒளிக்கு உழை எனப்பிரித்தால் ஒளியிருத்தற்குப் பார்வை மிருகமாகிய மான் என மற்றொரு பொருள் தோன்றுமாறுணர்க.

(௯௯) பரந்தவொளியையுடைய குண்டலத்தைக் கரத்திலணிந்து கொண்டவாசர் எவர் என்பது மற்றொரு பொருள். கைக்கொள்ளல் என்பதற்குக் கையிற்கொண்ட என்றுரைக்க. அங்கீகரித்தல் என்றது மற் றொரு பொருட் குரைக்க. அது கண்டுக்காதிலணிதலென்க.

(௧00) பங்கம் - பழுது. அங்கம் - மேனி.

(௧0௧) வன்னிதொடரும் வனமாய் உலகம் மடுத்த - தீப்பற்றிய காடு போலும் காலத்திலுலகத்தைத் தன்னுட் பெய்த. பிறைச்சென்னி - பிறையணிந்த முடியையுடைய சிவபெருமான். சோதிடர்சொற்றதுசிங்க விராசி, கன்னி - தலைவி. கன்னிராசி, சிங்கம் - தலைவன். சிங்கராசி. குடி லம் - வஞ்சகம்; ஆகாயம்.

(௧0௨) சூலம் - சூலாயுதம். கடிப்பு - குறுந்தடி. இட்டு - குத்தி. மோதினன் சிலேடையாக இரண்டு பொருள்கொள்க. கார்க்கோலம் - கருநிறக்கோலம். பூமலரா வேங்கை - புலி. பரியாசம் - விநோத வார்த்தை.

(௧0௩) உழுவை - ஒரு மீன். புலி புல் - புல், புலி. வரைந்த - அளவு படுத்திய; மலையின்கணுள்ள. கொடுவரி - கொடுமைசெய்துவாங்கு மிறைப்பொருள். புலி. கைவல்லியம் - புலி. முத்தி

(௧0௪) தும்பி - வண்டு. யானை. மாதங்கம் - பெருமையுடைய பொன். யானை. பட்சி - கருடன். நாகம் பாம்பு. யானை. கரி - இருந்தை. யானை. விலங்கு - நிகளம். மிருகப்பொது இங்கு யானை. மா - மாமரம். யானை. கொம்பு - மரக்கிளை, தந்தம். காயம் - புண். ஆகாயத்தில்யானை வரவில்லை என்பது மற்றொரு பொருள்.

(௧0௬) மருதி - சரஸ்வதி. மனையாள் பூமிதேவி. மருப்பு எடுத்து என்றது இரணியாக்கன் பாயாகச்சுருட்டிப் பாதலஞ்சென்றபோதென்க ஒரேன மருப்பிமேல பயின்ற பாவை மருங்கிமேல வளருகிறாள். என்னும் பாதச்செய்யுளிங்கு நோக்கத் தக்கது. கோலம் - அழகு, பன்றி.

(௧0௭) இவ்வனத்தில் ஆங்கவரைக்காப்பார்கள் எனக்கூட்டுக. ஆங்கவர் என்றது அடிப்பாரை. காத்தல் - தடுத்தல். மயில் வரைநாதனை நோக்கி கொடிப்பாய் வினவும்! என்றது குமாரக்கடவுள் திருமாலாகிய பன்றியைத் தொடர்ந்து கொம்பைக்கவர்ந்து வந்தவராகலான் அவரையே கேளும் என்றாள் என்றவாறு. முரசங்கறங்கியபோது எனப்பின்னும் கூட்டி யிடைநிலைத்தீவகமாகக்கொள்க. இப்பொருட்கு நோக்கி என்றது கருதி என்றபடி. அந்தமாக்கோலம் என்றது திணைமாவாலிட்ட கோலங் களை. வேல்பட்டிருப்பது - வேல்வடிவுற்றிருப்பது. முரசங்கறங்குதல் விழாச்செய்தற்கென்க. கடிப்பு - குறுந்தடி.

(௧0௮) பணித்தச்சனுக்குப் பகை என்றது பாம்புக்குப் புற்றாகிய வீடு கட்டுங்கரையானாகிய தச்சனுக்குப் பகையாகிய கரடி என்க. குதிரைத்தடம் பார்த்தவன் - கிருஷ்ணன். மணி - சமந்தகமணி. மாது - சாம்பவதி. அளித்தது - சாம்பவான் என்னும் கரடி. வானரத்தின் அணி என்றது மூலபலங்களை. தலைமைக்குள் ஒன்றானது - சாம்பவான். நணித்த - மதித்த. பல்லுகம்;-கரடி. குதிரைத்தடம்பார்த்தவர்க்கு மணித் தொட்டின் மாதை யளித்த வரலாற்றைப் பாகவதத்தானறிக.

(௧0௯) அறுகு - அறுகம்புல். சிங்கம். புல் - புல்லு, புலி. தூங்கல் - வலியிழந்தவன். யானை. பல்லுகம் - கரடி. பலயுகம். காங்கேயன் - குமாரக்கடவுள்.

(௧௧0) பைத்தாரணியவர் - ஆதிசேடன் படத்தாற்றாங்கு மூலகத்த வர். தாமரையென்று சொல் பட்டம் என்றது தாவுகின்றமரையென்று சொல்லுங்கவரிமான் என்றபடி பட்டம் - கவரிமான். தாமரைவடிவமா யிருந்ததினுமேல் தாமரையென்று சொல்லத்தக்க பறக்கும் பட்டம் என் பது மற்றொரு பொருள். வடம் - கயிறு. அணியாகும் - அலங்காரப் பொருளாகும். சாற்றில் - சொன்னால்.

(௧௧௧) சாமரை - சாந்தலையுடைய மரை; கவரிமான். தாமரை தாமரைப்பூ. ராவுகின்றபமை. காமர் என்றது மன்மதனை. கார்மயிலாம் மாமர் என்றது கரியமயிலுருவங் கொண்டாங்கிய விந்திரனை. அருளைத்திடின் அரைநாரு கையிற் பட்டகட்டுவது யாருக்குமாம் என்க. ஆம் - ஆகும்.

(௧௧௨) மான் - இயற்சொல். மறி, பிணை. என்பன மானின் பெயர்களாகிய திரிசொற்கள். திரிசொல் - இயற்சொல்லின் வேறுபட்ட சொல். இருமன்னர் என்றது இராமலக்குமணர்களை. வருத்தியது என்றது மாரீசனாகிய பொன் மானை. எற்கு - மேற்படை. எந்திழை - வள்ளிநாயகி.

(௧௧௩) ஏதம் - குற்றம். மறி - தடைசெய். பிணையென்றவரை - அடைக்கலமென்றவர்களை. உயர் - பக்கம். கைப்பட்டது - கையிலகப்பட்டுள்ளது. முனிவர் - தாருகாவனத்து முனிவர்கள். யான் மான் பஹூரான்.

(௧௧௪) சஞ்சீவகன் - ஒருவிருது. கேசரி - சிங்கம். வஞ்சியென்பது விளரி சரித்தது - சஞ்சரித்தது. சோமன் - சந்திரன். சசம் - முயல். அதையுடையது சசியாகலான் சோமற்குநாமம் வழங்கியது என்க. பஞ்சகிருத்தபுவி - பஞ்சபூதங்களாலமைமயப் பெற்றவுலகம்.

(௧௧௫) உவாமதி - பூரணசந்திரன். சிவன் காலமுயல் என்பது முயலகனை. முயல் - போர். முசல். எமக்குமுயலேலது என்றது யான் குறிஞ்சி நிலத்திலுள்ளாளாகலான் நீர் கேட்குமுயல் பாலை நிலத்தாரிடத்தும் முல்லை நிலத்தாரிடத்துமேயுண்டு என்றுள் என்றபடி.

(௧௧௬) பொன்மான் விஞைதல். கேளாதன என்பது விநோதவார்த்தைகளை. திண்ணன் - கண்ணப்பநாயனார்.

(௧௧௭) கர்க்கடகமதி - (மழைக்குரியாகப் பெய்விக்கற்குரிய) கடக சந்திரன். மர்க்கடகம் - குரங்கு. பொன்மானிற்கு அடகாம் எந்தும் குழையென்க. அடகு - இலையுணவு.

(௧௧௮) சுரம், சரி, வாரி. பட்டம், அத்தம், நெறி, என்பன பாதையென்னுமொருபொருள்குறித்த பலபெயர்த்திரி சொற்கள். ஆசவனம் என்பது அத்தலத்துக்கு ஒருபெயர். சரவணம், வையாபுரி, என்பன தீர்த்தங்கள். மருதுதுறை செய்தடாகம் - மருதாபுரி.

(௧௧௯) நெறி - நீதி. சித்திரம். அத்தம், என்பன நட்சத்திரங்கள். பட்டம் என்றது பறக்கவிடும் பட்டத்தை. வாரி - கடல். சரி - கைவளை. சுரம் - சுரநோய். ஊருக்குப்பாதைபதம் அலர் என்பது பக்குவமில்லாதவர்களாலூருக்குத்துன்ப முண்டு என்றவாறு. பதம் - பக்குவம். பாதை - வாதை.

(௧௨௰) கண்ணி - மாலை; பறவை பிடிக்குங்கண்ணி. தோகை - தலைவி, மயில்.

(கஉக) துச்சம் - பொய், கவர்பொருள் - சிலேடைப்பொருள். கைவில்லாலும் ன்று - கையில் விலலாயினு மிலது. ஆயினும் என்பது ஆனும் எனவிகை-குறைந்து நின்றது. ஒன்ருனுந் தீச்சொல், எனத்திரு க்குறளிலும் வந்தமைகாண்க.

(கஉ௨) இவட்கு ஞயம் அவ்வகையால் முன்னீர்ந்தனம் மன்னர்க்கு ஆளிமுதல் இவ்வகையான் ஞயம் மாறினம் எனக்கொண்டு கூட்டுக. அவ் வகை யான் என்றது நாற்றமுதலிய வெழுவகையானு மையமுற்றோர்ந் ததை. இவ்வகையான் என்றது சிஙகமுதலியன வினவியவற்றை என்ற படி. கைவகைசெய்தவர் - ஒப்பனை செய்தவர். மாறினம் - நீங்கினம் இவட்கு, மன்னர்க்கு என்பன உருபுமயக்கம்.

(கஉ௩) மயில் பூதத்தார் என்றது மயூரகிரியிலுள்ள தலைவியை. வாரணம் - யானை. கனம் - மேகம். கா - சோலை. குழல்-கூந்தல். அல மபுதல் - ஒலித்தல். முலையையும், சாயலையும். கண்டு தன்னின மெனக் கருதியும் மிடம் வருமென்ருன் என்க.

(கஉச) பரதர் குலம்புரிகாதை - பாரதம். விரதம் பிறவினன் றெயென்றது சத்தியமல்லாத பிறவிரதீங்களானில்லை என்றபடி. உற்றது சொன்னலற்றது பொருந்து மென்பது பழமொழி. மிருகம் என்பது சிங்கமுதலாயின வினவியதை. சரதம் - சத்தியம் தருந்தரும் என்னும் அடுக்கு எதிர் மறைப்பொருள்தந்து நின்றதுணர்க.

(கஉரு) மேலாந்திருக்குவிவேகத்தின் அத்துவிதம் தெரித்தார் என் றது கண்ணறிவாராய்ச்சியாலிருவரும் ஒருவரென்றறிவித்தார் என்றபடி. (வேதாந்தியர்) ஞானசாத்தி ரவுணர்ச்சியாற் சீவாத்மா, பரமாத்மா வென் னுமிரண்டு மொன்றென்றறிவித்தார் என்பது மற்றொருபொருள். திரு க்கு - கண், ஞான சாத்திரம். பால் - பக்கம். மால் - ஆசை. வெண்பிறை புன்னகை. திருக்கு என்பது ஞான சாத்திரத்துக்கு ஆகுபெயர். எனல் காவலிவளுமல்லள், மான்வழி வருகு வனிவனுமல்லன். நரந்தங்கண்ணியி வனே டிவளிடைக்கரந்த வுள்ளமொடுகருதியது பிறிதே. நம்முனுணுமர் போலத்தம்முண் மதுமறைந்துண்டார் மகிழ்ச்சிபோலவுள் ளத்துள்ளே மகிழ்வு சொல்லுமாடுவகண்ணினனே. என்பது இங்குநோக்கத்தது.

(கஉசா) தேன் - வண்டு. சாதி - சிறுசண்பகம். சூனு என்றது உப மன்னிய முனியாகிய குழந்தையை.

(கஉஎ) கூர்விழிமான் என்றது தலைவியை. கலைமான் - கலையா கியமான், கலைஞானங்களைக் கற்றதலைவன். அரைவாசி - அரையாகிய பாகம்; அரைவட்டி.

தர - நான்றர. கொள்ள - நான்கொள்ள. இசையல் - நீரி சைந்தால். பகர்பணி செய்வது - நீர்சொலலும் பணிவிடையையான் செய்யத்தக்கது. விற்கத்தக்க ஆபரணத்தையான் செய்யத்தக்கதா மெ ன்பது மற்றொருபொருள்.

(கஉஅ) பங்கம் - குற்றம். தாளம் - முத்து. துங்கம் - உயர்வு. வங்கம் - ஈயம். சங்கம்பழந்தரளத்தை யொவ்வாது என வுருபைப் பிரித் துக்கூட்டுக, உமக்கும் நம்தோகைக்கும் குலம்பார்க்கினும், சேர்க்கை யைப் பண்ணினும், பங்கந்தரும் என்க.

(கஉக) எனையவர்போலென்றலானும் என்றது மேற்பாட்டில் வேள்போலுமக்கும் என்றமையாலென்க. மன்னர்க்கு நாற்குலமாகிலை என்றது யான் க்ஷத்திரியனாகலான் எனக்குக் கீழ்பட்ட வருணங்களில் விவாகஞ்செய்துகொள்ளுதல் சாத்திரமுறைமையாம். ஆகவே யுன்றலைவியை யான் மணப்பதால் நால்வகை வருணாச்சிரம தருமத்துக்கு இழுக்கில்லை என்றவாறு. தவப்பொன் - பெரும்பொருள்.

(கஙo) ஊறு - இடையூறு. மீன் - தாரகை. அறல் - கருமணல். இவ்வூர் மடவாரளவுக்குத் தாரகையும் கருமணலும் நிகரன்று என்க.

(கஙக) ஏந்திழையாளுருக்காணின், வலைப்பட்டமான், மழைகண்டமயில், பசுங்கிளி, நின்னுயிர்ச்சேக்கை, பிடி, பவளக்கொடி, துடியிடை. ஆம் என்க. சன்னம் - சிறிது. துடி - உடுக்கு. சேக்கை - தங்குமிடம்.

(கஙஉ) தேனுந் தினையுந்திரட்டி வேட்குதவ ஒருநாள் வருமென்க. கான் - கற்பகச்சோலை. நிதி - சங்கநிதி, பதுமநிதிகள். நன்மனை - தலைவி வீடு.

(கஙங) சஞ்சாளிகம் - வண்டு. போகில் - பறவை. கோ - அரசன். வேலனுமம் - வேள். இது மன்மதனுக்கும் பெயர். ஏ - பாணம்.

(கஙச) மற்றூருரைக்கினும் என்றது கல்லார்பாற் கற்றாரும்கற்றார் பாற்கல்லாரும் என்க. வாரி - கடல். பற்றார் - சூரன் முதலியோர். விற்றார் - தலைவி. கொண்டார் - தலைவன். மிறை - குற்றம்.

(கஙரு) வட்டில் மதி - வட்டினீரிற்றோன்றுஞ் சந்திரன். ஓவியம் - சித்திரம். முகமன் - உபசாரவார்த்தை. ஆவலங்கொட்டல் - வாயாலாரவாரஞ்செய்தாடல் பெண்குறை - தலைவியாலுண்டாகிய குறை. கெட்டி என்றது தகுதியென்னு மிகழ்ச்சிக் குறிப்பு. முன் மூன்றடியினுங்கூறியவைகட்குப் பேதமையுடையார் என்பது கருத்தாகக்கொள்க.

(கஙகூ) திராமிளம் - தமிழ். பூவை - நாகணவாய்ப்புள். கொன் - அச்சம். குழை - தழை. அடுஞ்சிந்தை - கொல்லுமெண்ணம். வன்கண்மாதர் என்றது கொலைத்தொழில் புரியுங் குறவர் மாதராகலான் என்றபடி. உன் உழை - உன்னிடம். உன் - நினைப்பாய்.

(கஙஎ) பரவை - கடல். வந்தவன் - சூரன். தேர் - இந்திரஞாலத்தேர். நிட்களம் - அவயவமில்லாத ரூபம். சகளம் - அவயவத்தோடு கூடிய வுருவம். இளநீர் - தலைவி முலைகள், தெங்கிளநீர். ஓர்நாள் துயர்ந்தது என்றது ஒருநாளிற் றுன்புற்றதை,

(கஙஅ) மரியாதம் - சம்மானம். பிசகா - பிழைபடா. ஆங்கு - அவைபோல. சிலையாமெழுத்துஞ் சகாயமுங் கீர்த்தியுஞ் செந்தமிழு, நிலையாகு மன்னர்சொல் வார்த்தையு மென்றைக்கு நிற்குங் கண்டாய். என்னுக்தள சிங்கமாலையிங் கொப்பு நோக்கத்தக்கது.

(கஙகூ) அஞ்சுகமே - அழகியகிளியாகியவளே. பிறிய - பிளந்த. கிழிந்து மெய் - சரீரம். தையலை - தலைமகளை, தைத்தலை. ஊறு - துன்பம், பீற்றல். பெரும்பாசம் - பேரன்பு, பெரிய நூலிழை.

(கசO) வல்லிக்கொடி - வல்லியாகிய கொடி. மணம் - சேர்க்கை. தாரு - மரம். புல்லி - தழுவி. செல் இக்கொடி - செல்லுகின்ற விந்தக் கொடிகள். சுழுகிற்றிகழ் சேந்தன்மயில்வரை என்க. அல்லிக்கொடி என்றது ஆம்பல் மலர்ந்தகொடிபோன்ற தலைவியை. ஆம்பல் என்பது வரை.

(கசக) மங்காய் - மங்கையே. எனக்காய் காடும்புக்கு ஆடும் - கானகமும் என்னிமக்கங்கொள்ளப்பெற்றுத் தலைநடுங்கும். கனியுங்கனியும்- பழங்களுங் கனியாநிற்கும். தேடுங்குகன் - (அன்பர்கள் வேண்டுவதை யளிக்க அவர்பாற்) றேடிச்செல்லுங் குகன். என்கைசூடுமலர்தனை என்றது கையுறையாகிய மலர்மாலையை. மணம் - கல்யாணம், வாசனை. வாடும் அலர்தனை - வாடியபூவை, வாட்டத்தைத்தரும் பழிச்சொற்களை. மெய்ப்பில்-மேற்கொண்டு சொல்லின், மணமென்பதுண்டாம். வாடும் அலர்தனைத் தந்தால், மணமுண்டோ என்க.

(கசஉ) ஐயானனம் - சிங்கம். கைமாததிபள் - யானைக்கூட்டம். ஆறலைப்பார் - வழிப்பறிக்காரராகிய வேடுவர். உரு - அழகு. மாலையணிய மயில்வரைஎன்றது துவாபர யுகத்திற்சாம்பவதிக்குப் புத்திரப்பேற்றைக் கருதிக் கிருஷ்ணன் ஸ்தலவாசம்பண்ணியதால் என்க. இதைத் தலபுராணத்தானறிக. உன்னலர் என்-உன் மலர்மாலை யெயங்களுக்கேன். திருவன்றி - இலக்குமியை யல்லாமல், திருமாலைமேற்கொண்ட மின்னார் சுரிலை என்க. திருமால் - விஷ்ணு எனவே எங்கள் தலைவியாகிய திருவுக்குன்மாலைவேண்டியதில்லை என்பது கருத்து. ஐயானனமுதற்றொலை பிறுதியாயினவருமென முடிக்க.

(கசங) கதிரோன்கதிர் - சூரியகிரணம். விகாசிக்கும் - மலரும், சுருக்கை, கத்திகை, கண்ணி, ஆரம், இவைமாலைக்குப்பேர். ஆசைப்புள் - ஆசையாகியபுள், கண்ணி என்பது பறவைபிடிக்குங் கண்ணிக்குங் கொள்க. ஈசன் என்றது சிவபிரானை. அரிவையர்க்குரிய மாலை - சுருக்கை, கத்திகை, கண்ணி, ஆரம். எனமுடிக்க. இராவரு மதிக்குஈசன் என்றது இரவில் வருஞ்சந்திரனுபாதியடக்குதற்கு இம்மாலை சிவபிரானுக்குமென்பது கருத்து. சிவபிரான் சந்திரனை முடியிலடக்கி வைத்தலா லிவ்வாறு கூறினனென்க.

(கசச) ஆரக்கழுத்தியர், மாலையையணிந்த கழுத்தையுடையவர். முத்துப்பிறக்குங் கண்டத்தையுடையவர் என்பது மற்றொருபொருள். உயர்குடிக்கற்புடைய மடவார்கண்டத்தில் முத்துப் பிறக்குமென்பது மரபு. சுவாமி மயில்வரைவேங்கை யெண்ணி. என்றது மயில்வரையிலுள்ள சாமியாகிய வேங்கைமலருங் காலத்தைக்கருதி என்றபடி. பறையறை போது - உற்சவகாலமென்றபடி. பரிப்பது - தரித்துக்கொள்வது குமாரக்கடவுள் வேங்கையானது வள்ளி நாயகிதினைப்புனங்காத்த போதுஎன்க.

(கசரு) என்மாலை - என்னுசையை. மின் - மின்னுகின்ற. கையணியீதல்விரும்பின் - யான் மோதிரத்தைக்கொடுக்க விரும்பின், பொன் மாலை வேண்டிலர் - பொன்னலாகிய மாலையை விரும்பியணியாதவர். முத்திரையாழி பொறுப்பதின்றே - (எவருமறிந்து கொள்ளத்தக்க) முத்திரை மோதிரத்தையணிந்து கொள்வதில்லையே என்றவாறு. திருமாலை வழி

படாதவர் சக்கரமுத்தி பாதானத்தைத்தாங்கு வதில்லை என்பது மற்றொருபொருள்.

(கசசு) மாலையில் - மாலைக்காலத்தில். மாலைவிண்டு - ஆசைமிகுதியைச்சொல்லி. மலர்க்காலை - மலர்போலும் பாதங்களை. கொடி என்றது சேவலை. வேலை - கடல். சூரனை - சூரியனை.

(கசஎ) பொறுக்கிலர் - தாங்கிலர். கருக்கேறுஞ்சிந்தை பனங்கருக்கு மட்டை யாலாகிய குதிரைமேலேறுமனம். பெண்களைவிரும்பினுற் கபடமுள்ளமனமும் வேண்டும். என்பது மற்றொருபொருள்.

(கசஅ) தகர் ஆட்டுக்கடா. எருக்கு - எருக்கம்பூமாலை. இது சிவபெருமானுக்கும். மடலேறுவார்க்கு முரியது.

(கசகூ) கடம் பெற்றதாருகன் - மதம்பொருந்தியயானை முகத்தை யுடையதாருகாசுரன். வெற்பு - கிரவுஞ்சகிரி. படம் - தலைவியுருவுந் தீட்டியபடம்; பாம்பு. திருமாலெனப்பாவிப்பார் - இலக்குமியையனைய தலைவிபால்வைத்தவாசையாலென்று வழங்குவர். அழகிய சேஷசயனத்தில் வீற்றிருந்தால். திருமகளுந்திருமாலு மெனப்பாவனை செய்வார் என்பது மற்றொரு பொருள்.

(கருO) மயல் - காமமயக்கம். குழற் சொருகைப்போலவும். முலை நெருக்கைப் போலவும் முலைக்குழைவைசசிறிது மெழுதுவ தரிதாமென்க.

(கருக) விருப்புக் காப்பதற்கும், வெறுப்புச்சத்துரு நாசத்திற்குமென்க. குன்றம் - மேருமலை. முலை. குழைய - வளைய, குழைவாக எழுதல் - எழும்புதல், எழுதுதல்.

(கருஉ) பழயசெயல் - சஞ்சிதவினை. புதியசெயல் - ஆகாமியவினை. பயில்செயல் - பிராரத்துவவினை. வெற்பணங்கே, தழைவல்லி. என்பன விளிகள். சாதகத்தில் - பயிற்சியால். தீட்டும் - எழுதும். கொம்பு என்றது தலைவியை. சார்பு - உதவி.

(கருஙூ) ஓகை - மகிழ்ச்சி. குரும்பை முலைப்பெண் - இரதி தேவி. கரும்பனை - கரும்புவில்லையுடைய மன்மதனை. கருமையாகிய பனையை. கூடு - சரீரம், அன்றில் முதலான பறவைக்கூடு.

(கருச) கடம்பனைக் கைமுகன் - விநாயகக்கடவுள். பின்னோன் - குமாரக்கடவுள். விரும்பு இடும்பனை என்றும் விரும்பிடும் பனையென்றும் பிரித்துரைக்க. பல் பெண்ணை யணைதலை - பலபனைமடல்களாலாகிய பனைமடற் குதிரையைச் சார்தலை, பலபெண்களைப் புணர்தலை என்பது மற்றொரு பொருள். தடும் - தடுத்துவிடும். நிலைகோடல் - நிச்சயப்படுதல்.

(கருரு) வார் - கச்சு. மதக்கூத்து - மதனநாடகம். மல்லல்விளநீர் - வளப்பத்தை யுடைய விளநீர்.

(கருசு) சித்திரம் - ஆச்சரியம். மங்கைக்கு உள்நாண் உற்றது உண்டு எனக. துங்கம் - பெருமை. சங்கு - சங்கமுள்.

(கருள) ஒருமலர் என்றது கைக்லயை. பலகாய் - விளையாடற்குரிய பலகீழற்சிக்காய். பாண்டி - பத்துக்காயுள்ளவை. பசு - நான்குகாயுள்ள வை. பதினொன்கு என்றது பன்னொன் குழிஎன்றபடி. இச்சை - ஆசை. இக்கவியிற் பன்னொன்குழியாடுகிறது என்னுமொரு விளையாட்டைக்கூறி யதறிக. பன்னொன்கு குழிவிளையாடுகிறது என்பது பன்னொன் குழிவிளை யாடுகிறது என மரூஉ வாகவழங்கப்படும்.

(கருஅ) பகுதி, விகுதி. பகுதிவிகுதியென்னு மருமொழிகளின். இடைநிலை-நடுவிலுள்ளனவாகிய எழுத்து (இரண்டுகு) அதுதுவக்கு. துவக்கு - சரீரத்தில். சார் இயையும் - பொருந்தி யியைந்திருக்கும். துக்கம்- துன்பம். இல்லாதுறும் - இல்லாதிருப்பாள். சந்திவிகாரமுந்தோன்றும்- சந்திக்கின்ற காமவிகாரமுந்தோன்றும். கொக்கு - சூரனாகிய மாமரம். குருகு - கோழி. குன்றுறைவோன் - தலைவன். பதம் - சொல் வந்த னன் என்னும் பகுபதத்திற் பகுதி முதலான பகுபதவுறுப்பு ஆறுந்தோ ன்று மென்பது மற்றொருபொருள்.

(கருகூ) பாவை - தலைவி, பதுமை. கோவை செயுந்துணை - கோக் கப்படுங் கயிறு, பாங்கி. ஆட்ல் - ஆடுதல், கூடுதல். குன்றையுள்ளார் என் றது முருகக்கடவுளை. சேவை - வழிபாடு. வையம் - உலகம்.

(கசுO) நாலின் முதல் நகை என்றது எள்ளல், இளமை, பேத மை, மடம், ஆகிய நான்கனுள் முதலாவதாகிய எள்ளல் நகையை. பாங் கிநகை அமுது போலிருப்பினுந் தன்னை வருத்தலினால் ஆலமதா கினுமெ ன்றும், அப்பாங்கி கட்பார் வையிதஞ்செய்தலான் அமுதென வாக்கிய தென்றுங் கூறினன் என்க. அமுதாக்கியது விதியென்க. நகை நான் காவன - எள்ளலிளமைபேதைமை மடனென்றுள்ளப்பட நகை நான் கென்ப என்னுஞ் சூத்திரத்தாலறிக.

(கசுக)சண்பகவல்லி - மரணபரியந்தம் புருஷரைப்பார்ப் பதில்லை என்று சபதஞ்செய்து கொண்ட விசயமாநகரத்து விஜயரங்கராசன்மகள் இவ்வரலாற்றை விக்கிரமாதித்தன் நான்காவதுபதுமைக் கதையானறிக். தாழ்சொரி சிந்தாமணி - தன்பரிவாரங்களுந்தானுங் கேட்குங் கேள்வி களுக்குக் கவியால் விடைபகர்ந்து வென்றவருக்கு மாலையிடுவதாக வாக்களித்தவள். இவள்வரலாறு வீரகுமார நாடகத்தானறிக.

(கசுஉ) வெப்பும். குளிரும்என்றது கூன் பாண்டியனுக் குண்டா கிய சுரத்தையுங் குளிரையும். சமமாக்கி என்றது திருஞான சம்பந்தா வதாரமாகி விபூதி தடவிச் சமன்செய்ததை. கொப்பு - கிளை, ஒருகாத ணி. குழை - தழை, காதிலணியுந்தோடு. சுப்பிரமணியர் திருஞான சம் பந்த நாயனாராக வந்தாரென்பது பசாரக்கூற்றென்க.

(கசுங) முறி - தளிர், முறிச்சீட்டு. எழுத்து - தலையெழுத்து, கையெழுத்து : விலைப்பொருள் - கிரயத்துக்கு வாங்கிய பொருள், நடு - தவணை, நடுவெழுத்தெழுதுஞ்சாட்சி. விலைப்பொருள் என்பதற்கு வில் லைப்பொருள் என்பது மற்றொரு பொருள். வில் - தனுசு.

(கசுச) பூ - பூமி. இருதாமரை என்றது தலைவி பாதச்சுவடுகளை. மயில்மா - மயிலாகிய குதிரை. இரண்டுதாவுதின்றமரையென்பது மற் றொரு பொருள்.

(கசுரு) குயில் - மேகம், குயிற்பறவை. பலநாகம் - பலபுன்னை மரம், பல்லையுடையபாம்பு. பூழை - நாகணவாய்ப்புள், காயூருஞ்செடி. மயங்குதல் - சேர்தல் கலத்தல். சுகம் - கிளி, இன்பம். ஆவி - தடாகம். மஞ்சு - மேகம்.

(கசுசு) அனகன் - குற்றமில்லாதவன். பொன்மேனி என்றது மாந் தளிரை. அது ஆகுபெயர். பொய்யிற் சேர்ந்தபொன்மான் - பொய்ம் மான். வனமயில் - அழகுடைய மயில். புனமயில் என்றது தலைவியை. ஒருவன்வந்தது கண்டேன் எனக்கூட்டுக.

(கசுஎ) சின்னம் - குற்றம். வரையவர் - தலைவர். இனம் - குலம். இனத்தோடினஞ் சேருமென்குதலெண்ணிலை என்றது அவர் குலத் திற்கும் என்குலத்திற்கும் இயைபில்லையே என்றபடி.

(கசுஅ) கால் - காற்று. ஆலும் - அசையும். கதிர் - சூரியன். ஒரு வர் என்றது தலைவரை. மால் - காமமயக்கம். பால் - பக்கம். குறிப் பறிவுறுத்தலாற் கண்வேலைக்கூறினார்.

(கசுகூ) பொன்னை மறைப்பது என்றது பொருளுடையராயிருப் பதை மறைப்பது.

(கஎ0) ஆரக்குழை என்பதில் முன்சொல் ஆர். அதுஆத்தி. நடு முற்றிய சொல் அக்கு. அது சங்குமணி. பின்சொல் உழை. அதுமான். நகையாம் என்றது ஆரக்குழை- அதுமுத்துக்குழை. நகை - ஆபரணம்.

(கஎக) அல் - இரவு. இல் - மோக்ஷவீடு, வீடு. நாலெழுத்தின்குணம் என்றது பித்தன். என்றபடி. விரகம். எனினுமமையும்.

(கஎஉ) வாவி - மருதாபுரி. அனம் - பெண்ணன்னமும், ஆணன் னமும். பிரிந்தால் மாரன்கைக்காவிகொல்லும், உன்கட்காவிகாக்கும் ஆக லான் மறுப்பது தகுதியன்றென்பது கருத்து.

(கஎந) அடவி - காடு. கொடிப்போது என்றது தலைவன் சமயம் வாய்க்கப்பெறாமையால், மரங்களிலும், செடிகளிலும், போகட்டு வைத்த கொடிப்பூக்களாலாகிய மாலைகளை. புடவி - பூமி. புனற்போது என்றது காடெல்லாந் தேடியலைந்த தலைவனுடைய தாமரைமலர்போன்ற பாதச் சுவடுகளை. பனை - மடன்மா, பனைமரம். படர் - துன்பம். புன்றொழில் பாலிப்பதுண்டோவெனக்கூட்டுக.

(கஎச) கலைமான் - ஆண்மான், கலைஞானங்களையுடையதலைவன். கண்ணுனவலை - கண்களையுடையவலை; கண்ணுகியவலை. புனம் - காடு. தரம் - தகுதி. தனம் - முலை. மூன்றட்சரவாசம் - புழுகு. அது புனுகு, பொய். தனத்திலணிந்துகொள்ளும் வாசனையை நாவிற் பூசிக்கொள்ளு வது தகுதியற்றதென்பது கருத்து.

(கஎரு) கவர்பொருள் - இரண்டுபொருள். மலைமான் என்றது வள்ளிநாயகியை. சிலைமான் என்றது தலைவனை. இரண்டுதொழில் என் றது படமெழுதல், மடலேறுதற்றொழில்களை. ஆண்யானை பெண்யானை யைப் பிரியாதகாவென்றதனற்றுனுந் தலைவனைப் பிரியாதிருக்கவேண்டு மென்பதுள்ளுறை.

(௧௭௬) காமன் - இந்திரன். இன்பப்புள் என்றது இன்பத்தைத் தருந்தலைவனை. மநப்பூசை - மன்மதன்பூசை. நீகண்ணிகொள்ளநான் புள்ளைக்கொண்டேனென்பது மற்றொரு பொருள், பத்திரம் - தழை.

(௧௭௭) துவி - இறகு மஞ்சரி-மாலை.அல்லது தளிர். கோவைவிண்டாள் - மகளிர் சேர்க்கையினின்று நீங்கினாள். வாய்திறந்தாள் என்பதுமாம். உலாவும் - உலாத்தலும் எவ்வண்ணமும் - எவ்வகையான அழகும். எவ்விதமும். கூட - சேர. பிள்ளைப்பாவை விண்டாள் - பிள்ளைவடிவாகிய மரப்பாவையை யெறிந்துவிட்டாள் சகிவிடுதூதும்பகர்ந்தனள் - என்னைவருமாறுஞ்சொன்னாள் என்றவாறு. இதில் காவியம். கண்ணி. மஞ்சரி, கோவை, பிள்ளைப்பா. தூது, என்னும் பிரபந்தப்பெயர்கள் வருமாறுணர்க.

(௧௭௮) காலாயுதம் - கோழி. ஐயாமையிலான் - நித்தியமாயுள்ளவன். சாயலானது மயிலாகிச, சொல்லானது கிளியாகி, யிடையானது கொடியாகிச, குழலானது காவாகும் புனமென்க.

(௧௭௯) அடியசுனை என்றது இறைவனை. மதமாவிளம்பிடி என்றது முன்றலைவிகூறிய குறிப்புரை. ௧௭௫-ம் பாடலானறிக. ஆறுதாமரை என்பது ஆறுமுகங்களையுடைய குமாரக்கடவுளையும், ஆறுவகையாகிய தாமரைகளையும் என்க. அறுவகையான கண்ணிரண்டு, முகமொன்று. கையிரண்டு, வாயொன்று என்க. பாவர் - தலைவர், பாரிலுள்ளவர். அர்ச்சித்தலாவது கடவுள் பாதங்களை யர்ச்சித்தலும், தலைவியாதங்களை நடந்து வந்தசால் நோவுற்றதென்று கண்முதலிய வற்றி லொற்றிப்பாராட்டுதலுமாம்.

(௧௮௦) அலை - கடல். ஆறாறல்கொள்வோன் - மன்மதன். சிலை - கரும்பு. அஞ்சம்பு - புட்பவகை.

(௧௮௧) அரைமனை - அல்குல். வேலைவிடோ - வேலைவிடவோ? மதியாலம்புயம் - தலைவிமுகத்தாற்றலைவன்முகம். மலர்த்தோ - மலரச செய்யவோ. மின்னிருள் என்றது பூவுள்ள கூந்தல்

(௧௮௨) அகம்பிர்ம்மமேயென்று-நான்பிரமமேயென்று. அதுவாதல் போல - அப்பிரமத்தோடபேதமாயப் பிரமமேயாதல் போல. நானவளெனலால் அவள் தன்னுருத்தோற்றினன் என்க. உருத்தோற்றினன் என்றது மஞ்சள். மை. பாக்குச்சிவப்பு. வளைச்சுவடு, தாடனக்குறி. செம்பஞ்சுசசுவடு, பற்குறி, பூசுவன. இன்பம். தொய்யில். பவளம் முத்துமாலை, பதக்கம். முதலியவவயவச்சுவடுகளையென்க.

(௧௮௩) கையாற் சிலம்பு வளைத்தல் என்றது மேருவை வில்லாக வளைத்ததை. காலாற் சிலம்பு வளைத்தல் என்றது நூபுரங்கணெளிந்திருத்தலை. தெறித்தல் - பாணமெய்தல், கூடலாலுடம்புபூரித்துச் சிலம்பு ஒடிதல். முப்புரம் - திரிபுரம், மூன்றுடம்பு. மூவர் - சுதன்மன், சுசீலன், சுபுத்தி. விசுவன், தைசதன், பிராஞன் என்பாருமுளர்.

(௧௮௪) பழுதுகொண்ட ஆயம் - சொற்கேட்டாளுகிய சூது, ஆயம்-பாங்கியர் கூட்டம். பழுது - குற்றம். எழுதிய சித்திரமென்றது மடலூர்தற்கெழுதியதலைவி படத்தை. இது மடலூருங் குறிப்பு. உருஎன்றது அவயவச்சுவடுகளை.

(கஅரு) வெளிப்படை.

(கஅசு) ஆறுகால் கொண்டயானை என்றது யானை வீண்டாகிய கூந்தலை. வேங்கை என்றது வேங்கைப் புட்பங்களை. நாலாறு - முத்துவிருபத்து நான்கு. காலாறு மூன்றுபாங்கு என்றது மூன்று இருகால் என்றபடி அவை: இருகால் - அரை. அது இடை. துவண்டது. இருகால் - இரண்டுபாதம் அவைகன்றியன. ஒருபங்கு வீச என்றமையான். இருகால் - பெருங்காற்று. இருங்கால் - இருகால் என நின்றது. மால்ஆறு - மயக்கம் நீங்கு மால் ஆறு என்றமையான் இருகால் என்பதில் இருந்து மயக்க நீங்குவாய், காற்று வீசவருவாயாக. எனினுமாம்.

(கஅஎ) அன்றில் பேடையை நீ காத்துறைவா என்பதுள்ளுறை. மாதை - மாதர்களை. முத்தேவர் - திரிமூர்த்திகள். அடையலன் - சூரன். வடு - மாங்காய், குற்றம். நடுத்துணிதல் - நடுத்துண்டுபடுதல். நூழ்யம் வேறுபடல். குருகு - சேவல். வளை. பிணிமுகம் - மயில், நோயுற்றமுகம்.

(கஅஅ) புயமுமுத்தாமுமென்றது எதிர் நிரனிறை. முறையுறாத்தல் - நாள்வரையறைகூறல்.

(கஅகூ) மூன்று - கிளைமா. இரண்டு - தேன். எழுந்து ஒரு நான்கு - மான்றசை இரண்டு - நெய். அஞ்செழுத்து - கிளைநச்சோறு. தேன்றசை - தேனிற்சமைத்த கறி.

(ககூ0) அஞ்செழுத்து - நகங்குறி. மூழ்முழுத்து பவளத்தை மூங்கிற்குள் வைப்பது உட்டிலுள்ள பற்குறியைப்பல்லான் மறைப்பது. சிவந்த வையுமெய் - கலவியாற்று வண்டு சிவந்தவுடம்பு. சாந்தம் - சந்தனக்குழம்பு. மாலை - மாலைக்காலம்.

(ககூக) குறிஞ்சிமலர்மாலையேனும் - குறிஞ்சி நிலத்தில் விரிந்த மாலைக்காலமானாலும். நீ முல்லை மாலை யென்றோதுவன் - நீ முல்லை நிலத்துக்குரிய மாலைக்கால மென்று சொல்வேன். என்றவாறு. நீ குறிஞ்சி மாலையானாலும் முல்லை மாலையென்பேன் என்பது மற்றொரு பொருள்

(ககூஉ) மதிபானு வென்றோதியது என்றது முன்றலைவன் பிரிந்து வருவேனென்றபோது தலைவி இரவிலும் பகலிலுஞ் சந்திர சூரியர் போலத்தவறாமல் வரசொன்னதை என்க. இவை 29, 30. ஆம் பாடல்களானறிக.

(ககூங) புள்ளினையும், வண்டு தேனையும் கண்டவிடத்திற்றங்கிவிடும். சகோரமென்றது சகோரப்புள் நிலாவ முறையன்றி வேறொன்றை யுண்ணாதவாறு போலுன்னையன்றிப்பிறிதின்ப நைச் தலைவன் கருதான என்றபடி அன்றிற்பெடை நீகர்வாயென்றது அது பிரிந்தால் வேறொன்றைச் சேராதவாறு போனீயுந்தலைவியை மணந்துறைவாயென்பது துள்ளுறையவமம்

(ககூச) உழையிருந்தோர் என்றது பாங்கிமாரை. விண்டிருந்தாலும் - மனம் வேறுபட்டிருந்தாலும். வண்டல் - மகளிர் விளையாட்டு. நாலில் ஒன்று - அந்தக்கரணம் நான்கனுள் ஒன்றாகிய பாங்கியர் மனம். செப்பற்ற முற்றவர்போலுரைப்பார் மனந்தேர்கிலமே. என்பது இங்கே நோக்கத்தக்கது துறைசைக்கோவை. 165.

(கக௫) சேரிற்குவிதல் - இறைவனைக்கும்பிடுதல். சேராவிடிற்குவிதல் - தெய்வந்தொழுதல்.

(கக௬) பெருமான் - பெரியமான், தலைவன். சாரி - கிளி, உலா. பிள்ளையாக்கி என்றது பாங்கிமாரைவிட்டு நீங்காதிருக்கச்செய்தலை. கள்ளனுக்குதல் - தண்டனைசெய்தல்.

(கக௭) தாமரைமேல் விழும் வண்டு என்றது தலைவி முகத்தாமரையிற்றலை வன்கண் வண்டு விழுதலை - செவ்வல்லியிற்றாமரை - தலைவியதரத்திற்றலை வன்வாய்சார்தல். மாமலை - பெரிய முலை. பைந்தாருவை நீங்கில பூங்கொடியே என்றது நாமப்படியில்லையே என்னுங்குறிப்பு.

(கக௮) பூவேந்தன் - பிரமன். பவனி - உலாப்போதல். செழுமாப் பலவூர் - அழகிய குதிரைகள் பலவாகப்பூட்டிய சந்தனம் - தேர், மா, பலா, ஆர், சந்தனம், புன்னை, என்பனமற்றொரு பொருள். ஆர் - ஆத்தி.

(கக௯) மானும். கலையும். கிளியும், கடிவாரின்மையால் முயன்று வருமென்க. குன்றக்குடியான் என்றது முருகக்கடவுளை. மூன் என்றது வள்ளி நாயகி தினைப்புனங்காத்தகாலத்ததை. மறவர் - வள்ளி நாயகி தமையன்மார். புலிநாமம் - வேங்கைமரம். இது பூத்தாற்றினைக்கதிர் கொய்வார். வழிகூடல் போலுங் குன்றக்குடி என்றது இரண்டாவது மதுரை போலுங் குன்றக்குடி என்றபடி. இங்ஙனங்கூறியது உக்கிரப்பெருவழுதியாகியகுமாரக்கடவுள்வீற்றிருந்தலாலென்க. வழி-இரண்டாவதுஎன்பது.

(உ00) எள்ளி - இகழ்ந்து. மறந்து எகினும் எனக்கூட்டுக.

(உ0க) தைவரல் - தடவுதல். மவ்வரிஆதி - ம. மெல்லினத்து ஆறு - ன். (மன்) மன் - தலைவன். சவ்வரி கவ்வரி மூன்று - சிகி. சிகி-மயில்.

(உ0உ) மாரன் பரிப்பேர் - கிளி. மணப்பேர் - கடி. கணைப்பேர் - கோல்- (கிளிகடிகோல்) ஒருபுல் - தினை. ஒளி - கடி. மால்எதி - பெரிய வரிவாள். (தினைகடியரிவாள்) ஐயர் - தமையன்மார். வீரப்புயன் - வீரவாகுதேவர். பங்கயம் என்றது தலை விபாதங்களை. கிரியில் நடப்பதில்லையினிமேலென்பது குறிப்பு.

(உ0௩) துவளும் - சூழ்ந்துதிரியும். தண்டலை - சோலை. இருகோங்குமுத்தம் - முலைகளினிடத்துக் கண்ணீர் விழுவது. கண்டகண் பேராதது வேட்கைக்குறிப்பு.

(உ0௪) இல்வரையிகந்தது என்னுஞ் சொற்கள் செய்யுளிற் கரந்து நிற்கின்றன. இல்வரையிகந்த குறி என்பது பகற்குறியை. வீடு - இல். மலை - வரை. இம்பர் - இகம். மெய்ப்பதந்து ஒன்றில் என்றது இல்வரையிகத்தலில் என்றபடி. இகத்தல் - கடந்துபோதல். விட்சேபம் - கலக்கம். இல்வரையிகவாதகுறி என்றது இரவுக்குறியை. அரிப்புனம் - தினைப்புனம். தலை வன்றேடலிறைவியை. பறவை தேடல் தினைக்கதிரை பன்னிருகையன் போர்தேடினம் என்க. பன்னிருகையன் றேடியது வள்ளி நாயகியை என்றபடி.

உ0௫. கேகயம் - மயில். பாரா - காவல். வேதன் - பிரமன். மந்தி - வண்டு. வேங்கை - வேங்கைமரம். வண்டு சரிக்கிர வேங்கை

யிற் புட்பமிராது. சரியா வேங்கை எனவே வேங்கை மலர்ந்தமை யாற்றினைக் கதிரையறுத்துவிட்டார்கள்; யாங்காவலிங்கிறோம் நீவிராற்க என்பதாயிற்று. ஆவயின் - அவ்விடம்.

(உ0சு) அண்ணு வருகவென்றது விநாயகனை யானைவடிவாக வரக் கூவியதை. கடத்தினை - தினைப்புனத்தை. கடத்தினை - நீக்கினை.

(உ0எ) பட்சி - கிளி. இன நீரதனல் - குலத்திற்பிறந்த குணமுடையதனல். நிலைத்தாள் - நிலைபெற்றதினைத்தாள். வீரகவர் - கவர்வீரர். கிள்ளையே - கிளியே. பொன் தனக்கிள்ளைமறந்தார் என்க. மருப் பட்டுங்கிளி காத்திருந்துயிர் வைப்பவிற்று. இது பாரதம் அநுசாசநிகபருவம் 87-ம் பக்கத்திலுள்ள கிளிக்கதையானறிக.

(உ0அ) குருகுஇனம் - பறவைக்கூட்டம். வரின் - இரைவர வந்தால். திவண்டு - சூழ்ந்து, வாடி. இனமே - உறுதியாக. சொல்லுய - சொல்லுக. ஒருமைபன்மைமயக்கம். அரும்பு ஒருவு அர் அலரே - அரும்பின்றன்மை நீங்கிய மலர்ந்த பூவே. பழியலர் - பழியாகியவலர் மொழி. அலர் ஆகுபெயர். வந்து - யாங்கள் வந்து. பொருமல்-துன்பமுற்றழுங்கல்.

(உ0கூ) ஆடல் - கூடுதல். ஆடுதல். ஆடல்கொண்ட மயில் என்றது தலைவியை. சந்திராங்கம் என்றது தலைவிமுகம், கண்ணுதடிபோலுள்ள கலாபத்தின் கண்களை. வாசம் - வாசனை. சிறகு. அரவம் - ஒல்குதல். அந்த மயில் கௌவிய பாம்பு. குயில் - மேகம், பாங்கி.

(உக0) எண்ணியகாரியம் - பிரியாமை. இன்னல் - பாவம். தலைவியைக் காணாமையாற்கண்ணெரி மழுங்கினமையாற் கண்களிருண்டு நாற்கல்லே வோசகளச்சந்திரைக் காணவேனென்றேன் என்க. சகளச்சந்திரன் என்றது கூடியிருந்த தலைவியை. சகளரூபங்கொண்ட வருட்சந்திரனென்பது மற்றொருபொருள். சகளம் - அவயவத்தோடு கூடியது.

(உகக) ஆறு - நதியாக. அன்பு இல்லவருக்கு அடிப்பேறு ஊறாது. ஊறாது - கிட்டாது. ஆறு - வழியெனினுமாம்.

(உகஉ) மாமான் - இலக்குமிபோலுந்தலைவி. மலர்மனை - தாமரை மலரணையவீடு. பூ - பூமி.

(உகங) நம்விரும்பார் என்றது நற்குரு முதலியோரை. சாந்தம் - சந்தனமரம். போதரல் - வருதல்.

(உகச) அடையக்குறிக்கின் - விடாமலொருங்கே யெழுதினல். கொலைச்செந்து - முதலை. இடை - நடு. தலை - முதல். அடிக்கு ஒன்று - அடிவைப்பு ஒன்றுக்கு ஒன்று. பணி - ஆபரணம். அது பாம்பு.

(உகரு) ஆறு - வழி. வண்மீன் - முதலை திருமால் ஆழி - தலைவியாற் கொண்ட வாசைக்கடல்; திருமால் சக்கரம். பெண் என்றது தலைவியை.

(உகசு) மாயப்புரிந்தவன் - வீரவாகுதேவர். அசி-வாள். மருவலர் - வாசனையுள்ள புட்பம், பகைவர். குழையார் - தரு, மகளிர். நம்பினவனை விரும்பியமலையை, நம்பப்பட்டவனை.

(உகஎ) அறியாரைப்போன்று குறியாதுரைக்கின்றவத்துறை என்பதுமேல் 16ஂ-ம் பாடலே. குறியாதுரைத்தல் - ஒன்றை விட்டொன்று கூறுதல். பூஞ்செறிவு - சோலே. உங்கள்போன்று என்பது புட்பங்கட்கிடமாதலால் என்க. உம்மைத்தந்த செழுஞ்சுனே என்றது நீரிற்கை கொடுத்தெடுத்ததனாற்கற்புடைத்தாய்ச் சேர்ந்த குறிப்பு.

(உகஅ) ஆயாதவர் - மெய்ந் நூலுணர்ச்சியில்லாதவர். காயாத மா - யானே. பூவாதமா- அத்தி. பாயாதவேங்கை - வேங்கை மரம். அழித்து - அழித்தலால் எனவெச்சத்திரிபாகக்கொள்க.

(உககூ) சங்கை - ஐயம். புகழ்ந்தாரைப்புங்கவரில் வைப்பன் என்க புங்கவர் - தேவர். விரைவு - வேகம். கொங்கை என்றது முலேபோலும் யானையை. நாடி - விரும்பி. இடை என்றது இடைபோலுஞ் சிங்கத்தினை. மலர் சூடுங்கூந்தல் என்றது தாரகாகணங்களேயுடைய இருளில் என்றபடி.

(உஉ0) கானவர் - வேடர். படைச்செல்வர் - ஆயுதச்செல்வமுடையவர். மயில்வரைமேற் கந்தனேயே தொழவானவர்மங்கையர் செல்வர்களே எனக்கொண்டு கூட்டுக. செல்வர்கள் - வருவார்கள். எங்குஞ்சரம் - எவ்விடங்களிலுமிருகங்களே யெய்யும் அம்பு. குஞ்சரம் - யானே ஆனில் வரும் அம்புலி - இடபத்தைப்பாயும் அழகிய புலி. இனி எழும் அம்புலி யென்றதனுன் முன்னிருட்டுள்ள தென்பது கருத்து.

(உஉக) வல்வினைச்செய்பவர் - வலிய தொழிலேப்புரியுஞ்சூரன் முதலானவர். அறிவு - ஞானம். திருமுகங்கூடப்பெறுஞ் சிவன் என்றது ஐந்துமுகத்தோடு அதோமுகமுங்கூடிய சிவனுகியவாறுமுகக்கடவுள் என்றவாறு. இரவினுக்கு - இராத்திரிக்கு, யாசகர்க்குக் கொடுத்தற்கு. ஏழை - தலேவி, எளியவர், ஏழையாகிய வெனக்கிரங்கினவர் என்றதனுல் வரச்சொன்னதாயிற்று. ஆறுமுகம் என்றது ஐந்துமுகத்தோடதோமுகமும் எனக் கந்தர்கலி வெண்பாவிற் கூறுதல் காண்க.

(உஉஉ) ஒருவிரல் காட்டி என்பது ஒற்றையாய் என்னுங்குறிப்பு. குழல் காட்டி என்பது சோலேயிடத்தில் என்றவாறு. கைகுவித்தோங்கி என்பது வேலாயுதத்தையும் வைத்துக்கொண்டு என்றபடி. கைநெறி வைத்தது படுத்திருக்கச்சொல்லுக என்னுங்குறிப்பு. அன்னங்காட்டியது சோறுகொண்டுபோய்ப்போடு என்றபடி. மூக்கில் ஒருவிரல் வைத்தது ஒருவருமறியாமற் சண்பகமரத்தடியிற் கூட்டிவந்து வையென்றபடி. இருவிரல் காட்டியது இரண்டுநாழிகை யிருக்கட்டும் என்னுங்குறிப்பு. ஒருவிழிமூடல் என்றது தாய் தூங்கட்டும் என்றவாறு. ஒருவிழிமூடாததனுற்றான் விழித்திருப்பதாயிற்று. நெறி - கன்னத்தின் மேற்பக்கம்.

(உஉங) தும்பி - வண்டு, யானேபோலுந்தலேவன். உமைமிகவென்பார்கள் எனக்கூட்டுக. அமுதமது - அமுதம்போலுந்தேன், அமுதமாகிய வச்சோறு. பூமெத்தை - பூவாகிய மெத்தை, பூரியாகியமெத்தை.

(உஉச) நற்றுய் - பெற்றதாய். துஞ்சினள் - தூங்கினள். மேழியர். வேளாளர். மாலே - கருங்குவளே.

(உஉரு) சிலம்பை மடியிற் றுங்குதல் ஒலியாமலிருக்கும் பொருட்டு என்க. கோலேப்பெண்ணைக்குதல் படித்திருக்கிற பாவனே செய்தற்கு என்க. சூலி - சிவபெருமான்.

(உஉசு) கற்பூர மோர்பங்கு வைத்தளித்தீர் என்னவே ஆண்பிள்ளைக்குக் கற்பூரமிரண்டு பங்கு என்பதாயிற்று. நம் சாதி - நமது சண்பகமும், நமது சுற்றத்தார். மிறைசொல்வதார் என்றது (அச்சரிதியைச் சார்ந்தாற்) குற்றஞ் சொல்பவர் யாவர் என்றபடி. போற்றலைவிருப்பார் என்பது குறிப்பு. மருவலரைத்தலைச்சாய்ப்பன் என்றது வாசனையுள்ள மலர்களைக் கொய்து வருவேன் என்றவாறு. பகைவரைத்தலை கவிழச்செய்வேனென்பது மற்றொருபொருள். பழுக்காயிலையிது என்றது சண்பக மரத்தடியிலிருக்குந்தலைவர் கொடுத்ததென்று சுட்டிக்காட்டியதாயிற்று. பழுக்காயிலை - பாக்கு வெற்றிலை.

(உஉஎ) விடியா விடின் அல்லவோ முசமாமதிமேன்கள் என்றது பகற்குறியில்லையென்று முகம் வாடும் மென்பது குறித்தென்க.

(உஉஅ) சாதி சஞ்சாளிகஞாயம் என்றது சண்பகமலரிற்றேனுணச்செல்லும் வண்டுகளிறந்து படுமுறைபோல எம்மூருக்கு வந்தால் யானை, கரடி, புலி, சிங்கம், பாம்பு, முதலை, முதலியவற்றாலுங் கானவராலும் பிழைப்பதில்லை என்றவாறு. சஞ்சாளிகபுட்பஞாயத்தின் மேவினிர் என்பது காத்திருந்த தவளையுண்ணுமற் றூரத்துவண்டுவந்து தாமரைமலர்த்தேனையுண்பதுபோலச் சுற்றத்துத்தலைவிருக்க நீவந்து மேவினீர் என்றபடி. உற்றவர் - அடையப்பெற்றவர்.

(உஉகூ) கன்னி - துர்க்கை. வாகனம் - இடை. அரிபாயல் - பாம்பு. பாற்கடல் சேர்விடை என்றது திருமாலாகிய காளையை. செற்றம் - கோபம்.

(உகூ0) மறையாதீமின், வாடாக்கொடி, ஒவ்வைபுணவிற்குறையா வமுதம் எனும் நீ என்க. ஒவ்வை - கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல். நான் நளனே. ஆனாலும் உன்னுடன் பகற்காலத்திலும் பிரியாதிருக்கும்படி அந்நளனைப்போலுருத்தெரியாத மந்திரத்தைக் கற்றதில்லை என்றபடி. கொல், ஒ. அசைநிலை பகலும் பிரியாமலிங்கெவர்க்குந் தெரியாவிஞ்சை பெற்றிலமே. என்றார் பிறரும்.

(உகூக) மேலையடையலர் முன் என்றது மேன்மையையடைந்த அலர்போலும் பாதங்களினிடமாகி என்றவாறு. முற்காலத்துத்திரிபுரத்திலுள்ள சத்துருக்கள் முன் என்பது மற்றொரு பொருள். கலகலவென்பதனுல் - கார்சிலம்புகலந்துகொள் கலந்துகொள்என்று கூறுவதனுல். சிவன் கைச்சிலம்பு நேரல்ல வென்றது அங்ஙனங்கலகலகவென்னுமையால் என்க.

(உகூஉ) இன்னுமை - துன்பம். இரவு - இராத்திரி, யாசித்தல். சிவந்தகை, கால்கள், என்பங்கயக்கண் தன்னுற் கறுத்தன என்றது வருந்தியதென்று கைகளையும், கால்களையும், தலைவி கண்ணில் வைத்துக்கொண்டமையால் அஞ்சனம் பட்டுக்கறுத்தமையென்க. இன்னுமை வேண்டினிர வெழுக என்பது நான் மணிக்கடிகையிற்காண்க. இதனைத் தன் கருத்திற்கியையப் பொருள்கொண்டு கூறினுளென்க.

(உகூகூ) முத்தாயர் என்பது செவிலித்தாய், வளர்த்ததாய், பெற்ற தாய்மார்களை என்க. பருவமிகலாற் கைத்தாயையும், முலைத்தாயையும், நீக்கினுர். வைத்தீர் கொல், இட்டீர் கொல், இட்டனிர்கொல். என்பன

பாங்கியையுமுளப்படுத்தியவிளு. செல் என்றது தலைவியை மாக்கிர நோக்கி என்க.

(உஙச) நளினம் - தாமரை. நீலம் - குவளை.

(உஙரு) பாலி - பாலூட்டுந்தாய். வேல் சிவப்பு என்றது கலவியாற் சிவந்த கண்களை. பாளிதங்கொள்நீலி - சோறூட்டுந் தாயாகிய கொடியவள். பொல்லாப்பு - தீங்கு. முன் - முன்னாளில். நிகழ்த்தல் செய்வாய் - நடப்பாயாக. காலி - ஒருவூர். கமகமப்பு - வாசனை. பாளிதம் - சோறு. ஏகாலிக்குஞ் சொற்றிடுமே என்பது மற்றொரு பொருள்.

(உஙசா) நீ சொன்னபடி மறைத்தாள் என்றது கன்னவடுவை மஞ்சமணியைச்சிவப்பாலும், அதரவடுவைப் பற்களாலும், முலைவடுவைச் சந்தனச்சேற்றாலும், மறைக்கச்சொன்னதை என்க. பல்லக்கேற்றவென்றது காலசிவத்தலாற் சகியாமற்றன்னை பறந்துரைத்தது என்க.

(உஙஎ) குற்றமுரைத்தனளே என்றது கொங்கையை வடுப்படுத்தலாலும், மார்பில் நகைகளைச் செவ்வனே யணியாமையாலும், ஆடையைநிலைகுலைந்து விடுவதாலும், தோழிகுற்றங் கூறினளென்க. வங்கம் - தோணி. நுதை - ஓசை. மயல் - ஆசை.

(உஙஅ) மலரை முடியும் என்றது பூக்கட்டிவைத்துப் பார்த்தலே. அயலவர்சொல் - விரிச்சி. அதாவது நற்சொற் கேட்பது. கொடியோனைக் குறித்தலாவது காக்கை கூப்பிடுவதை நோக்குதல். முறம் விழல்பார்க்குமென்றது முறக்குறி பார்த்தலே. தப்பு - சோர்வாகிய தவறு. உன்னூர்க்கனகதப்பு என்றது ஊர்க்குப்போனவுடன் முரசறையச்சொன்னகுறிப்பு. கனகதப்பு - பொன்னாற் செய்தபறை.

(உஙகா) இருட்காகுறுகும் - இருண்டசோலையிருக்கும். மாகுறுகும் - மிருகங்களிருக்கும். காமம் - விருப்பம், ஐ, ஓ. என்பன ஒலிக்குறிப்பு.

(உசo) விபுதர் - தேவர். காலும், சிலம்பும், இருகையும், போல் பட்சிசாலம் மலர்வனத்தே மண்ணிலுதித்தன என்பது கால்கள் போக்குவரத்தாயிரவுமுழுதுஞ் சஞ்சரிப்பது. சிலம்புவைப நடக்கினும் ஒலிப்பது அன்றி அடைந்தாரைக் காட்டிக்கொடுப்பது, கைபாங்கியைத் தட்டியெழுப்புவது ஆகிய விம்மூன்று செயலும் பட்சிக்குமுளவாதலறிக.

(உசக) இடையூறு - துன்பம். சூறை - சுழற்காற்று, படுத்து - சாய்க்க. அறுபொறிக்கொண்ட காற்று என்றது சூட்சுமாவதாரவக்கினிப் பொறியாகிய் வாறையுஞ் சரவணப்பொய்கையிலிட்டவாயுதேவனென்க. ஐம்பொறி என்றது சுரோத்திராதியொற்றுமைபற்றிய மனமருட்சியை. காற்றாற் புள்ளெழும்பிய தைத்தலைவனுணிகழ்ந்ததென்று மருண்டேனென்பது கருத்து.

(உசஉ) கல்லைக்காட்டல் - அவனென்றிருளிற் காட்டல். கால்வயிறு என்றது உண்ணுவருத்தம் என்க. நன்றி என் அன்றியும் எனப்பிரிக்க. புன்னைமேற்பாம்பு என்றது தூங்கிய பாம்பைத்தலைவன்வலத்தமாலையென்றெடுத்ததை, என்க. தன்மெய் என்றது குமாரக்கடவுள் குழந்தை வடிவத்தை.

(உசங) சரம்போல் நிலையர் என்றது நினைத்த குறியிற்றைக்கும் பாணம் போலுமனநிலையுடைய பெரியோரை என்க. குரங்கானேனச் சொன்னதைக் கைவல்லியத்திற்காண்க. தலைவிவயவங்களைவன முதலிய விவைகளிற் குறித்திருந்துங் காணவில்லை என்பது கருத்து. அன்றிவன மெல்லாமோடிப்பார்த்துங் கண்டிலேனென்றுனெனிறுமமையும். பரந்து - பரவி. நிரந்து - கலந்து. கூந்தல் - கூந்தற்பனை. அதுன்சாங்கூந் தற்குவமானம். தென்னை - தனம். வாழை - துடை. மா - மேனியும், கண்ணும். கமுகு - கழுத்து.

(உசச) புன்னையிற்றலைவன் வந்து வைத்திருக்கின்றபங்கைதயிலங்க ணையாற் காய்த்ததென்றார். எனையவுமன்ன. பேசாக்கிளி - ஒப்பனைக் கிளிகாட்டிப்படுத்தாததால் கண்ணையிகழ்ந்தாள் என்க.

(உசரு) உன்னைத்துணைபிரிந்தவன்றிலென்பார்கள், தாய்விஷபா னம் பண்ணுவாள்; எனவே யெல்லைதப்புவேன் வந்தது மாட்டேன் என் பது கருத்தாயிற்று. தனிமெய்ப்பொருள் அமுது என்பது சிவபெருமா னுண்டவிடம் என்க.

(உசசு) கண்டேன் பலமின் என்றது இரவில் மேல்வீட்டிலிருந்து பாங்கி புன்னையங்கானத்திற் றலைவனிடசாரி வலசாரியாகச் சுற்றும் போதுண்டாகிய கத்தியிஜொளிகளை என்க. குறிவிடுந்து தேறவை என் றது தலைவனடிச்சுவடுகளைக் கண்டு தெளிவாய் என்றவாறு. ஒ இரக்கக் குறிப்பு.

(உசஎ) தென்னைமடல் கமுகங்காய் தருமோ வெனவே வெற்றிலை பாக்குத்தலைவி வைத்ததாயிற்று. ஆய்ந்து தென்னை என்றது தலைவன் முன்னாராய்ந்து பார்த்ததென்னை என்றபடி. வந்தறிந்தும் வாராதது போற் கூறுவது மடந்தையர்க்குச் சுபாவம். கண்ணிலேயல் யாருமிலுந் துணையாய்வருவேன் என்பது பரியாசம்.

(உசஅ) பொருளின்மட்டு - பொருளினளவை. பட்டினரியில்லை என்றது பாங்கி தலைவன் நீங்கெடுத் தியம்பற்றுறையில் உசஉ-வது காவ் வயிர்றுக்கூட்ட வைத்தார் என்றமையால் எளியேன் கருதாவிடத்திற் பசி த்திருத்தலில்லை என்றவாறு. பாலெண்ணம் என்றது விடிந்தபின் பார் க்கவருதலை. கட்டிலும் மெத்தையுமில்லை என்றது கட்டிலிற் பஞ்சணை யிற் படுத்திருக்கிறபேர் வரக்கூடுமோ என்றவாறு. எளியேன் என்பது பெருமித ரசம்.

(உசகூ) கேணியோசை தலைவன் பழமுதிர்த்தல்; விண்ணென்றது கம்பு வீச்சு. கூபவோசை என்றது கிணற்றில் கல்லெறிதலை. இவற்றி ற்குமறுதலை கேணியில் மீன் அடித்தது, ஆகாயத்திற் பக்ஷி வேகமாய்ப் பறந்தது, கேணியிற் றென்னை நெற்று விழுந்தது; என்க. அல் - இரவு குமுக்கு - தொமுக்கு, என்பன ஒலிக்குறிப்பு.

(உருo) கின்னரிவீணையின் ஆவதின்றே சிங்கம் கெர்ச்சிக்கின் என்றது யான்செய்த சிங்கநாதம் கின்னரி வீணையி னிசையைப்போற் கேளாதுபோலும் என்றபடி. புன்னை அரும்புமுற்றத்து அசைத்தேனெ ன்றது வந்ததற்கடையாளங் கூறியவாறு. அன்னம் - அன்னப் பறவை, தலைவி. இனிப்புகன்று என்.

(உருக) மிடா - ஆளைப்போலுயர்ந்த வொருசெடி. மயில் ஓங்கலர் என்றது தோகைமலையிலுள்ளவராகிய தலைவரை.

(உருஉ) பரிபத்து - பாய். ஆபத்து - ஆய். பத்தாவது எண்யகரம் மாறல்காண்க. பாய் - பாயல். ஆய் - தாய். ஆபத்தைநோக்கிப் பயந்தனன் என்பது மற்றொரு பொருள்.

(உருங) பாசி - நாய். நீர் - காமவின்பம். நீர்ப்பாசியை விலக்கியிந்த நீரைக்குடிக்கவல்லார் யாவர்? என்பது மற்றொரு பொருள்.

(உருச) உயிர் வரிச்சட்டத்திலாறு என்றது ஊ. இடையில் இரண்டு என்றது ர். (ஊர்) என்றபடி. தவிப்பு - உறங்காதிருத்தல்.

(உருரு) தனியான சோலைப்பேர் - கா. பூப்பெயர் - அலர். இரண்டுங்கூடிற் (காவலர்) என்றபடி.

(உருசு) பஞ்சு - பஞ்சை. குபேரன் - சந்திரன், தனதன். தூங்குவார் - நித்திரைசெய்வார் மற்றொரு பொருள் தாழ்ந்திருப்பார், சோம்பியிருப்பார் என்றுமாம்.

(உருஎ) ககரத்திரண்டினில் - காவில். ஆறு - கூ. ஒன்பது - கை (கூகை) பதினொன்று கோ. கோ - அரசன்.

(உருஅ) ஒருசாதி - கோழி. அஞ்சு சாதியுடன் கலந்து - வல்லூறு, ஆந்தை, காக்கை, மயில் என்னு மிவைகளோடு அஞ்சு சாதியென்னும்படி கலந்து ஊண் முதன்மாறுதலாவது ஊண், நடை, அரசு, நித்திரை, மரணம் ஆகியவிவ்வைந்து தொழிலு மொருநாளிற் பஞ்சுச் சாமத்தில் மாறி வருவது. மூடமனமாவது முறைதப்பிய சேர்க்கையும், காரணமில்லாத யுத்தமும். பறையடித்தல்-சிறகடித்துக் கூவுதல், அருகிலுள்ள மனையிலே பறையாகிய வாத்தியத்தைக் கொட்டினால் யாவர் வருவார் என்பது மற்றொரு பொருள்.

(உருகூ) மதி - முகம். பிறைமேற் பிறை என்றது நெற்றியிற் பூசந்திருநீற்றை என்க. கொவ்வைக்கனி - வாய். இலை - வெற்றிலை.

(உகூ0) கோவைப்பழம் - இதழ். காய் - பாக்கு. வடு - தழும்பு. உன்னைக்கிளியைப்பகர்ந்து ஒளித்தேன் என்றது பாக்குக்கொடுத்தது பாங்கியென்றும், கூறுபடுத்தியது கிளியென்றும் மறைத்துச்சொன்னேன் என்றவாறு. அம்மைத்தேவி என்றது சத்திவடிவாகிய வேலாயுதத்தை என்க. கணம் - கூட்டம்.

(உகூக) ஒருநாளும் பாதி என்றது இராத்திரியை. நாலுகூறு - நான்கு சாமம். ஒருசாமம் உண்டொழிவு. மூன்று சாமத்திலே மிடையூருவனதாய் முதற் கோழிபிறந்தியாகிய எழுமாம்.

(உகூஉ) கடை - வாயில், ஆவணம். கப்பலேற்றல் - ஆறுகடத்தல், தோணியேறுதல். சரக்குப்பை - மலர்மாலையாலாகிய மெத்தை, சரக்கையுடையபை. பொன்கொடையாளர்-தலைவர், பொன்னைக்கொடுத்து வாங்குப்வர். சரம் - மாலை.

(உகூங) கால் திரும்புகிறபோது காலிலழுந்தும் கல்லென்றார். அது மனமஞ்சலீரென்று சொன்ன சமயத்திற் சொன்னதால் மனத்து

க்கு வழையாக்கி யெடுத்துரைப்பதாயிற்று. குரும்பை - முலை. தோவாத முத்து - கண்ணீர்.

(உகூச) தேசிகன் - பிரகஸ்பதி. நீர் மீனுண்டவூா - மயேந்திரபுரி ஓர் பூத்தலைவைத்தல்-கையாகிய மலரைத் தலையிலே வைத்துறுநிகூறுதல்.

(உகூரு) மாகாயம் - பெரியவாகாயம். சேவை - இராமேச்சுரம். சொர்ணமலை - கந்தமாதனம். ஒடுங்கி என்றது அழுந்தித் தாழ்ந்தி என்றபடி. மீக்கூழுயர்ந்தவன் - வீரவாகு.

(உகூசு) குடி என்றது இராவணுதி யிராக்கதர்களை. படரவிட்டோன் என்றது இராமனை. படி - பூமி. பசலைக்கொடி - முலைமேற் பசலை. மணம்பூசியகுன்றம் - களபமணிந்த முலை.

(உகூஎ) தனு - உடம்பு, வில். நாண் - வெட்கம், நாணி. சிற்றாறு-சிறுமார்க்கம், சிறுநதி. அக்கரை - காமவெழுச்சி, அந்தக்கரை. சிற்றாறக்கரைப்பட்டதென்றது தலைமகனூர்க்குச் செலவொருப்பட்டதெனிறு மையும்.

(உகூஅ) கிளி என்பது தலைவியை. வளர்ப்போர் - தலைவர். பால்-காமவின்பமாகிய பால். தலைவர் என்றுயரமெலா மறிந்தவராகலான் யான் சொல்லவேண்டுவதில்லை யென்பது குறிப்பு.

(உகூகூ) வடு - மாவடு. குழைவாய்தல்-குழையையாராய்தல். பழம்-கோவைப்பழம். அலர் - அலராகிய பழிமொழி. வடுக்குழையானது, பழயலரானது என்பது மற்றொரு பொருள்.

(உஎ0) வரைப்பாந்தள் - மலைப்பாம்பு. செலப்பணியே - நீர்ப் பாம்பே. வரில் தீது - தலைவர் வரிற்றீங்குண்டாகும். செலப்பணி - செல்லப்பணிப்பாயாக.

(உஎக) சபை - சூரபன்மன்சபை. புளினம் - மணற்குன்று. புள் இனம் - பறவைக்கூட்டம்.

(உஎஉ) மயூரச்சிலம்பண்ணலார் என்றது குமாரக்கடவுளை. ஒரு கரி - ஒருசாக்ஷி. தாய் - தாயானவள். இருந்து ஒருநாள் துயர - யானிருந்து ஒருநாள் துயரப்பட. உரைத்த வெஞ்சொல் - சொல்லிய கொடுஞ்சொல். பரிகரி என்றதும் - பொறுத்துக்கொள்ளென்று தலைவர்சொன்னதும். அரிகரி என்றதும் சோலை, மூங்கில், கிரி, சிங்கம் முதலாயின சாக்ஷி என்றதும். மதியே - சந்திரனே. அதுமதியே - அதனைக் கருதுவாயாக. அரிகரியென்று பிரார்த்தனைசெய்தது மென்பது மற்றொரு பொருள்.

(உஎ௩) தைப்பூசத் தேரையும், அன்னதானஞ்செய்யு மிடத்தையும் பார்க்கவரலாம். வருமேல் - மற்றைப்போதில் வந்தால். எப்பூசலு முண்டு - ஆறலைக்கும் பூசல், இனைப்பூசல், புலி முதலியவற்றின் பூசல், காவலர் முதலியபூசல், தாய்பூசல், ஆகிய எல்லாப்பூசலு முண்டாகும், மைப்பூசல் என்றது தன்னைப் பிறரறியாமற் செய்யும் அஞ்சனம் பூசுதலை.

(உஎச) எவியதாயர் - இல்லிலிருக்கும்படி கட்டளையிட்ட தாய்மார்கள். குறி - எண்ணம். விலக்காகியும் என்றது தினைப்புனங்காவலுக்

குப்போகலா மென்றுரைத்தது. பாவியொருவன் - மன்மதன். குறிவி லக்காகிப் புமம்புதைத்த தென்பது மற்றொருபொருள்.

(உஎரு) பொன்னிசை மேடம் - அழகுடைய ஆட்டுக்கடா, பிரகஸ் பதிபிருக்கு மேடராசி. பூசை - பலியிடுதல், பூசித்தல். கன்னி - தலைவி, கன்னிராசி. சிங்கம் - தலைவன், சிங்கராசி.

(உஎசு) என்னையின்றைக் கிரப்பார்க்குப் புகழிசைவதுண்டோ வெனக்கொண்டு கூட்டுக. யாசிப்பவருக்குப் புகழுண்டாகாது என்பது மற்றொருபொருள். குன்று அக்குடி - குன்றிய அந்தக்குடி. குன்றுக்குடி- உயர்குடி, எனவே யுயர்குலத்துக் கற்புடையோளு கலாற்பிறர் வரைவிற் கிசையே னவர்வரவை விலக்கு என்பது கருத்து.

(உஎஎ) சொன்றிக்குழிசி- சோற்றுப்பானை. நெல்லூர் என்றது இலங்காபுரியை. காவலர் மணம் - அரசர்கலியாணம். சோலையிலுள்ள மலர் வாசனை யென்பது மற்றொருபொருள். பின் ஆவதுண்டே என் பது நீகூறினாற் கொடுக்கலாமென்று மனங்கொள்வாள் பின்றகப்பனார் முதலானோரையுஞ் சம்மதிக்கச் செய்வாள் என்றபடி.

(உஎஅ) இரவில் எப்போதருள்புரிவீர் என்றது நனவிற்சேர்க்கையி லாவது, கனவிற் புணர்ப்பிலாவதாருக. இறைவனையெப்போதுஅருள்புரி வீர் என்ற வந்தச் சொல்லைச் செவிலியிரவிலேனும், பகலிலேனும் வின வத்தலை வியானவள் கனவிற் பூப்பறிக்கின்ற மகளிரோடு கூறியதாக்கி எப்போது என்பதை எந்தப்பூவைப்பறித்து வந்து எனக்குக்கொடுப்பீர் என்று கூறினதாய் மறைத்தாளென்க. (அரும்பு - சிறுசொல். மலர் - பெருவார்த்தை; வடு - குற்றம். அரும்பு, மலர், வடு, என்பது மற்றொரு பொருள்.

(உஎகூ) வலுகணங்கள் குறியான் என்றபோதே - தமதுவலிமை யையும் தங்கூட்டமான சேனைவீரர்களையும் சூரன்றெரிந்து கீழ்ப்படிய மாட்டானென்ற வுடனே. பறவாதவன்னம் - சோறு. உண்ணாதவன்னம்- அன்னப்பறவை.

(உஅ0) கோடு -மலைச்சிகரம். தலைவிதுயர் நீக்கும் பொருட்டு அன் னையர் மத்தளதாள முழங்கப்பலியிடுவார் என்பது கருத்து- ஆடலுக்கு முன் மத்தளதாளமதிரு மென்பது மற்றொருபொருள்.

(உஅக) நீங்காத மான் - தலைவி. கொல்லாவேங்கை - பொன். எங்களில் ஊரும் உலகமும் என்படுமோவென்பது பொன்னேர்ந்தால் அந்த விறைவர்க்கும், தலைவற்கும் யுத்தம் வருமென்றும், இவ்வூரிற் பாங் கியர்முதலிய விறைவனைச்சேர்ந்தவர்கட்கும், சேராதவர்கட்கும், துக்கம் வருமென்றும், இவ்வூர் அழியினும் அழியும் என்றும், இறைவியுயிர்க்கீறு வருமென்றும், இன்னும் பலவாகவுங் கூறியவாறு. எங்காதவுங்கள் என் றது திடசித்தை நீங்காத தலைவன்றலைவியரை என்க.

(உஅஉ) மாமணச் செங்தேன் என்றது கலியாணத்துக்குரித்தான தலைவியை.

(உஅங) ஊர்கொண்டவம்புலி - பரிவேடங்கொண்ட சந்திரன். கானத்தின் மலர் ஊர்கொண்ட வம்புலி - வேங்கைமரம். எனவேயிவ்

யிரண்டு மாயினாற்குறிஞ்சி நிலத்திற் கலியாண நாளாம் என்றபடி. புலி - வேங்கை. மலர் ஊர்கொண்ட - மலர்களோடு பொருந்திய.

(உஅச) தோகை வெற்பான்றந்தை பழிக்கஞ்சியது திருவிளையாடற் புராணத்தானறிக. பாங்கியானவள் பிறரறியாமற் பகினானவார்த்தை சொல்லப் புகினும் அதைவிட்டுச் சுழிக்கின்ற சமுத்திரமுழுங்காலமென்று குறியாள் கூறலாய்ச்சொற்றதனால் இறைவன் பேரலர்க்குச் சொல்லும் பழிக்கு அஞ்சியதாயிற்று. அன்றியும் காவலெல்லாமுங் காரியம் யாவர் மணஞ்செய்யவல்லார் என்னுங்கருத்துமாயிற்று.

(உஅரு) சோகம் - அசோகமரம். அசோகம் சோகமானது தலைக்குறை. நாகத்தின் வாய்வருந்தேவாமுதம் என்றது புன்னைமரத்தினிடத்தில் வருந்தலைவியை. நாகம் - தேவருலகு.

(உஅசு) அலரென்றுபெயரே யன்றிமலரென்றுகலாரவிக்குமளவை கூறினார். அலர் - பழிமொழி. மாலையிற் சேரமென்னவே மாலைக்காலும் வரலாமென்றுமாம். மணங்காண்கிலது எனவேபகற்குருந்தாற் கலியாணத்துக்கு யோக்கிய மல்லவென்பதுமாயிற்று.

(உஅஎ) வாணன்மகள் சகிவந்திடினும் என்றது உஷைபோகித்த வநிருத்தனை யிருட்டிலே கட்டிலுடனே கொண்டு வந்த சித்திரலேகை வந்தாலும் என்றபடி. இரவினுக்கஞ்சாதுணை - இருட்டுக்குப் பயப்படாதவிறைவன். கொடுக்கிறது செலவென்று நினையாதவன் என்பதுமற்றொரு பொருள்.

(உஅஅ) எல் - பகல். கருநிறமாலை - இருட்டு. எனைப்போக விருட்டினிலும் நீவருக என்றவாறு. அரசர்கள் திருமாலையும், சூரியனையுமகலாது பூசிப்பர் என்பது மற்றொருபொருள்.

(உஅகூ) அரிமுகன் - குதிரைமுகத்தையுடைய சூரபன்மன். ஆரம் - தலைவன் மார்பிலணிந்த பதக்கம். மதி - தலைவன்முகம். பதக்கத்துமணி சூரியப்பிரகாசமாகின்ற தாலெவருங்காண்பார்களென்றெண்ணி வீட்டைவிட்டு வாராமனித்திரைபண்ணுவபாதலாற் சூரியனைக்கண்ட குவளைமலராதது போலப்பதக்கத்தைக் கதிராக்கிக்கண்ணை நீலமாக்கிக் கூறினளாயிற்று. முகமதியென்றது எல்லாருஞ்சந்திரனை யறிவதுபோலிவனை யறிவாராகையாற் சனத்திரளாம். வரிற்காரியமில்லையென்று வீட்டிலிருப்பாராகையால் மதிதாமரையைக்குவிப்பது போலிவன்முகமதி கண்டிவளைக் கூடாது வதனால் வீடுதாமரையாயிற்று.

(உகூ0) மணம் - கலியாணம், வாசனை.

(உகூக) வாரீச சந்திர ஞாயம் - குவிதல். [illegible] - வாகசிதம். இறைவன் - சூரியன். தலைவிதன்னைத்தாமரையென்பாள் மனைக்கதவை. எனவே ஊர்தூங்கும் போதும் விழித்திருப்பாரெங்கையன் மார் என்பதாயிற்று. தாராதரசாதகஞாயம் என்றது மேகத்தையே கதியாக வெண்ணி யிருக்குஞ் சாதகப்பட்சிபோலத் தலைவியுந் தலைவனைக்கதியாக நினைத்துள்ளாள் என்றவாறு.

(உகூஉ) வல்லியெழுதியதாமரை என்றது முலைகளிற் கொடிவடிவாய்ச் சந்தனக்கோல மெழுதிய கைகளை. வாரிசஞ்சேர் அல்லி - முகதாமரையிலுள்ள செவ்வாம்பலாகிய தலைவியதரம்.

(௨௩௬.) சொல்லிலங்கு என்றது வீட்டைவிட்டு வெளியே செல்லற்க். என்றபடி.

(௨௩௭) 'குழந்தையபதழ கடிபபதும வந்தாளென்னுஞ்' சொல்லைக் கிளியிடங் கேட்டு அதனை விரும்புவதும், வாழையையணைப்பதும், காமமிக்ககுறிப்பு. குருவித்தலையிற் பனங்காய்கட்டினாற்போலென்பது பழமொழி. சிறுகோட்டுப் பெரும்பழந்தூங்கியாங்கிவள் உயிர்தவச்சிறிது காமமோ பெரிதே எனக்காம மிகுதியைப் பிறருங்கூறினர். முத்தாடி - முத்தமிட்டு - கோட்டிற் பனங்காயெனக்கூட்டுக.

(௨௩௫) விழியாதிருந்தால் நீங்காதிருப்பார் என்பது கருத்து. மோகினி - திருமால்கொண்ட பெண்ணுருப்போலுந் தலைவி.

" (௨௩௯) ஈண்ணுத செய்கனி என்றது அழுகும் என்றபடி. பூதி - புழுதி. சாதி - சண்பகப்பூப் போலுமூக்கு. மேனியுமாம். முத்து - கண்ணீர்."

(௨௪௦) பிஞ்சு - மாவடு காய்-சொற்கேட்டான்காய். கனி-கோவைக்கனி. விதை - மாதளைவிதை. இவைமுறையே கண், முலை, அதரம், பல். என்பனவாம். வஞ்சிக்கொடி என்றது தலைவியை, துகிர்க்கொடி - பவளக்கொடி அது பாங்கி அஞ்செழுத்தாகிய வாறெழுந்து - மயூரகிரியாகிய குன்றக்குடி, மயூரகிரி குன்றக்குடியாதல் போலப்பஞ்சாக்கரமே சடாக்கரமென்றபடி.

(௨௪௧) அவ்வஞ்சு என்றது மயூரகிரியை. இரண்டு பழுதில்லை என்றது எங்களைப்போற் குடித்தனமும், மானமும், போகின்ற பழுதுவருவதில்லை என்றபடி இரண்டு பழுதாய்விடும் என்றது தலைவி (ஆவி) யை.

(௨௪௨) மகத்திற்குறை - யாக முதலிய வறப்புறங்காவற்குறை. முகம் - திங்கள். கனிவாய் - கொவ்வைக்கனிபோன்றவாய். இங்கு வார்த்தைக் குறித்துநின்றன. உன்முகத்துக்காகப் போய் வாய்க்குப் பயந்துவருகிறேனென்பது மற்றொரு பொருள்.

(௩௦௦) திருமான்- இலக்குமி, தலைவி. குருவாரம் - வியாழக்கிழமை. மந்தவாரம் - புன்னகை.

(௩௦௧) மலை - கல். மரம் - ஆர். நோய் - சுரம். பின்னிடவெனவே கல்லார் சுரம் என்பதாயிற்று. வருதும் எனவே காட்டுக்கயலே யூராயிற்று. கல்லார் சுரமெனவாடல் - படியாதவர் பாடல்போல வாட்டப்படுதல்.

(௩௦௨) மார்பினிற்றாமரை - மதன்கணைத்தாமரை. கோங்கினில் மாமரம் - தனத்தில் மாம்பூச்சரம். மாவில் அசோகம் - கண்ணில சோகக் கணை. எனையவிரண்டுங் கொடிய பாணமாகையாற் கூறினாரில்லை. முருவகை - துடைவகை. ஊர் உவகை - ஊரினிடத்துச் சந்தோஷம். ஆரூர் - தங்குகின்றதம் மூரென்றுந் திருவாரூரென்றும் பொருளாம்.

(௩௦௩) கலங்கலமென்றது எண்ணுப்பொருள் வரிந்து - வரிந்தசு போல்.

(௩௦௪) திருவாசு - அழகியவரசமரம். பெண்ணாசி. வையாபுரி ஒருதடாகம்.

(௩௦௫) மாவலவர் - குதிரைக்காரர். படகுடி - கூடாரம். கார்மா நிகர் உளையென்றது பார்க்குந்தோறுங் களிப்பேறலாலென்க. சிந்துரம்-முலையாகிய யானை.

(௩௦௬) என்னுக்கு மூக்குங் கொடுத்தீர் என்றது இறையவர்க்குச் செலவுரை சொற்றதனாலும், பொய்த்தும் மற்செய்ததனாலும், தலைவர்க்குத் தரவுகொடுத்தீரன்றோ வென்றும், தும்மர்படி வாராதிருந்தால் நாங்கையு மூக்கையுமறுப்பேனென்றுந் தலைவி சொல்லிய சொல்லைத்தவிர்க்க இறைவன் புகுந்ததனாலென்க. பூம்பொன்னாள் - தலைவி.

(௩௦௭) பாங்கிக்கும் இறைவன், இறைவியர் மனம்போல நடப்பது துன்பமாதலா லிருதலைக்கொள்ளியையும், மத்தளத்தையு முவமித்தார். வருதல் - இறைவியின்பம். தவிர்தல் - இடையூறுதவிர்தல். துருவிய சொல் - ஊரவர் விசாரிக்கின்ற பழிச்சொல். என்றும் உருகு அனையே. எனப்பிரித்துரைக்க.

(௩௦௮) பொன்வினையாளர் - தட்டார். மரவினையாளர் - தச்சர். மண்வினையாளர் - குயவர். நூல்வினையாளர் - நெய்வார். இவர்களாற் கல்யாணச் சோடினைமுயற்சியைத் தாக்கல்செய்து ஆற்றினேனென்றாள் என்க.

(௩௦௯) அறநிலையஃகின் - தருமநெறிப்பொருள் குறைந்தால். மறநிலைச் செப்பொன் என்றது பகைவர்பொருள். குற்றத்தண்டனையால் வரும்பொருள், சூதில் வெல் பொருள்களை என்க. செறுநர் - பகைவர். திரமுற்றுரைத்தல் - வரலாறுதப்பாமற் சொல்லுதல். மலையாள - முலையாகிய மலையையாள. ஈழம் - பொன். மலையாளம்,ஈழம் என்னுந் தேயத் திற்றிறைக்கொள்வது என்பது மற்றொரு பொருள்.

(௩௧௦) கண்டி - ஆபரணம், ஒரூர்; பவளக்காடு - பவளக்குப்பை, ஒருஊர். கலிங்கம் - சேலை, ஒரு தேசம். ஈழம் - பொன், ஒரு தேசம்.

(௩௧௧) மாதரைமேவினர் - பெண்களை விரும்பியவர், பெரியபூமியிற்றங்கியவர். ஈகை - பொன், கொடை. வர்சித்தல் - விலக்குதல், தள்ளுதல். கல்யாணம் - விவாகம், பொன். கண்ணுக்குங் காதுக்குந் தூரமில்லை என்றது அவைக்கிடமுகமானாற்போல விவர்க்கிடமோரூரானதாலாற்றுவாரென்பதாம். அன்றிக்கண்ணாலே கோபித்தாற் காதிலேயுள்ளதைச் சொல்லென்பது மொருகருத்து.

(௩௧௨) ஆசை - பொன், அன்பு.

(௩௧௩) கடம் - நீதி, காடு. பசு - உயிர். பசுமாடு. வேங்கை - பொன், புலி.

(௩௧௪) மயல் - காமமயக்கம்.

(௩௧௫) வளர்த்த கிளியும் வந்தான் வந்தான் என்னும் பாங்கியுந் தலைவியுள்ள மெலியும் வேளையில் வந்தான் வந்தான் என்பாளாதலாற் சரியாயிற்று. மன்வாசகத்தை அரிச்சந்திரன் சொல்லென்றது தாதி நிந்தை.

(௩௨௩) கையிற்சற் சுமத்தல் - சாணைக்கல்லாகிய 'கனைகுறைகையைவைத்தல். சுமந்து என்பது சுமக்க' வென்னு மெச்சத்திரிபு. விரைந்து வாலை நோக்கிய தலைவிக்கு விரைந்து செல்லவேண்டும் அவ்விரைவின்மையால் விரைந்து செல்லுங் கருத்தாய்ப்பாகன் குதிரைமேவிட்டுரைத்தான். வெந்நீர் விடல் போர்கூடும் என்பது மெள்ளச்செல்லுமென்றபடி.

(௩௨௪) ஏர் - அழகு. ஒருவரை நீக்கல் என்றது இறைவன்றலைவியை நீக்கலையும், மேகமலையை நீக்கலையும். என்க. தராதரம் - மேகம்.

(௩௨௫) கார்முடியாயென்பது கூந்தல் இறையவர்கையொப்பனையைவேண்டலின் முடியாதிருத்தலாலென்க. வெளியே பயிலாதது பிறர் பயிர்ச்சி பாராத குறிப்பு. இருகண் விழியாமை இறையவர் நீங்காதிருப்பதற்கு. வார் புனையாமை கச்சுச்சிறுமை பற்றி யென்க. அணிதானணியாமை இறை வரைப்பிரிய விட்டு விட்டவென்று அவயவங்கள்மேல் வெறுப்பு. அவ்வாறன்றி வெறுப்பென்றே பொருள் கோடல் சிறப்பன்றென்க. எவ்வண்ணமுங் கூடப்பிள்ளைப்பாவை விண்டாள் என ௧௭-ம் பாடலிற் கூறியதானுமறிக.

(௩௨௬) கொலையிடுதல் - சதையகழ்தல். தலையிட்டும் என்றது வலம்புரி வடிவாகச் செய்ததலைக் கோலமணிதலை. வலம்புரி வயின்வைத்துத்து வாமுடித்த துகளறு முச்சியென்பது திருமுருகாற்றுப்படை. காலிட்டும் என்றது கணைக்காலுக்குச்சங்கமென்று பேரிட்டதை. 'கல்யாணத்திற் சொல்வது தீமை வலம்புரியென்பதும், சங்கநாதம் பண்ணச் சொல்வதும். தாழிநீரிற்சங்குடன்மோதிரம் போடச்சொல்வதும், வாரணமலங்கரிக்கச்சொல்வதும், வீட்டுக்கு வெள்ளையடியென்பதும், கைக்குவளையிடுமென்பது முதலியனவாம்.

(௩௨௭) மங்கலம் - கல்யாணசுபம். திருப்பூவணம் - இலக்குமி பொலிவாகும் வண்ணம், அன்றித்தாமரைவண்ணம் போன்ற அவயவத்தோடு கூடிவந்தவெனினுமாம் அது இருவிழிமலர்ந்துவருவது. மார்க்கம் - சமயம், வழி. மங்கலமென்னு மூரைக்காட்டித்திருப்பூவணமென்னு மூருக்கு வந்தவழி நல்லதாம் என்பது மற்றொருபொருள்.

(௩௨௮) நினைத்தமையாவது. குளங்கண்டபோது பூ முதலியவற்றைக்கண்டும், வயல்கண்டபோது சோலைபுட்கள் முதலியவற்றை நோக்கியும், கூட்டுண்ணு வண்டின் வளங்கண்டபோது பேட்டோடு சேர்க்கை கருதியும், குயில் கூவும்போது கார்காலம் பார்த்ததும், கார்காலங்கண்டபோது தூதாகச்செல்லென்றதும், சுவாமியைக் கண்டபோது நெடுகிலுஞ் சேர்க்கைசெய்யவேண்டியதுமாம். பாகனுக்குந் தெரியுமெனவே கூடவந்தவர்களுக்கும் வழியில் வந்தவர்களுக்குந் தெரியுமெனலாயிற்று.

(௩௨௯) மேகந்தூதாய் வந்தும், இருவரையு மெழுதிய படம் பார்த்துக் களிக்குங் காட்சிப்பொருளாயிருந்தும், கால் குறியிடங்கண்டுதிரும்பி யுதவியும், விழியிடந்துடித்தும், காக்கை காலை தனிலெழுதல், காணுமலின்புரிதல், மாலைமுழுகிமனையடைதல், சுற்றரோடுண்டல், உலகோம்பல், என்னுமைந்து குணங்களையுங்காட்டியுதவியும், கனு சேர்க்கை செய்தும், வெறும்பொய்-ஆதரவார்த்தைகளும், தானே தேறியும், நான் என்பதுசகிவினவியதானும் உன்கையென்பது சத்தியஞ்செய்தலை நினைத்த

லாலும் என்க. உன்கை என்பதற்குக் கொடைகொண்டோர் வந்தனை த்தலைக்கேட்டு மெனினுமாம்.

(௩௩௦) அரைப்பணம் - அல்குல். அரை - இடை. பணம் - பாம்புப்படம். அரைப்பணத்தை வாங்க வாயிரங்கோடிபணமனுப்பினரென்பது மற்றொரு பொருள்.

(௩௩௧) சிற்றன்னை - செவிலித்தாய். விண்டிடக் குறியாள்-விலக்க நினையாள். மணம் - விவாகம்.

(௩௩௨) சுரும்பு - மலை. மாதங்கம் - யானை. பொற்குடம் - பூரண கும்பம். கயல் - இணைக்கயல். கவரி - சாமரை. இவைமங்கலப்பொருள்கள். தலைவியெதிர்தலுக்கு முறையே, தேகம், முலை, கண், கூந்தலென்க.

(௩௩௩) ஆட்டுக்கு வந்தவிபத்து - வெறியாட்டம். சோட்டிறுமாப்பு - முலைவிம்மல். பாட்டுப்பயன் - கேலிச்சாடை. சேட்டு - சம்பாத்தியப்பொருள். களிற்று இயம் - யானைமேலிட்டமுரசு.

(௩௩௪) தாமரை மேற்பனை சாய்த்தது என்றது கையிற் பனைமடற்குறிரை செய்தகை. பூமின்-தலைவி. முடித்தலை சாய்த்தது என்றது பாங்கிக்குத் தலைவிமறைத்தலை. அதுவோ வின்னுநண்ணுவதே என்றது அப்படிப்பட்ட களவுப்புணர்ச்சிக்காலமினிவரவாபோகிறது வரமாட்டாது என்றபடி. ஓ - எதிர்மறை.

(௩௩௫) மழைமண்டலம் - கூந்தல். இருபூ - இரண்டுகை. ஒரு பூவரும்பு - தாமரையரும்புபோற் குவிந்தகை. ஆகாயத்திலிரண்டு பூத்தோன்றி யொருபூவாயரும்பி யுளதென்பது மற்றொரு பொருள்.

(௩௩௬) முருகுந்தனிந்திரனுக்கு நட்பாளரகலாலிந்திரன் மகளுக்குச் சீர்கொடுத்தான் என்க. மின் என்பது இடையை. புயல் என்றது கூந்தலை. பதும் என்பது முகத்தை. பூ - பூமி. மலரன்னம் என்றது தலைவியை.

(௩௩௭) சந்திரகாந்தக் கற்சாணை என்றது கபோலத்தை. தண்ணீர் - கண்ணீர். மதி - புத்தி, சந்திரன்.

(௩௩௮) வாள் - கண். வில்மை - கண்ணின்விடும் பிரகாசமாகிய மை. வாள்வித்தையில் வில்வித்தையை வைத்தவரென்பது மற்றொரு பொருள். பற்றுள்ளவர்போலே கலுழுமென்றது வாடியமுகம், வளை சோருங்கை, அயர்ந்தகால், பூரித்தமுலை, ஆகியவவயவங்களைக்குறித்து அவையினமாகையா லன்புவைத்துக் கண்ணாகிய வவயவங்க ளழுகின்றதென்றாள் என்க. கண்வாளுக்கு மையிட்டவர் இறைவர். அது. மெய்தொட்டுப்பயிறல். அணிந்துழிநாணியதுணர்ந்து தெளிவித்தல், பாங்கிகவர் பொருட் சொலவி நாடன் முதலியதுறைகளானறிக.

•(௩௩௯) கண்ணனை தாமரை வேலவன் மேற்செல்க்காட்டி என்றது சுவாமியைப்பார்த்துக் கொண்டு என்றபடி.
இருதாமரை மலர் விண்மீது நீட்டி என்றது கைத்தாமரைகளை மேலே குவித்துத் தூக்கி என்றபடி. பிரியிற்பிரிந்தேன் என்பது உன்னையான்

பிரிவே ஞானுலுயிர்பிறிந்தவனே எனறபடி. என்னேனர்தவறு - மனமறிந்தகுற்றம். பொய்ச்சத்தியஞ் செய்தாரென்றவாறு.

(௫௪0) குழகன் - பேரழகுடையவன். வாயப்பாலிழுதம் - ஆதாந்தினமிர்தம். வீடு - மனைவி. இரண்டகம் - ஒருவர்ப்பட்டாத்தனோய்ப்பு. கனிவுடனே பாலுஞ் சோறுஞ்சாப்பிட்ட வீட்டுக்கிரண்டகஞ் செய்தாற் சொல்லுவதென்னே? என்பதுமற்றொருபொருள்.

(௫௪க) கந்தருவநகர் தோன்றிமறைதலாலு வமையாயிற்று. இவர் நேர் நனவு என்றது தலைவர்செய்த பொய்ச் சத்தியம். என்றபடி. ஓவியம் - சித்திரப்பாவை.

(௫௪௨) முயக்கிடையே வெளிகாணவயர்ந்தது என்றது ஆலிங்கனமிறுகவில்லை மிருதுவென்று நூக்கப்பட்டதை என்க. களத்திலைச் சொற்றது என்றது தலைவிநீரிலமிழ்ந்திய ஞான்று வீழ்ந்தெடுத்துயிரளித்த தலைவனைநீயே உயிர்காவலனென்றதை என்க. வயத்திடைச் செல்பவராரென்ற போது வருந்துயரும் என்பது கருதலர் மேற் செல்பவர்யாரென்று தலைவன் வினவியபோ துடனே யிறைவன் செலவுகுறித்த விருதுவென்றுதலை விமயங்கிய குறிப்பு. கடல் நெறிதப்பிக்கரையைப் படாதெனவே வராமலிரார் என்பதாயிற்று.

(௫௪௩) விண்டாரென்று - நீக்கினுரென்று. முற்றுவெற்பு - முலை. இருகாந்தள் - இரண்டுகை. எற்றியது - அடித்துக்கொண்டது.

(௫௪௪) சூட்டியமாலை - இறைவன்கையணி. சேரண்மாலை - அதிகரித்த சேலையுடை. செல்லுஞ்சோலை - ஒரிடப்பயிற்சி. சூட்டியமாலை என்றது நாணவரையிறத்தல் முதலாகியவ வத்தையைத் தருமெய்ப்பாட்டினைசை திகுதியை என்க. மால் - ஆசை.

(௫௪௫) கத்தூரி மிஞ்சிய நீற்றிலையென்பது. கஸ்தூரியிருபங்கும், கற்பூரம் ஒருபங்கு மிட்டவெற்றிலைச் சுருட்டுக் கலைத்தலைவிபடுக்குமலர் மெத்தையிற் பாங்கிவைத்திருந்ததைச் செவிலிகண்டு ஆண்மகனுக்குவைத்ததென்று சந்தேகித்தாள், என்றும், தலைவன் வந்து போனதற் கடையாளமாகவைத்த முத்துமாலையையும், நகத்தால் வரைந்த வெழுத்துள்ள வெற்றிலைச்சீட்டையுங்கண்டு கோபித்தாள் என்றுங்கூறினுள் என்றவாறு.

(௫௪௬) வேதனை என்றது பிரமனுக்கும், துன்பத்துக்கும். அன்னம் என்பது சோற்றுக்கும், பட்சிக்கும். கையில் வளை என்பது சக்கரத்துக்கும், கைவளைக்கும். மாலென்பது மாயவனுக்கும், மயக்கத்துக்கும் என்றவாறு.

(௫௪௭) தென்கிழக்குறுதேவன் - அக்கினிபகவான். துயர் என்பது வாகனமாதலாலென்க. குமரனென்றது வெறியாட்டாளனை. பாவம் - அபிப்பிராயம்.

(௫௪௮) வாரம் - அன்பு. மரபு முறைமை. தாய்க்கொளித்து சூலுண்டாவென்பது பழமொழி.

(௫௪௯) அளியே பொருந்தாரை - வண்டுகள் மொய்ப்பெறுமாலையை. கருணையில்லாதவரை. முடித்து - சூட்டி, அழித்து. வருந்தா - வருந்தாமல், வருந்தி.

(௩௫0) வரிபட்ட பூக்கள் முன்பகையாக முகிழ் நகையைத்தன் பகைதீர்க்க அம்பிற் கொல்லுநாள் எனக்கூட்டுக. வரி - வண்டு, இரேகை. அம்பு - நீர், பாணம். பூக்கள் என்பது நீலோற்பலம், செவ்வாம்பல், தாமரைமலர்களை என்க. வேட்டு - விரும்பி துப்பாக்கிகொண்டு வெடியெழுப்பியென்பது மற்றொருபொருள்.

(௩௫௧) பெண்ணிற்கரும்பு - தலைவி. விண்ணிலெழும்புங்கலைகள் என்றது தறிபட்டுமேலெழும்பிய கொம்புகளை. அதன்பின் போயது வெய்யபணி என்பது அறுபட்டெழும்பிய துதிக்கையை. கரிமலை என்றது தலைவன்வாளால் நாலு காலையும் வெட்டி விட்டமையால் யானை மலைபோலிருந்தமையாலென்க. நாந்தகம் வச்சிரமே என்றது மலைகளைச் சிறகரிந்து நிலைபெறச் செய்ததுபோற் செய்தமையாலென்க. யானைவாயிற்பட்ட கரும்பைத் திருப்பினானென்பது மற்றொருபொருள். வச்சிரம் - வச்சிராயுதம்.

(௩௫௨) முலைமேற்றோன்றிய அரவிற் சங்காம்பிறை என்றது பார்ப் பாப்பாம்பின்படச் சங்கரேகைபோலு நகக்குறியை. கரவிற்சங்கு என்றது, தோழிதலை மகள்துயர் கிளந்து விடுதற்குக் குறிக்குஞ் சங்கு, கொம்பு முதலியனவாம். இறைவனோடு கூடுமிடத்துக் கைவளையொலிப்பதெனினுமாம். வரவிற் சங்கோசை மகிழ்வது என்றது வலம்புரி கேட்டவன் வரவறிந்து மகிழ்தலை. இரவிற் சங்கோசை என்றது அர்த்தசாமத்திற்குறித்த சங்கோசையை. 'அது இருவர்க்கு நினைப்புக்கூறிவைத்துப் பாதிச்சாமந்தெரிவித்ததென்க. சோர்துயில் - ஆயாசவுடை முதலியன.

(௩௫௩) ஆண்சிங்கம் என்பது தலைவனை. பெண்ணானை - தலைவி. மத்தகம் - முலை. எதிர் சிங்கநோக்க நெஞ்சோர்கின்றது என்றது எதிர்ந்த சிங்கப்பார்வையை மனதினினைத்துப்பயந்து எனவும் தலைவன் பார்வையை நெஞ்சினினைத்து விகாரப்பட்டென்றுங்கொள்க. சிங்கநோக்கென்றது முன்பின் பார்த்ததுக்குமாம். முன்பார்த்தல் - முன்னடந்த செயலை. பின்பார்த்தல் - பின்னடக்குஞ் செயலை. மத்தகம்பிளந்ததுண்டாமெனவேபாங்கியறத்தொடு நின்றாளென்று செவிலி நற்றாய்க்குக் கூறியதாயிற்று.

(௩௫௪) கிளி - தலைவி. பூங்காவனம் என்பது தலைவனமண்மனையை. கொஞ்சத்தனம் - அற்பமாகிய பொருள், கொஞ்சுதற்குயோக்கியமான முலை. கொஞ்சலாவது வாயால் நிகழ்குறி.

(௩௫௫) இரண்டுதனக்குடம் என்றது தலைவிமுலைகளாகிய குடங்களை. வெற்பிற்றாமரை பூவாதென்றது கல்லிலே கால்வைக்கமாட்டாள் என்றபடி. மாந்தளிர் மேன்முத்து என்றது காலிற்கொப்புளம் என்க. தேகத்தில் வெயர்வையெனினுமமையும்.

(௩௫௬) புத்திசாலி - புத்திமிக்கவள், புத்தியையுடைய வருந்ததி. கானம் - இசை, காடு. வனம் - நீர், காடு. தாமரை - தாமரை, தாவுகின்ற மரைமான். தாமரை என்றது தலைவிபாதங்களை, உன்மகிழ்ச்சியினாற் காலாகியதாமரை வனத்திற் செல்லுமென வேயுடன் படுத்தியதாயிற்று.

# மயூரகிரிக்கோவை யரும்பதவுரை.

(௩௫௭) தலைவியைக் கிளியென்றதற்கேற்பத் தினை சாமைகளைக் காட்டி நெல், கனி, அமுது, ஊட்டி ஏகுவேனென்றான் என்க. தலைவிக்குத்தினை, சாமை, விளைந்த அவள்குறிச்சியைக் காட்டி நெல்லுஞ் சோலையுமுடைய தனது மருதநிலத்தைக் காட்டுவேன் என்றான் என்றபடி: ஓர் புறத்தேயென்றதனூற்றலைவனூர் சமீபமாக விருக்கிறதென்றாயிற்று. அது இடமணித்தென்றலானுமறிக. தெரித்த முதூட்டி என்றதனூற்றலைவன் பதிக்குப்புற நகரிலிளைப்பாறிப் போவார் என்க.

(௩௫௮) பாலையாழ் தடவியது பாலை நிலத்துப் பாதையிற் பிரிவுக் குறிப்பு. வனத்திற்குமரி - பாலை நிலத்திலுள்ள பத்திரகாளி. புனத்திற் குமரி என்பது தலைவியை. பாலையாழென்றதனால் வனத்திற்குமரி என்றது பாலைவனத்துக்குமரியை என்க.

(௩௫௯) என்னாணை என்பதற்கு என் நாணை என்றும், என் ஆணை யென்றும் பிரித்துப்பொருள் கொள்க. ஆணை - ஆக்ஞை.

(௩௬0) தலைக்கொள்ளல் - உயர்வாகக் கொள்ளுதல், தலைமேற் சூடிக் கொள்ளுதல். கற்பு - பதிவிரதாதருமம், முல்லைமலர். நாண் - நாணம், (மலர்தொடுக்கும்) நார்.

(௩௬௧) களிற்றைப்பிடி நீத்தமர்வதுண்டோஎனவும், காரிருந்தா லல்லவோ மயிலாடல் கருதுவதே யெனவுங் கூறினமையாற்றலைவியுந் தலைவனைத் தொடர்ந்தேக வொருப்பட்டாளாயிற்று.

(௩௬௨) செம்பாம்பு - கேதுவென்னும் பாம்பு. கரும்பாம்பதா மென்றது பாலையின் வெப்பத்தாலென்க. தழலிற்கு உழையும் குழையும் எனப்பிரிக்க. குழைதல் - வருந்தல். கரி என்பது வெள்ளை யானையெனினுமமையும்.

(௩௬௩) மணம் - கலியாணம். கோ - இறைவன். இன்பம் - புணர்ச்சியின்பம். நாண்தருகில்லா அலர் - சந்தோஷத்தையுண்டாக்கும் புட்பம். நாண்தருகில்லாவலரெனவே நாணைத்தரும் அலராகிய பழிச்சொல் வீட்டிலுண்டாமென்பதாயிற்று.

(௩௬௪) கும்பராசி - தனம். சிங்கராசி - இடை. விடை ராசிப்பேர் - நரை. மகரமீன் - கண். அம் - கண்ணீர். கன்னி - தலைவி. கற்கடகம் - இரத்தினங்களழுத்திய காப்பு.

(௩௬௫) காமத்திலாடிய தேவர் என்றது பிரமவிஷ்ணுக்களை. மெய்ம்மாலை - எலும்புமாலை. கலிக்க - ஒலிக்க. ஈமம் - சுடுகாடு. சாமம் - இருட்டு. மாலை - பூமாலை, மாலைக்காலம். வைகறை - விடியற்காலம், வைகுகின்ற வறைவீடு.

(௩௬௬) மால் இலர் அவம்புரியார். யேலில் அரவம் புரிவார். பாலில் அர அம்புலியுண்டு. எனப்பிரித்துரைக்க. அரவென்பது சிவசிவ யாவரேயோ என்பதுபோலும் அச்சக்குறிப்பு. காலிலரவம் - சிலம்ப. ஊரரவம் - ஊரார்ரொலித்தல்.

(௩௬௭) நன்னீர் - நல்லநீர்மை, நல்லதண்ணீர். கலந்துரைத்தல் - சேர்ந்து பேசுதல், கூட்டித்தேய்த்தல். மாத்திரை - நொடிப்போது;

பிணிமருந்து. சுரம் - வியாதி; அருநெறி. மாறும் - கழிந்துவிடும்; ஆறிவிடும். புத்திரமாக்கொண்ட வென்பதற்குப்பாக்களைத்திரமாகக் கொண்ட வெனினுமமையும்.

(நகூஅ) பணம் - பாம்பு. குணமுடிப்பு - குணநிறைவு. மணமுடியார் - கலியாணஞ்செய்யாதவர், வாசக்கூந்தலார். கதிகை - வாமோந்தியகை, மாலை. கணம் - சிறுமை.

(நகூகூ) வெளிப்படை.

(நஎ0) எம்மூர் அலர்மாளிகை வைகுந்தம் பின் செல்கவே என்றமையாற்றலை விளையுந்தலைவனையுமலைக்குரியாகவுந் திருமாலாகவு மயிர்த்தார் என்க. மாயைமகன் - சூரபன்மன்.

(நஎக) பகர்தேவி - புகழ்ந்துபேசப்படும் பெண்ணே, பட்டணம் என்பது தலைவிநகரத்தை. திருப்பாலைக்குடி - பத்திரகாளி குடியிருக்கும் பாலைநிலத்தார். சேதுமார்க்கம் - கரைவழி, இராமேசுரம்போகும்வழி. சிறுவயல் - சிறிய வயல்கள், ஒருஊர். பெருவயல் - பெரியவயல், ஒரு ஊர். வேல்லூ - வேலாயுதக்கடவுள். தேவிபட்டணம் விட்டுவந்தாற்றிருப்பாலைக்குடியென்னு மூருமிராச்சுரவழியுமன்றி வேறொன்றுமிடையிலில்லை என்பது மற்றொருபொருள். சிறுவயல் குன்றக்குடிக்கருகிலுள்ளவோரூர்.

(நஎஉ) மன்னிகர்கின்ற சரவணப்பொய்கை என்றது பூவால் விளங்குதல், அடைந்தோர் பாவந்தீர்த்தல், சரவணமுடைத்தால் நன்னீருடைமை, கண்டோர் மனவியப்பு, தொட்டார்குளிருடைமை, உண்டார்பேரின்பமுடைமை, முதலானவையாமெனக்க. அன்னையெனும்பிணி - அன்னையிடுக்கம். களபம் - சுண்ணச்சாந்து.

(நஎந) பயில் - பாசாங்கு. கொந்து - பூங்கொத்து. மன்கிளி என்பது தலைவியை. சிந்து - சந்தப்பாட்டு. கோவை - இராசாவை. கிளிகோவைப்பழந்தின்னப் போமென்பதுமற்றொரு பொருள்.

(நஎச) மாலை - இருட்டு, மலர்மாலை. பழயவரை - பழமையாகிய மலையை, இறையவனை. கூகையிாட்டுஞ்சுரமென்றதனுற் பாதிச்சாமமென்க. இரட்டல் - ஒலித்தல்.

(நஎரு) சொல்விலங்கு - சொற்றடை - துறைப்பிடி - துறைப்பெண். வல்விலங்கு - நாயகன். விலங்கு. விளையும்பயிர் - பக்குவகாலம். விளைதற்குரிய பயிர். போக்கு - சுரம்போக்கு, களை.

(நஎகூ) இரவு - இராப்பொழுது, யாசித்தல். ஏந்தல் - சிற்றூர், அரசன். கரவில்லொடுங்கவர் கள்ளர், கரவில் ஒடுங்குமவர் கள்ளர். எனப்பிரித்துரைக்க. பாலையுதவு - பாலைவனத்தையுதவு. பாலைத்தருவாயாக. உரத்திற்சாய்ந்தென்பது பிரிவால்வருந்துக்கத்தாலெனக.

(நஎஎ) பகரத்தில் வால் - போ. அடியென்றல் - மாறு. பண்ணை - செய். விதை - வித்து. தாய்ப்பேர் - ஆய். எனவே; போமாறுசெய்வித்தாய் என்றபடி. மணந்தொடைமலர்மாலை - கலியாணமாலை. இருகோங்கு என்பது முலைகளை. போமாறு செய்வித்த நீ வருமாறும் புரிந்தருளே யென்பதிங்கு நோக்கத்தக்கது.

# மயூரகிரிக்கோவை யரும்பதவுரை.

(௫௭௮) பிடியானைக்கொம்பொரு நான்கு என்பது தலைவிமுலைக ளும்; யானைக்கொம்புஞ்சேர்ந்து என்க. பின்பாகிட - அலைகளொதிரா மற் பின்கூட்ட. துடி - உக்கிரம்; வலி. கொம்புமுன் - தலைவிக்கு முன்பு. நான்கின் - சாதுரங்கத்தினுள் கவதாகிய காலாள்போல.

(௫௭௯) உன்தாய் என்பது செவிலியை. ஊரிற்பகைத்துடி - பகை வர் செருக்கு. பாரிற்பகைத்துடி - பாலைநிலத்திலுள்ள உடுக்கென்னும் வாத்தியம்.

(௫௮௦) தேவை - விருப்பம். போம்பொருள் - ஊழாற்போகத் தக்க பொருள். ஏவு - அம்பு. கோ - பசு, அரசன். பாலை - பாலினை, பாலைநிலத்தை.

(௫௮௧) இருபூ - கண்ணும், காலும். மதி - புத்தி, சந்திரன். வெய் யோன் - இறைவன், சூரியன். மதிகொடுத்து - புத்தியைக்கொடுத்து. மணியேயிழந்த அரவென்று கொண்டுகூட்டுக.

(௫௮௨) வடு - பிஞ்சு, குற்றம். கனிகனி - பழப்பழு, உருகுருகு. கண்ணீர் - கள்நீர், கண்ணீர். இரை - ஒலி, அலறு. தலைகவிழ் - தலை சாய், நாணுற்றலைகுனி. நடுங்கு - ஆடு, நடுக்கங்கொள்ளு.

(௫௮௩) அடிசில் - சோறு. பெருங்கடி - இராசகல்யாணம். அருங் கடி - கடுங்காவல். கருங்கொடி - கரியகாக்கை. பொன்கொடி-தலைவி. காய்க்கொடி - சீனிக்கோவைக்கொடி. கருங்கொடியே யணையுஞ்செய் தாற்றின்னுங்காய்க்கொடிவரும் என்க.

(௫௮௪) இராமீசுரவழி - வேறிடத்திலில்லாத மேலான சுரப்பாதை, இராமேச்சுரஞ்செல்லும் பாதை. பாம்பு அணைந்தும், பாம்பன் அந்தம் எனப்பிரித்துரைக்க. பாம்பன் அந்தம் - பாம்பனூற்றின்முடிவு. அழ கெனினுமமையும்.

(௫௮௫) வெந்நீர் குளிர் நீர் என்பது முரண்.

(௫௮௬) வேங்கைத்துறுகல் என்றது வேங்கைமலர்களுதிர்ந்து கிடக்குங்குண்டு கற்களை என்க. புலிப்பறழ் - புலிக்குட்டி. கோங்கு என்பது முலைகளை. தளவு - முல்லையரும்பனையபல். முகை - அரும்பு. கருங் கால் வேங்கை வீயுறு துருகலிரும்புலிக்குருளையிற்றோன்றுங்காட்டிடை எனவும், கருங்காலினவேங்கை கான்றபூக்கன்மே லிருங்கால் வயவேங் கையேய்க்கு மெனவும், கூறியமையிங்கொப்பு நோக்கத்தக்கது. ஈட்டி - ஆயுதம்.

(௫௮௭) தணோர் என்பது ஒலிக்குறிப்பு. மெய்ந்நடுக்கே என்பது அல்லாது வேறில்லையென்றபடி. ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது. வெங் காருடலத்த நாகங்கள் என்பது யானையும், பாம்பும் என்க.

(௫௮௮) ஆற்றுவாத்தும், இடியும், மழையும், மேகமும், மின்னும், கற்பித்தவாறு காண்க. ஆறு - பாதை. போகத்தினூர் சொல்லிடி என் பது பரியாசக்காரர் வார்த்தை மிகுதலை. கண்மழை - கண்ணீர் மே கம் - இறைவன். மின் - இறைவி.

(௫௮௯) பட்டிவைத்தவோர் என்பது ஆணைப்பெண்ணாகவும், பெண் ணையாணாகவும், செய்யவல்லது இவ்வாலாறு விக்கிரமாதித்தனுன்காவது

பதுமைக்க... ஈறிக. ஈளனல்லவே என்பது உருத்தெரியாதமந்திரி போபதேசமிவனுக்கில்லை யென்றபடி. பட்டி - விக்கிரமாதித்தன் மந்திரி.

(௩௯0) முக்கோல் - திரிதண்டம். அறக்கூனிய முதுரு உடைய வரே எனப்பிரிக்க. அற - மிக. நடை - ஒழுக்கம், நடத்தல்.

(௩௯௧) பருவத்திலூறிய நீரையுண்ணுரெனிற் பின்னும்பாரின்று கத் துர்வாசமா மாறுபோலப் பருவத்தில் விவாகஞ்செய்யாவிடிற் பிறர் கொள்ளாவண்ண மித்தகைய வலருண்டாமென்பது கருத்து.

(௩௯௨) மேகம் என்பது தேகம். வேங்கைநகம் - புலிப்பற்றாலி. தோகை - தலைவி. நாகம் - யானைபோலுந்தலைவன். மயிலும். பாம்பும் விளையாடுவதென்பது மற்றொருபொருள்.

(௩௯௩) குழை - இலை, தோடு என்னுங் காதணி. பூங்கொடியிடை வாய்ந்தனே என்பது புட்பக்கொடி படரப்பெற்றாளாய், பூங்கொடியைப் போலுமிடையைப்பெற்றுளாய் என்றபடி. ஒருபாவை காட்டி என்றது பாவைபோலிருக்குங்குரவங்காயை.

(௩௯௪) உரம் - ஞானம். உற்றவர் - இறைவர். இரண்டடி - நால டியாகியதே என்றது இறைவன் குதிரைமேற்கொண்டதாலென்க. எட் டடியாகியது என்றது இறைவி பல்லக்கிலேறியதாலென்க.

(௩௯௫) தாமரைமேற்றாமரை யுற்றது என்பது இறைவன் கால டிச்சுவட்டிலிறைவிகாலடி பட்டதை. கடப்பமரத்தருகிற்படுத்திருந்த மையான் மணத்தாற்குளிர்ந்ததென்க. புறவடி - சுகாசனத்திருந்த தலைவ னடி. இணையடி - தலைவன் மடியிலிருந்த தலைவியடி.

(௩௯௬) உடம்பு - இறைவன். உயிர் - இறைவி - வருவீர் என் பது சுரம்போய்த் திரும்பிக்கலந்துடன் வருவோரை. நலந்தந்ததே என் பது இத்தன்மையோரும் எப்போது முண்டென்னு முறுதிவந்தமையா லென்க. வருவோர்க்குப்புள்ளையும், அவர்வீட்டுக்குக்கூட்டையு முவமா னமாகக்கொள்க. நடந்தவர்போல - சுரத்திலே சென்றவராகிய எங்க ளுடையதலைவி தலைவர்போல என்க.

(௩௯௭) உவப்பு - மகிழ்ச்சி. மருவலரைமுடித்து - வாசனையுடைய மலர்களைச்சூடி, பகைவர்களையழித்து. உற்றுதவி - துன்பமுற்றவிடத்து தவ புரிந்து.

(௩௯௮) மாடி - வீட்டுமேன்மாடியில். கண்டேர்குராவும், அராவும், மராவும், கராவும்; இராவும், கலையும், கலையும்உள்ளமும. கண்டேன் மற் றென்கண்டேன் எனக்கூட்டுக.

(௩௯௯) மயிலும், மானும், தலைவியைப்போன்றமையாலிங்ஙனங் கூறினள். வான் - தேவருலகு. சேண் - தூரம். தேவருலகு.

(௪00) உய்யானம் - பூஞ்சோலை.

(௪0௧) பந்து, குழல், உடம்பு; இம்மூன்றும் போக்குவரத்துள்ளமை யாலுவமையாயின. குழல் - நெய்வார் கருவி. சந்தடி - சனக்கூட்டத் தாலாகுந்தொந்தரவு.

(சO௨) காடன் செட்டி என்பார் மருதுபூபதிக்குயிர் நண்பர். இவர் மாபிலுதித்தவர்களிப்பொழுதும் ஆத்தன்குடி என்னும்மரண்மனைப் பட்டியிற் பெருமித முடையவர்களாயிருக்கிறார்கள். இவர் மண்டபப் படி சந்நிதிக்குச்செல்லு மலையடிவாரத்திலுள்ளது. இப்பொழுதுஞ் செல்வமணி மண்டபப்படியாகவே சிறந்து விளங்குகிறது. இச்செட்டி யாருடைய அன்னசத்திரம் மருதுபாண்டியனால் ஐந்து கிராமங்கள் முற் றூட்டாக விடப்பெற்றுள்ளது.

(சOங) துணை என்பது தலைவியை. மருது துரையரண்மனையா வது மலைக்குத் தென்கீழ்த் திசையிலிருந்து சிறைவுற்றதாகத் தெரிகிறது.

(சOச) முருகா வென்றது வெறியாட்டாளனை. புயல் - இறை வன். மின் - இறைவி. அகம் - தலைவிவீடு. அயல்வீடு - உறவினர் வீடு. இன்றே என்றது வரைந்து கொண்டிருந்து வீடுவாரேனென்ற படி.

(சOரு) பிறர் மாடத்திலே பிராமலிருப்பர் என்பது ஒரு வீட்டுக் கண்ணாடி மாடத்திலுள்ளவர் அயல் வீட்டுக்கண்ணாடி மாடத்திற்றோன்று தலாமெலன்க. தராதுகொண்டார் என்பது தாய்தந்தையர் கொடுக்கா மற் கொண்டார் என்றபடி. பரவ - புகழ்ந்து துதிக்க. மணம் - கலியா ணம், வாசனை. காவலர் - காக்குந்தொழிலில் வல்லவர், காவின்கணுள் ளமலர்.

(சOசு) தலைநாணிகர் நாணிலைசெய்து என்பது உயிரினுஞ் சீரிது நாண், அந்நாணுயிருள்ள வரையிலும் போவதில்லையாகலானிகர் நாணொ ன்று மங்கலநாணுக்கு வமையாக்கினார். தலைநாள்நிகர்நாள் நிலைசெய்து எனப்பிரித்து இயற்கைப்புணர்ச்சி மகிழ்ச்சியை நிகராக வெனினுமமை யும். பொன்மாலை என்பது தலைவியை. மணம் - கலியாணம். பொன் னுலாகிய மாலைக்கு வாசனையைத் தந்தார் என்பது மற்றொரு பொருள்.

·(சOஎ) அருள்நிதி - கொடுக்கும்பொருள். பால் - பகுப்பு. ஏற்பார்- யாசகர். அறியாமை - கொடைமடம். இருவரை - இரண்டுமுலை. ஒரு வரை என்பது இறைவனை. ஓர்வரைதலை - ஒப்பில்லாத கலியாணத்தை. இரண்டு மலையைத்தாங்கி யொருமலையையுட்கொண்டிருந்தவள் மற்றொரு மலையையுந் தலைமேற் கொண்டாள் என்பது மற்றொருபொருள்.

(சOஅ) மன்றல் - கலியாணம், வாசனை. நீயெனுங்கொம்பு என் பது பாங்கியை. தப்பு - குற்றம். மற்றக்கொம்பு, தப்பு முதலானவாத் தியங்களுண்டு என்றபடி.

(சOகூ) கைப்பற்றியேகல் என்பது சுரம் போக்கை என்க ஏற்ற வர் - பரிசு பெற்றவர்.

(சகO) தமிழ்கொண்டு - தமிழ்ப்பாமாலையேற்று. மஞ்சள் - சுமங் கலிகட்குக் கொடுக்கு மஞ்சட்கொடை. மொழி - சோபனவாழ்த்து. கலி யாணப் பொருமையைப்புகழும் பேச்சுக்கள். கண் - அஞ்சனந்தீட்டப் பெற்றமை. கையும், காலு. மென்பது வீச்சாலு நடையாலுமென்க. ஆப ரணங்களானெனினு மமையும்.

(சகக) அன்பினிற் காத்தவர் என்பது பாங்கியை. காணிக்காசை- காணியாட்சி விருப்பம். கார்கு ஆசு - காலுக்குக்குற்றம். குரவர் - பெ

ற்றோர். ஒருகாசு - ஒருகுற்றம். செலவு - செல்லுதை. நாணிக்காசு. காற்காசு. ஒருகாசு. இவை கொடுத்தேனென் செலவில்லை யென்று சொல்லுமென்பது மற்றொருபொருள்.

(௪௧௨) அன்னம் - சோறு. அன்னப்பட்சி. பிடி - கைப்பிடி, பெண்யானை. புல் - புல்லு, புலி. கொக்கு - மாமரம், ஒருபட்சி.

(௪௧௩) ஒருத்தர் - வேற்றரசர். கட்டிக்கொடுத்தல் - பிடித்துக் கொடுத்தல், கலியாணஞ் செய்தல். திருட்டு என்றது களவுப்புணர்ச்சியை. கிளியென்பது தலைவியை. எட்டிப்பழம் - பிறர்வரைவு. கோ தலைவன். கோவைப்பழந்தின்ற கிளி யெட்டிப்பழந் தின்னுமென்பது மற்றொருபொருள்.

(௪௧௪) பந்தன கொங்கை என்பது அன்னையென்க. எந்தலகத்திருக்கும் சந்தனம் என்பது தலைவனிருக்குந் தேசம் என்க. அத்தி-யானை. மா - குதிரை. அரசு என்றது தலைவிதமையன். கடம் படர்ந்து - காட்டில் நடந்து. எந்தலிலிருக்குஞ் சந்தன மரத்தை அத்திமரமும், மாமரமும், அரசமரமும், கடப்பமரங்களோடடர்ந்து சுற்றிய வென்பது மற்றொருபொருள். எந்தல் - சிறிய ஊர். ராசன். கடம் - காடு. படர்ந்து - நடந்து.

(௪௧௫) திருக்கு முன்னோன் என்க. திருகல் - மாறுபடல். முன்னோன் - ருக்குமி. தன்னை - தாய்.

(௪௧௬) சேலை - புடவை, தேர்ச்சேலை. கொடி - இடை. துவசம். வாழை - துடை. வாழைமரம். தேர் - அல்குல், தேர்.

(௪௧௭) ஐயனை என்பது வேதியனை. நாலனை என்பது நாணமுதலிய நான்கு குணத்தினையுடைய தலைவியை. ஐயனை மேவிநாலனை மேவலெனி தென்பது மற்றொரு பொருள்.

(௪௧௮) தக்கோர் என்பது சிவபெருமானை. மிக்கோரை - சிறந்தவர்க்கினத்தை, பெரியோரை.

(௪௧௯) காலாழி யென்பதைக் காற்சமுத்திர மாக்கி யோராழி யென்று கற்பனை செய்தார். காலாழியைச்சமுத்திரமாக்கினதற்குரிய வளமாக வணிகளைக் கொள்க. சரப்பாணி - செல்லுகின்றபாம்பு. வளை - சங்கு. முத்துமாலை - முத்துக் கூட்டம்.

(௪௨௰) முன்கண்டனமே என்பது, சங்கம் - வலம்புரி கேட்டவன் வரவறிவுறுத்தலும், கைப்பற்றித் திவலஞ் செய்தல் - உடன் போக்கிற் சுவடுகண்டிரங்கலும். செங்கைப்புனல் - புனல் எதுவாகத் தலைப்பாடியம் பலுமாம் - கெடுதியுள வேழமுதலாயின வினாவலும், தேர் - இறைவிக்கிறைவன் வரவறிவுறுத்தலும் ஆகியதுறைகளானறிக. கங்கைப்புனல் வைத்தது - நெறியின தெளிமை கூறற்றுறையெனினுமமையும் இவ்வளவுங் கலியாண வணிகளாதலுங் காண்க. ஈசனுக்குக் கொள்ளுங்கால் வலது கையிலக்கினி, இடதுகையில் வளையல், கங்காநதிப்புனல், வேதக் குதிரை. பூமியாகிய தேர் என்க.

(௪௨௧) காவேந்திய குழல் என்பது தலைவியை. கண் - குறிப்புணர்த்தல், கை - நாணிக்கண்புதைத்தல்; நகை - முறுவற்குறிப்புணர்த்தல்; மாவேந்தர்பெறன் - பிறர்வரை வுணர்த்தல்; பெரியோர் - சான்

மேருவரை முன்னிடல்; பாவை என்பது பாங்கியை. பூவேந்தியகை - கை யுறையேற்றல். இவைகளையவ்வத்துறை களானறிக. கடையடிக்கு நீகை ராசிக்காரி என்பதுகருத்து.

(சஉஉ) கதிர்மதி போல் என்பது பிரிந்துழுக் கூறும் பிரிவச்சத்தி லும். கன்னிதொடர் சிங்கமென்பது சிங்கம் விருவிற்கெதிர் மொழிகொ டுத்தலிலும் இராமன் என்பது பிரியேன் என்பதிலுமாம். அதுவேரேகலி யாணஞ் செய்வதில்லை என்றபடி. மன்னர் என்சொல்-நிலைசெய்கின்றவர் என்னும் சொல்லை. வளர்த்தனிர் - நிலைபெறவளரச்செய்தீர் என்றவாறு. கதிர்மதிபோலென்று தலைவி சொன்னதையும், கன்னிதொடர்சிங்கமெ ன்று யான் சொன்னதையும். இராமனென்று நீர்சொன்னதையும் நிலை பெறச்செய்து மன்னரென்றிசைத்த சொல்லை வளர்த்தீர் என்றபடி. மன் நிலைபேறு.

(சஉங.) ஆர்விட்டில் மன்றல் என்றுர் என்பது இறைவர் கூற்று. அதுவரை விடைவைத்துப் பொருள் வயிற்பிரியுங் குறிப்பு. அழுபுநா ளென்பது அப்பிரிவிற் கெல்லையை என்க. நீங்காதிருக்கவென்னுதல் - பிரிவெண்ணியழுங்கல், நெஞ்சொடுபுலத்தல் முதலியவற்றை என்க. பின் காட்டல் என்பது அவன் விடுத்தகறலை. பார்வீட்டுறங்கல்-தறையிற்படுத் தல். அஃதுடன் போக்கிடை யீட்டிற்கடுங்காலனுங்கொடு மொழியுங்கை யிகந்த காதலு முண்டாயபோது என்க. எனவே மன்றலென்று கேட்ட குறிப்பறிந்து பிரிவிற்கு மெலிந்ததையும். இப்பிரிவிரண்டினுங் காலநீடவி ருந்தியதையுந் தறைவர்க்குப் பாங்கிதெரிப்பது மொருகொள்கை என்க.

(சஉச) பொருந்திடம் இடம் பெற்றுத்தழால். அன்மை - இடமா வாய்த்தென்றல். துணை-பாங்கன். பொய்கள் - வெழுமுதலியன விருவல். விருந்து - விருந்திறைவிரும்பல். ஆயம் - கொம்பு. தப்பு அவை தோழி தலை மகடியர் கிளந்து விடுத்தல். சங்கு - வலம்புரிகேட்டவன் வரைவறியுறு த்தல். தேர் அவன்புறநோக்கிக் கவன்றாற்றல். நீ என்பது பாங்கியை. அவர் என்பது தலைவரை. நான் என்பது தலைவியை. இவ்வளவையுங் கூட்டி வித்தமருந்துசுவாமி என்றுளென்க. இயற்கைப் புணர்ச்சியாதியாகவரை விறுதிக்குச் சகாயமான பொருள் களிவை. எனவே இயற்கைப்புணர்ச் சிக்கிடம் பெற்றுத்தழுவுதலான் மகிழ்வு. பாங்கற்கூட்டத்துக்குப் பாங்க ருன் மகிழ்வு. பாங்கிமதியுடன் பாட்டிற்கு இறைவன் வார்த்தையான் மகிழ்வு, பாங்கியிற் கூட்டமுதலான வற்றிற்கு விருந்திறை விரும்பலான் மகிழ்வு, இரவுக்குறிமுதலான வற்றிற்குக்கொம்பு. தப்புக்குறிக்குந்தோழி. தலை மகள் துயர்கிளந்து விடுத்தலான் மகிழ்வு; வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல் முதலானவற்றிற்கு வலம் புரிகேட்ட வன்வரைவ றிவுறுத்தலான் மகிழ்வு, உடன்போக்கு முதலானவற்றிற்கு அவன் புற நோக்கிக் கவன்றாற்றலான் மகிழ்வு. அஃதினி மேலந்தணர் சான்றோரை முன்னிடுவோமென்ற மகிழ்வு.மற்றைய வெளிப்படையானதாலறிக.

(சஉரு) இவள் பாவைஎன்பது கண்ணாடிமண்டபத்தில் மறைந்து நின்ற தலைவிநிழற் பாவையை. கனவினு நீங்கிலள் என்பது கனவு நலிபுரைத்தலை.

(சஉசு) கா - காட்டுவளத்து. விளைவு - நாட்டுவளத்து. வரவு - பல தேயம், கடல் வியாபார முதலியவற்றின் பொருள் வரவு. கொடை - இரு பரிசாதகக்கொடை. கதித்த - மிகுந்தன. தேவும் மயில் வெற்புமாயினரே

என்பது இருவரும் விட்டு நீங்காததற்கும், அருளுக்கும், பெருமைக்கும் குறித்துரைத்ததென்க.

(சஉஎ) விண்பார்த்தல் - வான்வீறடக்கவெழுதல், பண்பார்த்து ஒளிக்குஞ்சொல் என்பது இசை நிகராவோமாவென்று பார்த்து யாழ் முதலியவற்றிலொளித்தலை.

கண்பார்த்தல் - விருந்துக்குறிப்பு. கைபார்த்தல் - கறியுண் குறிப்பு. சொற்காணுமை - கேளாது படைத்தல்.

(சஉஅ) காலை தனிலெழுதல் காணுமலின் புறுதல் மாலை முழுகி மனையடைதல் - சாலவேயுற்றுேடாடுண்டலுல கோம்பலிவ்வைந்துங் கற்றுேயோ காக்கைக்குணம். என்னுமிக்குணங்களைத் தலைவிக்கு யாவர் பயிற்றினுரென்பது கருத்து. உலகோம்பல் சகுனங்காட்டலாமெலன்க.

(சஉகூ) நம்மனை வாழ்க்கையினுமென்பது நம்முடைய குரவர், நற்றுய், செவிலி, வீடு, செல்வம், இவ்வைந்தினு மிறைவ, னிறைவி, பாங்கி, வீடு, செல்வமதிகமென்றபடி. அல்லும் பகலுந் துயிலில்லை என்பது பகற்காலம்இல்வாழ்க்கை மிகுதியாற்றலைவன் பூசைக்காவன செய்தலும். கோவிற் சிறப்பு விசாரணையும் கொடுப்பதும், அனுப்புவதும், விருந்திடுவதும், பாக்கிலையளிப்பதும். சந்தனம்பூசுவதும். காவியபுராணங் கேட்பதும், இராக்காலம் மஞ்சச்சிறப்பு, பாக்கிலையமைத்தல், களபச்சேர்வை, அறுசுவையுண்டி, ஆடல்பார்த்தல், வீணுகானம் பண்ணல், மாலையார்த்தல், மணியணி யொப்பனை, கூந்தல் முடித்தல், ஆடையுடுத்தல், பனிநீர் தோய்தல், புணர்தல், முதலியவற்றுனுமென்க. கம் - தலை. அம்மனை - தாய் போலுந்தலைவி.

(சஙO) ஒதாதிருந்திலர் வேந்தர் அக்காலுமுற நினைப்பார் என்பது கல்வியிற்பிரிவினுந் தலைவன்றலைவியை நினைந்து புலம்பும் என்றபடி. தூதுந் துணையுமேதுவாய்ச் சென்றேர் புலம்புவது மரபாவிருக்கப் புலம்பாமல் வந்தும்விடுவர் தலைவர். கல்வியிற் பிரிவு மூன்றுண்டாகவும், தூதுந்துணையுமேதுவாகிய பிரிவொவ்வோராண்டாகவுமிருந்தும் வேதாந்தியர் மனம்போலக்கணவனையே சிந்தைசெய்திருந்தாளென்பது கருத்து. வேதாந்தியர் மனம் - நிட்களப்பற்று.

(சஙக) மால் - ஆசை. அன்பில் ஆயிழையார் - பரத்தையர். பணிமேலிருத்தல் - பரத்தையர் சொற்படி நடத்தல். திருமாலாதி சேடன் மேலிருந்து அழகிய கருடனை விட்டபாவத்தை யாற்றுமோ வென்பது மற்றெரு பொருள். இங்குப், பணி - ஆதிசேடன்.

(சஙஉ) கலந்தவுயிர் - இறைவன். கூடு - தலைவி. சூட்டு - உச்சிக்கொண்டை. வீட்டில் - முத்தியில், வீட்டில். பரத்தை - பெருந்துறவை, பரத்தையரை.

(சஙரு) காணமலரணை நீ என்பது பொன்போலுந் தாமரை மலரிலிருக்குமிலக்குமியையனைய நீ. என்றபடி. மைக்கண்ணும், கொங்கையுங்காண வென்பது அவற்றின் சோர்வை என்க.

(சஙச) வண்டு கழித்த மலர் - பழம் பூ. எனவே பழமையாகிய நம்மை நீங்கிப்புதுமையாகிய நடையையுற்றுரெனலாயிற்று. உண்டு கழி

ந்த கலம் - எச்சிற்கிண்ணி. பலருங் கண்டுகெடுத்த குடத்தைக் கேடிக் குய வன் சூளையைக்காத்தார் என்பது மற்றொரு பொருள்.

(சஙரு) சுவாமி யொருவராக விருந்தும் நான்கு வகுப்பாருக்கும் பதவி நாலாகக்கொடுப்பாரென்பதும். யானை கரும்பைத் தின்றது ஓலையைத்தின்னுந் தேசத்திறென்பதும். உள்ளுறையுவமம். வேண்டினர் பாற்போறலும் எனக்கூட்டுக.

(சஙசா) திருட்டினர் - தலைவர். சேடிமின்னாரிருட்டு - பாங்கியர் கூந்தல். செவ்வலரி - செவ்வலரிப்பூ. இருட்டிற் பலர் காணச்சூரிய னெழுந்ததென்பது மற்றொரு பொருள். அலரி - சூரியன்.

(சஙஎ) பாய் காய்க்குந்தோளுடைமாயன் என்பது கணிகண்ணன் போகின்றான் என்னும் வெண்பாவானறிக. பிள்ளைக் காய்காய்க்கும்பூ - மாதர்பூப்பு. கனிகாய்க்கக்காட்டல் - கன்னியிடந்தெரித்தல். காளையை யுண்டாக்குமலரைக்கனி காய்த்ததென்பது மற்றொருபொருள். பிள்ளைக் காய் - பிஞ்சுக்காய்.

(சஙஅ) கோ - கண். நாண் எறிந்து - வெட்கத்தை விட்டு. பூவேற்றது என்பது செவ்வரிப்பூச்சூடிக்கொண்டிருப்பதை. அன்பு அருள்வான். என்பது தலைவனை. மலரை யேற்றது வானைமருவவெனவும் துப்பாக்கி மேல் நாணியை எறிந்து எனவும் வேறு பொருள் படுமாறுணர்க. குழல் - துப்பாக்கி. நாண் - நாணி.

(சஙகூ) பரத்தையிச்சித்தவர் - பரத்தையரையிச்சித்தவர். வீடு - இச்சித்தவர்வீடு. பான்மை - தன்மை. மலையென்பதுநகரம். மடமொடித்தல் - வேண்டும் பொருள் கோடல். சுனையாடல் - பரத்தையரைச்சேர்தல். தன்பிடி என்பது தலைவியை. பான்மை தப்பிவரத்தையுதவினம் என்பது பரத்தையிச் சித்தவரை. வீட்டையடையச்செய்தோம் என்றபடி. இங்குப் பரம் என்பது பரம்பொருளை என்க.

(சச0) நான்கு என்பது புருடார்த்தங்களை வல்லிபூத்தது என்பது தலைவி பூப்புற்றதையென்க. தூர்த்தர் - தாசியர். பன்னிருநாள் என்பது கூறிய பின்னீராறு நாளுங்கருவயிற்றூறுங்காலமாகலான் என்க. வடு - பழிமொழி. வடுநீங்கிப் புறநகர்நீங்கி வந்தார் என்க. வல்லி பூத்தது. வடுநீங்கி என்பன வேறு பொருள்.

(சசக) சேய் - பிள்ளை. மன்னர்க்குச் சகசமதே என்பது அறவை கைப் பிரிவுமரசர்க்குரியதென்றபடி.

(சசங) நிரம்பப்பசித்தவர் - சோறு கிடையாமை யான் மிகப்பசித்தவர். தண்ணீர்த்தாகமுற்றவர் கொள்கையென்பது கொடுத்ததுபோதுமென்று கொள்ளுவது போலப்புணர்ந்ததுபோதுமென்றிருத்தல். கழைக்கரும்பு கட்டாகக்கிடந்தா லெறும்பு தானே வரும் என்பது.

(சசச) அன்றில் பிரியாத தன்மையுடையது. ஆடுகருக்கொண்டாற் கருவுயிர்த்தபின்பே கூடுந்தகைய தாகையாலிங்ஙனங்கூறினார். ஒருத்தி என்பது தலைவியை. கன்றிவெகுண்டு என்பது தலைவன் பரத்தையிற் செல்லும்போது தடுத்தமையாலென்க. தகர்வாராது மாறினும் பின்புவருமென்னுங் கருத்தாற்றங்குமென்பது கருத்தாலாட்டையன்னர் என்ற

ரெனினுமாம். வார்கோட்டுவயத்தகர் வாராது மாறினுங் குறுமயிர்ப் புருவையாசையில் வைகும் என்பது ஐங்குறு நூறு உ௩அ.

(சசரு) இருவர் என்பது தலைவனையும், பரத்தையையும் என்க. முன் செயல் என்பது தனித்துப்புலம்ப விட்டுப்பிரிந்த செய்கையை.

(சசசு) பிந்தார் - தாமதியார். எனவே முற்பட்டுச்சென்றார் என்றபடி. தந்தாவளம் - யானை. எந்தோ - என்னோ.

(சசஎ) வாராது வந்த என்பது கிடைத்தற் கருமையாய்க்கிடைத்த என்றபடி. மறிமான் - தலைவி. மனையயலாள் - காமக்கிழத்தி. தாராத வானை என்பது பிறரிடஞ்சேரவிடப்பெறாத தலைவனை என்க. நம் சாதியினுள் என்பது காதற்பரத்தையை. பாராள் - பாருக்குரியவளாவாள். நம்வாழ்க்கையின் பண்பையன்றோ - நமது வாழ்க்கையின்பண்பல்லவா? ... - சாரியை.

(சசஅ) தீராதநெஞ்சு - துன்ப நீங்காத மனம். எங்களுக்கோ ... அவர் தங்களுக்கோவென்பது தெய்வத்துணையெல்லாருக்கும் பொது வென்றபடி.

(சசக) நின்றகு நுண்ணிடையார் என்பது கற்புடைய மகளிரை என்க. குணமாறுவன. அன்னே நயவுமடியாள் பணியுமலர்ப் பொன்னினழுகும் புவிப்பொறையும் - வன்னமுலே. வேசை புணர்ப்பும் விறன் மந்திரிமதியும் பேசிலிவை யுடையாள் பெண் என்பனவாம். ஒன்று மறிவினர் என்றது நீ சொல்லிக்கொடுக்கக் காண முதலாயின செய்வாராகிய, காமக்கிழத்தி, பின்முறைவதுவைக்கிழத்தி, காதற்பரத்தையர் சுளை யென்க.

(சரு௦) வெஞ்சொற்பகர்தல் - தாசிவிடயமாகாதென்று சொன்ன வரை வின்மகளிரென்னுந் திருவள்ளுவர்திகாரத்தை. பொன்னனையாள், பாவை நாச்சியார், என்னுமிருவர் பெருமையும் விளங்கிக் கிடந்தமை யறிக. குறள் - குறுக்கம்.

(சருக) தொடியார் என்பது பாங்கியை. பழமலர் - செம்மல்.

## செம்மல் - பிள்ளை.

(சருஉ) தாயிலுமன்பர் - குமாரக்கடவுள். மான் - தலைவி. சேயினனென்றனிர் - உனக்காண்பிள்ளையுண்டென்று சொன்னீர். அணிமை - சமீபம். தூரத்திலுள்ளவனென்று சொன்னீர் சமீபத்தில் வந்துசேர்ந்தேனென்பது மற்றொரு பொருள்.

(சருரு) தையிலர் என்பது பரத்தையரை. பொருள் வார்த்தைக்கு ஆவிசுமவார் என்பது பொருள்வயிற்பிரிவு என்னும் வார்த்தை கேட்பினு முயிர்விடத்துணியுந்தலைவியை என்க. பெற்றபாலால் - கருவுயிர்த்தவியல்பால். கிடைத்த பாலாநெய்யாடிக்குளித்தாள் என்பது மற்றொருபொருள்.

(சருச) அனைக்குமுன்னே - தாய்க்கு (உமைக்கு) நேரில். தந்தை - சிவபெருமான். யார்க்குமுன்னே - எவர்க்கு நேரில். வான்கன்று - பெருமையையுடைய பிள்ளை. பாற்குடம் பாலூறுமுலை. ஆன்கன்றுதூக்கிப்

